## நாவல் - க. வே. நரசையர் இயற்றியது

" இந்த நவீன நற்போத நாவல் செந்தமிழ் நடையில் எழுதப பெற்று ஸாதாரணமான கலவியறிவு படைத்த சிறுவர் சிறுமிகளுக்கும் எளிதில் பொருள் விளஙகக்கூடியதாயும், வாசிப்போர்க்கு நல்லறிவு நன்மார்க்கங்களைப் போதிப்பதாயும், தமது ஓய்வுகாலங்களைப் பயன் படச் செலுத்தக் கருதுவோர்க்குத் தாகுந்ததாயும் இருக்கின்றது.

இப்புஸ்தகம் சென்னைக் கவர்ன்மெண்டுப் பல ராஜாங்க உத்தியோகஸ்தர்களாலும், அநேக வித்துவான்களாலும், நாட்டுச் சீமான்கள் பல்லோராலும், பாடசாலைத் தலைமை உபாத்தியாயர்களாலும் நற்சாக்ஷி பத்திரங்கள் மூலமாய்க் கொண்டாடப்பட்டுப் பாடசாலை மாணுக்கர்க்குப் பாடபுஸ்தகமாகத் துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

இதில் அடங்கியிருககும விஷயஙகளிற் சிலவாவன:—

1. செல்வமும வறுமையும்: அவற்றின் நன்மைதீமைகளும் 2. நல்லார் நட்பும தீயார் தொடர்பும்: அவற்றின் பெருமை சிறுமைகளும் 3. பெண்கள் கல்வியும் கற்பின் நிலைமையும்: அவற்றின் ஏற்றமும் 4. இல்லறமும் துறவறமும்: அவறறின் முறைகளும் 5. நற்குணமும் நன்னடக்கையும்: அவற்றின் சிறபபும் 6. பொறுமையும சீற்றமும்: அவற்றின் உயர்விழிவுகளும் 7. காதல், களவாடல், கள்ளுண்டல், பொய்மமொழிதல், ஈதல்மறுத்தல் முதலிய துர்க்குணங்களும்: அவறறின் கேடுகளும் 8. மாணுக்கரும் நாட்டினரும்: அவர்களின் கடமை உரிமைகளும 9. அரசிறையும் ராஜாபிமானமும்: அவற்றின் அபிவிருத்திக் கேற்ற ஒழுக்கங்களும் 10. ஐங்குரவர் பகதியும் அதன் மேன்மையும்.

மேற்கூறியவை யொழிந்த இன்னும் பற்பல விதமான நற்போதனை விஷயங்களைப் பற்றிய உபந்யாஸங்கள் புஸ்தகத்தின் இடையிடையே சமயத்திற் கேற்றபடி அடங்கியுள்ளன: கதாஸந்தர்ப்பத்திற் கேற்ப ஆங்காங்குச் சேர்த்துள்ள நற்போதனை விஷயங்களின் உண்மைகளை யெடுத்துக்காட்டி வாசிப்போர்க்கு நன்னெறிகளை வறபுறுத்-

# யுத்தமும் ஆங்கிலேய ராஜ்யமும்

இஃது

தாமல் - க. வே. நரசையர்

"மரகதமணி" "ராஜவிசுவாஸம்" நூலாசிரியர்

இயற்றியது

முன் சென்னை ஹைகோர்ட் ஆக்டிங் சீப் ஜட்ஜும்

ஸர்வ கலாசாலை வைஸ் சான்ஸலருமான

திவான் பஹதூர்

டாக்டர் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள், ஸி. ஐ. ஈ.

அநுக்ரஹித்த உபோத்காதம் அமையப்பெற்றது

இரண்டாம் பதிப்பு : பரிசோதிக்கப்பட்டது

1915௵ ஜூன்௴ 12௳ ஜீ. ஓ. 1314ன்படி

கிராமவாசிகளது நன்மையின் பொருட்டு

ஜில்லாக்களில் விநியோகிப்பதற்காகச்

சென்னைக் கவர்ன்மெண்டார்க்கு

உதவப்பட்டது

*" Kings are like stars—they rise and set—they have*
*The worship of the world, but no repose "*

**SHELLEY**

*Not all the water in the rough rude sea*
*Can wash the balm off from an anointed King*

**SHAKESPEARE**

---

PUBLISHED BY

**P. V. SUNDARARAMAIYA**

9, Avadhanam Ramaswami Aiyar Street
Washermenpet, MADRAS

---

FIRST EDITION 1,000 COPIES FEBRUARY 1915

SECOND EDITION 6,000 COPIES JUNE 1915



PRINTED AT
THE GUARDIAN PRESS, SECOND LINE BEACH, MADRAS

# நூன்முகம்

தற்சமயம் ஐரோப்பாவில் நடக்கும் மகா யுத்தம் போன்றது இதுகாறும் நடந்திருப்பதாக யாம் அறிகிலேம். யுத்த முயற்சியாய்ப் பல்லாண்டுகளாய்ப் பற்பல வகைத்த யுத்த கருவிகள் தயாராக்கப்பட்டு இப்போது அரங்கேற்றப்பட்டு வரம்பின்றிக் கஷ்டநஷ்டங்களை யுண்டாக்குகின்றன. இதுவரையிலும் யுத்தங்கள் நிலத்திலோ, நீரிலோ, அன்றி இவ்விரிடங்களிலுமோ நடந்துவந்தன. இப்போதிய ஐரோப்பிய யுத்தமோ தோற்றத்திற்கு மறைந்து நீர் நில அடிப்பாகங்களாகிய சுரங்கங்களிலும் சூனியமாகிய ஆகாயத்திலும் நிகழ்கின்றது. உலகத்து நாலுதேசத்து வீரரும் நம்மிந்திய சிப்பாய்களும் ஏற்றத்தாழ்வென்பதின்றி ஐரோப்பிய வீரருடன் சமமாய் நின்று பகைவருடன் சமராடுகின்றனர். இவர்கள் இறுதியில் ஜயலக்ஷ்மியுடன் திரும்புவார்களென்றே யாம் சந்தேகமறத் துணிகின்றனம்.

விஷயமறிந்துள்ளார் நமது அரசாங்கத்தாரே வெற்றி பெறுவது திண்ணமெனும் துணிவுடனிருக்கின்றனர். ஏனையோர் சிலர் நமது ஆங்கிலேயவரசினரின் பிரபல ஆயுதத்திய பலங்களை யுணராராய் இவ்யுத்தத்தின் முடிவு எனனவாகுமோ வென்று ஐயுறுகின்றனர்: வேறு சிலர் துருக்கிதேசம் ஜெர்மனியுடன் சேர்ந்துவிட்டதனால் இந்தியாவிலுள்ள மகம்மதியர் ஒருங்குகூடிக் கலகம் தொடுத்து அல்லல் விளைக்க நாடுகின்றனரென்று பயமுறுகின்றனர்: கீழ்ச்சமுத்திரத்திற் சிலநாளாயச் சிற்சிறு துன்பங்களை விளைவித்துவந்த எம்டன் என்னும் ஜெர்மனிய யுத்தக் கப்பலை நாசப்படுத்துவதில் நேர்ந்த சிறிது தயக்கத்தை யெண்ணியும், அக்கப்பல் தலைவரின் தந்திர சாமர்த்தியங்களைப் பார்த்தும், அதனால் விளைத்த நஷ்டங்களைக் கருதியும், நமது ராஜாங்கத்தார் ஜெர்மனியரை வென்று வெல்லுதல் அரிதா மென்றும் மற்றுஞ் சிலர் நினைத்துவிட்டனர். அது பெருந் தவறே. இச்சந்தர்ப்பத்தில் நமது அரசாங்கத்தார் ஜெர்மனியரைத் தோற்கடிக்க வல்லவரோ வென்பதையும், இந்தியாவிலுள்ள மகம்மதிய ரனைவரும் ஆங்கிலேய வரசின் உற்ற குடிகளே யென்பதையும் நன்கு விளக்குதல் பான்மை யாயிற்று.

யுத்த விஷயத்தைப்பற்றி வரைதல் சரித்திரக்காரரின் உரிமையே யெனினும், எனது சிநேகிதர் பலரின் வேண்டுகோளினாலும், ஐரோப்பிய சங்கத்தார் இந்திய கவர்ன்மெண்டார்க்கு எடுத்துக்காட்டிய யோசனைகளை யநுசரித்தும், இம்மகா விஷயத்தைப்பற்றி என் சிற்றறிவிற் கூடியமட்டும் சுருக்கமாய் விளக்கவைக்கப் புக்கினேன். இதில் ஆங்கிலேயர் நிகழும் யுத்தத்தில் தலையிட்டுக்கொண்டது தருமமும் சொன்மொழியும் நிலைநாட்டுவான் வேண்டியே யென்பதையும், ஆங்கிலேயரது படை துணை வலிமைகளையும், இந்தியரின் ராஜவிசுவாசத்தையும், யுத்தத்திற்குச்சென்ற நம்மிந்தியர்க்கு ஐரோப்பாவிற் கிடைத்த

ஸன்மான மரியாதைகளையும், ஆங்கிலேயரே ஜயமடைவ ரென்றும் எதிர்க்கக்கூடியார் கட்டாயம் தோல்வியடைவ ரென்றும், துணிதற்கான அத்தாட்சிகளையும், ஆங்கிலேய துரைத்தனத்தின் நன்மைகளையும் சங்கிரகமாய்க் கூறியுளன்: குழப்பமாயிருக்கு மிச்சமயம் குடிகளாகிய நாம் ராஜாங்கத்தாரினிடம் எவ்வாறு நடந்துகொள்ளுதல் முறைமை யென்பதை விளக்குமாறு "**நமது கடமை**" யென்று தலைப்பிட்டு ஓர் நற்போத அத்தியாயமும் (26-வது) சேர்த்திருக்கின்றனன். யுத்தமென்னின் வெற்றிதோல்விகள் ஸஹஜமே யென்பதை யறிந்து யாவரும் கலங்காது தைரியத்துடன் கெடுதி தவறாமல் துரைத்தனத்தார்க்கு உதவிபுரிவது மிகவும் ஆவசியகமானது.

இச் சிறு நூலினை ஆமோதித்து மனமுவந்து இதனைச் சமர்ப்பணஞ்செய்ததை ஏற்றுக்கொண்ட மஹா கனம் பொருந்திய **சென்னை கவர்னர் பெண்ட்லண்ட் பிரபு** அவர்களுக்கும், அன்புடன் ஆதரித்து நூலிற்கு உபோத்காதம் எழுதியருளிய முன் சென்னை ஹைகோர்ட் ஆக்டிங் சீப் ஜட்ஜும் ஸர்வ கலாசாலை வைஸ் சான்ஸலருமான ம-ள-ள-ஸ்ரீ **திவான் பஹதூர் டாக்டர் ஸர். எஸ். ஸுப்பிரமணிய ஐயரவர்களுக்கும்**, இதனை வெளியிடுதற்குச் சகாயம் செய்த எனது நேசர் பலர்க்கும் நான் என்றும் குன்றா நன்றியுடையவனா யிருக்கின்றேன். இச்சிறுபுத்தகத்திலுள்ள விஷயங்கள் முற்றும் நன்மை பயக்கத்தக்கவையே யென்பது தேர்ந்து இதனைக் கிராமவாஸிகள் படித்தறிந்து நன்மையடைய வேண்டுமென்னு கருத்துடன் ஆங்காங்கு விநியோகித்தற்காக நமது காருண்ய கவர்ன்மெண்டார் மிக்க பரிவுடன் **1915**-வருஷம் ஏப்ரல் **12**உ ஜி. ஓ. **1314** அநுசரித்து இப்புத்தகத்தைத் தமக்குத் தரும்படி எனக்கு ஆக்ஞாபித்து ஏற்றுக்கொண்டு மேம்படுத்தியதற்காக யான் எக்காலத்தும் கவர்ன்மெண்டுக்கு நன்றியறிதலும் மிக்குடையவனா யிருக்கின்றேன். யுத்த விஷயங்கள் சமாசார பத்திரிகைகளில் ஒன்றற்கொன்று மாறுபட்டு வெளியாகின்றன வாதலின், இதிற் சில விஷயங்கள் மாறியிருக்கச் சிலர் காணலாம். அத்தகையவற்றிற் பெரும்பான்மையைத் தக்க ஆதாரங்களைக் கொண்டு பரிசோதித்து இரண்டாவதாகிய இப்பதிப்பினை வெளியிட்டுளேனாதலின், வாசிப்போர் இன்னும் குறைகளைக் காணினும் அவற்றைக் கருதாமல் விஷயங்களின் தத்துவத்தை யுன்னி மகிழுவார்களென்று மிக்க வணக்கமாய் வேண்டுகின்றனன்.

ஸூர்ய விலாஸம்
9, அவதானம் ராமஸ்வாமி ஐயர் தெரு
பழைய வண்ணாரப்பேட்டை
சென்னை, 16-6-1915

**தா-க. வே. நரசையர்**

### ஸ்ரீ சென்னை ஹைகோர்ட் ஆக்டிங் சீப் ஜட்ஜும்
ஸர்வ கலாசாலை வைஸ் சான்ஸெலருமான

### திவான் பஹதூர்

## டாக்டர் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள், ஸி.ஐ.இ.

அநுக்ரஹித்த

# உபோத்காதம்

" இப்பொழுது நடந்துவரும் கொடிய யுத்த வரலாற்றைப் பொதுஜனங்களுக்குத் தெளிவாய் எடுத்துக்காட்டும் உபாயமான கருத்துடன் **ஞா - க. வே. நாலைச்யர்** எழுதியிருக்கும் இச்சிறிய புஸ்தகம் இச்சமயம் மிகவும் ஆவசியகமானதென்று சொல்லவேண்டுமென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. இஃது ஓர் பெரிய லோகோபகாரமே.

அநேக விதங்களினால் அவர் எடுத்துக்காட்டியிருக்கும் வண்ணம் இப்பொழுது அரசாட்சியாருக்கு விரோதமாயச் சிலர் அறிவீனத்தின் பயனாய்ப் பரப்பும் வீண்கதைகளினால் நாட்டிற்குப் பலவிதக் கெடுதிகளுண்டாகாதிருக்கும்பொருட்டு வேண்டிய உபாயத்தை ஒவ்வொருவரும் தேடவேண்டியது பெருங் கடமையே. அக்கடமையை நிறைவேற்றுவதற்கு இப்படிப்பட்ட புஸ்தகம் மிகவும் உபயோகமான கருவி.

ராஜாங்கத்தார்க்கும் குடிகட்கும் நன்மை யுண்டாக்கக்கூடிய இப்புஸ்தகத்தை மாணவர் உட்படப் பொதுஜனங்கள் யாவரும் கருத்துடன் படித்து உண்மையைத் தெரிந்து உலகத்திற்கும் உயர்கோனுக்கும் க்ஷேமமுண்டாகும்படி சிறியோர் பெரியோர் யாவரும் முயலவேண்டுமென்பது என்னுடைய விருப்பம். 'தருமம் தலை காக்கும்' என்ற முதுமொழி இச்சமயத்தில் எவ்விதமும் தவறாது.

பரமேச்வரனுடைய கிருபையால் நமது அரசாங்கத்தாரும் அவரது கூட்டு அரசாட்சிகளும் நிச்சயமாய் இந்தப் பெரிய யுத்தத்தில் வெல்லவேண்டுமென்று அநுதினமும் யாவரும் கடவுளைப் பிரார்த்திப்போமாக! "

---

---

THE PRIVATE SECRETARY TO

HIS EXCELLENCY THE RIGHT HONOURABLE

BARON HARDINGE OF PENHURST,

G.C.B., G.M.S.I.,G.C.M.B., G.M.I. E., G.C.V.O., I.S.O.,

*Viceroy and Governor General of India.*

I am desired to convey to you His Excellency the Viceroy's thanks for your pamphlet entitled "**The War and the British Raj** "...His Excellency much appreciates your desire to place before the public a clear account of events connected with the present War and the part India is playing in it.

THE PRIVATE SECRETARY TO

HIS EXCELLENCY THE RIGHT HONOURABLE

JOHN SINCLAIR BARON PENTLAND

OF LYTH, P.C., G.C.I.E., *Governor of Madras.*

I am to say that the book " **The War and the British Raj** " appears to His Excellency to be likely to serve a very useful purpose at the present time.

THE PRIVATE SECRETARY TO

HIS EXCELLENCY THE HONOURABLE

THOMAS DAVID BARON CARMICHAEL

OF SKIRLING, G.C.I.E., K.C.M.G., *Governor of Bengal*

I am directed by His Excellency to thank you for your book entitled " **The War and the British Raj** ". His Excellency feels sure that the knowledge which the little book will spread of the facts concerning the war and the part India is taking in it will all be for the good of India.

THE HON'BLE SIR S. P. SINHA, *Barrister-at-law,*
*Formerly Executive Council Member to*
*H. E. The Viceroy, Calcutta.*

I have read it (**"The War and the British Raj"**) with pleasure and it seems to me that you give a very good account of the War itself and the part India is taking in it.

THE HON'BLE
SIR C. SANKARAN NAIR, B.A., B.L., C.I.E., F.M.U.,
*Executive Council Member to H. E. The Viceroy, Delhi.*

I have read your pamphlet **" The War and the British Raj "**. I think it will be very useful to the Students and generally to those Indians who take any interest in the subject.

THE HON'BLE SIR P. S. SIVASWAMI AIYAR Avl.,
B.A., B.L., C.S.I., C.I.E., F.M.U.,
*Executive Council Member to H. E. The Governor of Madras.*

I think that it (**" The War and the British Raj "**) is a very timely and useful publication. It is quite fit to be placed in the hands of the Masses and Students.

SIR NARAYAN G. CHANDAVARKAR, B.A., LL.B.,
*Retired Judge, High Court, Bombay.*

I have read with interest your account of **" The War and the British Raj "**...and have much pleasure in saying that you have made it readable by men, telling the facts clearly and with conciseness and pointing out the reasons which have led England to enter on the War in defence of liberty and smaller nationalities. It is a very good account and ought to be useful to the Masses.

DEWAN BAHADUR K. KRISHNASWAMI RAO GARU,
C.I.E., *Retired Dewan of Travancore.*

I have read with very great pleasure Mr. T. K. V. Narasiah's...pamphlet on "**The War and the British Raj**". It is written in easy and classical style, contains much useful information and is best calculated to remove misconceptions regarding the War and the might of the Nations at War. The chapter on "**Duty**" is excellent and deserves careful study. I wish success to Mr. Narasiah in his patriotic and loyal service to the Empire

THE HON'BLE DEWAN BAHADUR
JUSTICE T. SADASIVA AIYAR AVL., B.A., M.L.,
*Judge, High Court, Madras.*

Mr. T. K. V. Narasiah's book entitled "**The War and the British Raj**" seems to me to be issued at a very opportune moment. I went carefully through the 26th chapter, which is headed "**Our Duty**", and its sentiments and precepts are fully in accordance with the Hindu Shastras. Translations......into vernaculars and the distribution of the copies as vernacular tracts ought to be of very great usefulness both to Government and to the Masses.

THE HON'BLE
MR JUSTICE T. V. SESHAGIRI AIYAR, B.A., B.L., F.M.U,
*Judge, High Court, Madras.*

I have looked through your pamphlet "**The War and the British Raj.**" It gives an accurate account of the Great War that is going on. I read with much interest the translation... Such a publication containing all the latest and available information on the subject must be welcome...

THE HON'BLE DEWAN BAHADUR
JUSTICE C.V. KUMARASWAMI SASTRIAR AVL.,
B.A., B.L., *Judge, High Court, Madras.*

Mr. T. K. V. Narasiah's book "**The War and the British Raj**" contains a lot of useful information about the earlier stages of the War and the Indian Chiefs who have gallantly placed their resources at the disposal of the Empire. Thoroughly loyal in spirit, I am sure it will be appreciated by the public. The chapters on "**England's Work in India**" and "**Our Duty**" deserve to be widely read. The book might be read with profit and pleasure by the Student population.

THE HON'BLE MR. JUSTICE J. H. BAKEWELL, LL.B.,
*Barrister-at-law, Judge, High Court, Madras.*

I think that your book on "**The War and the British Raj**" will be of great use. The great task before us and the manner in which India and the whole Empire have shown their determination to achieve victory for the King Emperor are well and clearly described. The book should do much to enlighten the ordinary citizen as to the vastness of the struggle and the need that each of us should do what he can for our country.

A. T. FORBES ESQ., I.C.S.,
*British Resident in Travancore and Cochin.*

With reference to the book on "**The War and the British Raj**" I write to say that in my opinion its intention is excellent and it should serve a useful purpose by enabling the public for whom it is intended to understand clearly the events which have led up to the War.

DEWAN BAHADUR
S. RM. M. RAMASWAMI CHETTIAR AVL.,
*President of the Taluk Board and Chairman of The Municipal Council, Chidambaram.*

I have read with much pleasure and interest Mr. T. K. V. Narasiah's book, "**The War and the British Raj.**" It gives a short but accurate account of the Great European War that is going on. Mr. Narasiah has taken great pains to collect materials for this book and the informations given in it are well arranged. The chapter on "**Our Duty**" is simply excellent.........This publication is most opportune and very useful to the Masses as well as to the Teachers of the Elementary Schools.

DEWAN BAHADUR M. ADINARAYANA IYAH GARU,
*Retired Deputy Commissioner, Revenue Settlement, Madras.*

......I congratulate him (Mr. T. K. V. Narasiah) heartily on the idea which inspired him to write this present book. The subject of it is the present "**War and the British Raj**". The time is opportune for the issue of such a book and he has done a patriotic service by conveying to the large mass of the public in their own vernaculars a lot of useful and correct information as to the benefits conferred by the British Government and the duties which the people of this country owe for the maintenance of British supremacy. I heartily welcome the book for the good service which I am sure it will render and wish for it and the author the success they deserve.

THE HON'BLE
RAJA K. R. V. KRISHNA RAU BAHADUR GARU, B.A.,
*Zamindar of Polavaram, Cocanada.*

Mr. T. K. V. Narasiah's book "**The War and the British Raj**" is an opportune publication. The author has very lucidly explained from the very beginning the causes of the War and the ambition of Germany. I am of opinion that this little book explains in a lucid manner the entire history of the present European War, the causes which led to it, and the duty of India towards the British Empire. A publication of this kind at this juncture is indeed a very welcome one. I am indeed very glad that the author has brought out this publication and intends giving Tamil and Telugu versions for the advantage of Telugu and Tamil reading public. I hope that these books will be generally read by a large number of readers and will tend to dispel the misapprehension of the ignorant and ill-informed public including the Masses. I congratulate the author on his publication.

KHAN BAHADUR
MUHAMMAD KHADER NAVAZ KHAN SAHIB
BAHADUR,
*Retired Collector of Nellore*

I have perused your book "**The War and the British Raj**" with great interest and congratulate you on the way you have dealt with the subject. It presents in short space all that one should like to know about the War and I certainly consider it is well fit to be placed in the hands of the Masses and the Students.

M. R. Ry.

C. V. VISVANATHA SASTRIAR Avl., B.A.,B.L.,

*Sub-Judge, Kumbakonam.*

" **The War and the British Raj**" is a nice little pamphlet which affords very interesting reading. The author has taken great pains to collect all the important materials relating to each country at War and has strung them up in the best way possible. I hope the book is read by every Student of the High School and College classes. This will dispel illusions from the minds of many of them as to the real cause of the War and the strength of the Allies.

J. C. ROLLO Esq., M.A.,

*Principal, Pachaiyappa's College, Madras.*

Mr. T. K. V. Narasiah's.........book on " **The War and the British Raj** " seems well adapted to its purpose. It gives, in compact form, a considerable amount of information well arranged. It will, I have no doubt, be of great use to the Masses, since its information is not readily accessible to them, and Teachers in schools also may find it a serviceable instrument.

Rev. E. MONTEITH MACPHAIL, M.A., B.D., F.M.U.,

*Professor of History, Madras Christian College.*

I have looked through your book on "**The War**" with special attention to the chapter on " **Our Duty.**" I think your general idea is good and that the chapter on " **Our Duty** " contains some very excellent advice as to the ways in which loyal citizens may help in the present crisis......

M. S. H. THOMPSON Esq., B.A., A.C.P.,

*Ag. Assistant Inspector of European and Training Schools, Madras.*

**"The War and the British Raj":**—The book is a practical lesson on Loyalty and will be found specially useful by Elementary School-masters who are anxious to do their duty at this time by giving a series of simple lessons on the War. The matter is well arranged, the topics following in natural sequence. The exposition is simple and direct.

PROFESSOR

K. RAMANUJA CHARIAR Avl., B.A., F.M.U.,

*Pachaiyappa's College, Madras.*

.........The......... books (**" The War and the British Raj"**)are written in simple style and bring out the prominent facts in a clear light. The European Situation, the Motives of the Allies, the Moral Weakness of the Germans, and the Ungrateful Treachery of the Turks—these have been specially laid stress upon. Belgian Bravery, Russian Heroism, French Stratagem, Indian Gallantry and English Superiority, the Co-operation of our Rajas in men, money and personal service, and lastly, the Safety of Indian Trade —these are also succinctly described. The books are bound to prove an eminent success and it behoves all managements of Institutions and all householders to encourage the reading of such books by the boys and the women in their charge, so that every one of our vast nation may be patriotic and loyal not only by instinct as they are, but also after a rational understanding of the situation. ......We commend this book to the public and hope it will command wide patronage.

# அட்டவணை

| அத்தியாயம் | விஷயம் | பக்கம் |
|---|---|---|

## யுத்தத்திற் பிரவேசித்துள்ள நாட்டினரின் சைனிய விவரம்

| தேசம் | | தரைச்சைனியம் | யுத்தக் கப்பல் | கப்பல் போர்வீரர் | ரிஸேர்வ் கப்பல்வீரர் | ஆகாய யுத்தயந்திரம் |
|---|---|---|---|---|---|---|
| **நமது கக்ஷி** | | | | | | |
| க்ரேட்ப்ரிடன் (தனி) * | ... | 18,80,000 | 599 | 1,51,000 | 60,900 | 409 |
| ப்ரான்ஸ் | ... | 40 00.000 | 335 | 69,500 | 70,000 | 1,422 |
| ருஷியா | ... | 70,00 000 | 159 | 59.500 | 50,000 | 818 |
| பெல்ஜியம் | ... | 3 00 000 | ... | ... | ... | 102 |
| ஸெர்வியா | ... | 3,50,0 0 | ... | ... | ... | 60 |
| மனெடிநேக்ரோ | ... | 40.000 | ... | ... | ... | ... |
| இட்டலி | ... | 20,00,0 0 | 161 | 40,000 | 40,000 | 159 |
| ஜப்பான் | ... | 20 00 000 | 189 | 51 000 | 50,000 | 180 |
| **எதிர்க்கக்ஷி** | | | | | | |
| ஜெர்மனி | .. | 60,00,000 | 263 | 79,000 | 70,000 | 1,040 |
| ஆஸ்ட்ரியா | ... | 25,00,000 | 46 | 23,000 | 20,000 | 408 |
| துருக்கி | ... | 10,00,000 | 49 | 39,000 | ... | 20 |

* ஆங்கிலேயர்களால் குடியேற்றப்பட்ட மற்ற நாடுகளிலும் இந்தியாவிலும் உள்ள சைனியபலம் இங்குக் கணக்கிற் குறிக்கப்படவில்லை : அஃது ப்ரத்யேகம்.

ஓம்

கடவுள் துணை

# THE WAR AND THE BRITISH RAJ

# யுத்தமும் ஆங்கிலேய ராஜ்யமும்

## BRITISH SUPREMACY

## ஆங்கிலேய ஆதிபத்தியம்



அநாதரக்ஷகனும் ஆபத்பாந்தவனுமான ஜகதீச்வரனது கிருபாகடாக்ஷத்தினால் அநேக கோடி ஜீவராசிகளை அன்புடன் அன்னைபோற் காத்து யாவரும் ஆனந்தமடையும்படி ஆண்டுவரும் ஆங்கிலேய ராஜ்யமானது ஐரோப்பாகண்டத்து வடமேற்கு மூலையிலிருக்கின்றது. இதற்கு ப்ரிடிஷ் ஐல்ஸ் என்றும், யூனைடெட் கிங்க்டம் என்றும், க்ரேட் ப்ரிடன் என்றும் பெயர் விளங்கும். இது இங்க்லண்ட், வேல்ஸ், ஸ்காட்லண்ட், ஐர்லண்ட் என்னும் தேசங்கள் சேர்ந்து ஒரு லக்ஷத்து இருபத்தோராயிரம் (1,21,000) சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இதில் ஏறக்குறைய நான்கு கோடியே ஐம்பத்தைந்து லக்ஷம் (4,55,00,000) ஜனங்கள் வசிக்கின்றனர். இதன் பிரதான பட்டணம் லண்டன் நகர். அரசன் பெயர் ஐந்தாவது ஜார்ஜ்

நமது இந்தியா ஆங்கிலேய அரசனது ஆளுகைக் குட்பட்டி-ருப்பதனால், நமது தேசத்தரசனுக்குள்ள மாண்புப் பெயராகிய சக்ரவர்த்தி யென்னும் பட்டத்தினால் இந்த ஆங்கிலேயவரச-னும் விளங்கிவருகின்றான்.

ஆங்கிலேய ராஜ்யம் மாட்சிமை தங்கிய விக்டோரியா மகாராணியாரிடா காலம்முதல் அதிக பெருமையடைந்து வர்த்-தகத்திலும் செல்வத்திலும் நாகரிகத்திலும் உலகத்திலுள்ள மற்றெல்லா ராஜ்யங்களுள்ளும் முதன்மை பெற்று இதுவே உயர்ந்த தென்று யாவராலும் கொண்டாடப்படுகின்றது.

இந்த ராஜ்யத்திற்கு ஆசியா, ஐரோப்பா, ஆப்ரிகா, ஆஸ்ட்-ரேலியா, அமெரிகா எனனும் ஐந்து கண்டங்களிலும் ஆளுகை யுண்டு. ஒரு கண்டத்தில் அஸ்தமித்த சூரியன் மற்றொரு கண்டத்திலும் அதேசமயத்தில் அஸ்தமனங்காட்டாமல் எந்தப் பாகத்திலேனும் உதித்து ஒளி வீசிக்கொண்டே யிருப்பா னாதலால், எல்லாக் கண்டங்களிலும் ஆளுகை படைத்த இந்த ஆங்கிலேய ராஜ்யத்தில் சூரியன் எப்பொழுதும் அஸ்தமிக்கா-மல் விலக்ஷணமாய்ப் பிரகாசித்துக்கொண்டே யிருப்பான்.— நமது இந்த ராஜாங்கத்தாரின் அரசாட்சியும் சூரியப்பிரகாசம் போலவே எங்கும் பரவிக் கீர்த்தி பெற்றிருக்கின்றது.

இஃது ஐரோப்பாவில் ஓர் சிறிய ராஜ்யமாக விருந்தபோ-திலும், நீர்வளம் நிலவளம் தனவளம் தளவளம் முதலியன பெற்ற அநேக பெரிய நாடுகளுக்குத் தலைமை பூண்டு அவைக-ளைத் தாய்போற் காத்துவருகின்றது. இதன் அரசாட்சியின் கீழ் நாற்பதுகோடி (40,00,00,000) குடிகளைக் கொண்ட ஒரு கோடியேபத்துலக்ஷம் (1,10,00,000) சதுரமைல் விஸ்தீரண முள்ள வெளிதேசத்து நாடுகள் பரிபாலிக்கப்படுகின்றன. அதாவது இப்பூலோகத்திலுள்ள மொத்த ஜனத்தொகையில் நான்கிலொருபங்கு இந்நாட்டு அரசனுடைய ஆக்கினைக்கு அடங்கியுள்ளது.

இந்த ராஜ்யத்தைச் சேர்ந்த வெளிநாடுகளில் அவ்வவற்றின் பந்தோபஸ்துக்காக ஏற்பட்டுள்ள சைனியங்களைத் தவிர, தலைநாடாகிய இங்கிலாந்திலும் ஏராளமாகக் கப்பற் சைனியமும் குதிரைப்பட்டாளமும் காலாட்படையும் உண்டு. நாடெங்கும் சமாதானமாக விருக்கும் காலத்தில் ஸஹஜமாய் ராஜாங்க பந்தோபஸ்துக்காக இங்கிலாந்தில் 2,34,000 பேர் வீரர் காக்கப்பட்டிருப்பதுண்டு.—ஏற்கெனவே ராணுவத்திலமர்ந்து பழகி அதன் சூக்ஷ்மங்களைக் கற்றறிந்த பின்னர் வேறு உத்தியோகங்களிற் பிரவேசித்துச் சமயம் வாய்க்குமிடத்துப் படைகளில் வந்து சேர்பவர்களுக்கு 'ரிஸர்விஸ்ட்'கள் என்று பெயர். இத்தகையார் நாட்டுப் பந்தோபஸ்துக்காக ஒவ்வொரு ராஜ்யத்திலும் உளர்.—இங்கிலாந்தைச் சேர்ந்த ரிஸர்விஸ்ட்கள் 1,46,000 பேர் உண்டு. ஆனபோதிலும், இந்த அரசாங்கத்தார் ராஜதந்திர விஷயத்தில் மிகவும் வல்லவரானதனால், தம்முடைய படைகளின் அமைப்பும் செய்கையும் யாவர்க்காயினும் பஹிரங்கமாகத் தெரியாதபடியான ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றனர். இவர்களுக்கு ஒருமணி நேரத்திற்குள்ளே திரண்டு சேரக்கூடியான அநேக லக்ஷம் காலாட்படைகளும் குதிரைப்பட்டாளங்களும் உண்டு.

இவர்களிடம் தற்சமயம் கடற்சைனியமாகிய பலவகைச் சண்டைக் கப்பல்கள் இருக்கின்றன. தற்கால நவீன யந்திர வேற்பாடுகளா லமைந்து எதையும் நிராகரித்துச் செல்லத்தக்க 'ட்ரெட்நாட்'கள் என்னும் பெரிய சண்டைக் கப்பல்களும், தண்ணீரில் மூழ்கியிருந்தவாறே மேலே மிதந்து செல்லும் யுத்தக்கப்பல்களை யுடைத்துப் பொடியாக்கி நாசஞ் செய்வதற்கான குண்டுகளைப் பொருந்திய 'டார்பிடோ'வென்னும் நீர்மூழ்கிக்கப்பல்களையும் அழிக்கத்தக்க 'டார்பிடோபோட் டெஸ்ட்ராயர்'கள் என்பனவைகளும், சமுத்திரத்து உள்ளும் புறம்புமாக ஆழ்ந்து மிதந்து. மற்றைக் கப்பல்களுக்குக் கேடி-

ழைக்கும் 'ஸப்மரீன்' கள் என்னும் யந்திரப் படகுகளும், சத்துருக்கப்பல்களைத் தேடித் திரிந்து ஹதமாக்குவதற்கும் மித்துருக்கப்பல்களை யநுசரித்து ரக்ஷிப்பதற்கும் ஆங்காங்கே உலாவித்திரியும் 'க்ரூஸர்' கள் என்னும் சிறிய சண்டைக் கப்பல்களும், இன்னும் பழைய வேற்பாட்டு யுத்தக்கப்பல்களுமாகச் சேர்ந்து 599 யுத்த மரக்கலங்கள் இவ்யுத்தவாரம்பத்தில் இருந்தன. இவற்றையெல்லாம் அப்போதைக்கப்போது சரிவரப் பழுதுபார்த்துவருவதற்கு அநேக பெரிய கப்பற்சாலைகளும் இருக்கின்றன.

இவையாவற்றிற்கும் சேர்ந்து ஒருலக்ஷத்து ஐம்பத்தோராயிரம் (1,51,000)பேர் உத்தியோகஸ்தரும் வேலைக்காரருமாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். சமயத்தில் யுத்தத்திற்கு வந்து சேர்வதற்கு ரிஸர்வ் கப்பற் போர்வீரரும் 60,900 பேர் இருக்கின்றனர். இவர்கள் யாவருக்கும் சேர்ந்து நாளொன்றுக்கு நான்கு லக்ஷத்து முப்பத்தையாயிரம் (4,35,600) ரூபாய்ச் சம்பளமாகின்றது. இந்தக் கப்பல்களின் கிரயம் சற்றேறக்குறைய ஓராயிரத்து ஐம்பதுகோடி (1,050,00,00,000) ரூபாய் ஆகின்றது. இக்கப்பற்களில் அநேக ஆயிரக்கணக்கான பீரங்கிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுள் முக்கியமாய் வெடியொன்றுக்குச் சுமார் நலாயிரத்தைந்நூறு (4,500) ரூபாய்ச் செலவுசெய்து உண்டாக்கிய பெருங்குண்டுகளை விடும்படியான பீரங்கிகள் 372 தயார் செய்யப்பட்டிருக்கின்றன. இவையும் போதாமல், தற்கால நவீன யந்திர சூழ்ச்சிகளையுடைய 'டெரிஜிபில்ஸ்' என்னும் 409 ஆகாயக்கப்பல்களும் ஏரோப்ளேன்களும் சேர்ந்து யுத்தத் துவக்கத்தி லிருந்தன.

இவ்வளவு சொந்த சைனியபலத்தைக் கொண்ட நமது ஆங்கிலேயா தற்சமயம ஐரோப்பாவில் நடக்கும் சண்டையில் சிறியநாட்டினராகிய பெல்ஜியம் தேசத்தாருடன் தாம் 1830-ம் வருஷத்திலும் மறுபடியும் 1870-ம் வருஷத்திலும் செய்து-

கொண்ட உடன்படிக்கைக் கிணங்க, எதிரிகளின் அக்கிரம சண்டையில் பெல்ஜியம் தேசத்தார்க்குச் சகாயமாக நின்று, " ஆங்கிலேயர் வாக்குத் தவறாதவர் " என்னும் உண்மையைக் கீர்த்தியுடன் நிலைநாட்டுதற் கருதி முனிந்து யுத்தத்திற் பிரவேசித்திருக்கின்றனர்.

சத்தியத்திற்கும் தருமத்திற்கும் தலைகொடுத்துப் பாடுபடும் நமது ஆங்கிலேய துரைத்தனத்தார் முடிவில் ஜயமடைவதும், அக்கிரமசண்டைக்கு உட்பட்ட ஜெர்மனியாராகிய எதிரிகள் சீக்கிரத்திற் கட்டாயம் நாசமடைவதும் சத்தியமென்பதை யாவரும் கண்குளிரப் பார்ப்போமே! ஈசன ரக்ஷிப்பாராக!!

---

## 2. GERMAN CALCULATION

### ஜெர்மனியின் எண்ணம்

ஜெர்மனி யென்பது ஐரோப்பாவில் ஓர் முக்கியமான ராஜ்யம். இது இரண்டு லக்ஷத்து ஒன்பதினாயிரம் (2,09,000) சதுரமைல் விஸ்தீரணமுள்ளது: என்றால், பர்மா தேசத்தைவிடச் சிறியது. இதில் முன்னே தாமாகவிருந்து தனியாக செலுத்திவந்த 26 ராஜ்யங்கள் இப்பொழுது உடன் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதனை ஆண்டுவருபவர்க்குக் கெய்ஸர் என்று பெயர். இவருக்குச் சக்ரவர்த்தி பட்டமும் உண்டு. இப்பொழுது இந்த ராஜ்யத்திற்கு வில்லியம் என்பவர் சக்ரவர்த்தியாக இருக்கின்றார். இவர் 1859-ம் வரு ஜனவரிமீ 27-ம் தேதி பிறந்து, 1888-ம் வரு ஜூன்மீ 15-ம் தேதி பட்டத்திற்கு வந்தார். இவர் விக்டோரியா மகாராணியாரின் பேரன்: ருஷிய சக்ரவர்த்தியின் மனைவிக்குப் பெரிய தாயாரது புதல்வர். இவருக்கு ஆறு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்திருக்கின்றனர். இந்த ராஜ்யம் கல்வியிலும் வர்த்தகப்பெருக்-

கிலும் மிக்க கீர்த்தி பெற்றது. இதற்குப் பேர்லின் பிரதான நகர். ஜெர்மனி ராஜ்யத்திற்கு வெளிநாடுகள் அதிக மில்லை. ஆப்ரிகாவின் கிழக்கு, தென்மேற்கு, மேற்கு ஆகிய இப்பாகங்களில் ஆங்காங்குச் சிறு சிறு நாடுகள் உண்டு. அந்நாடுகளின் மொத்த விஸ்தீரணம் எட்டுலக்ஷத்துத்தொண்ணூற்றெட்டாயிரம் (8,98,000) சதுரமைல். பெஸிபிக் மகாசமுத்திரத்தில் ந்யூகினி என்னும் தீவில் சிறிது பாகமும், பிஸ்மார்க்குத் தீவுகளும் இவர்களுக்குச் சொந்தமானவை.

இந்த நாட்டினர் ஏராளமாக வர்த்தகம் செய்து நாட்டின் நாகரிகத்தை விருத்திசெய்திருக்கின்றனர். இவர்கள் சென்ற 1913 ம் வருஷத்தில் எழுநூற்றுநாற்பத்திரண்டுகோடியே-ஐம்பதுலக்ஷம் (742,50,00,000) ரூபாய் விலையுள்ள சாமான்களைத் தமது நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்து, எண்ணூற்றொருகோடி (801,00,00,000) ரூபாய் விலையுள்ள வெளிதேசத்துச் சாமான்களைத் தருவித்துக்கொண்டனராம். இதனால் ஜெர்மனியின் வர்த்தகப்பெருக்கு இனிது விளங்கும்.

இவ்வளவு ஏராளமாக வர்த்தகம் செய்பவர்களுக்குச் சௌகரியமாகப் போதுமான துறைமுகங்கள் இல்லாததனால், சமீபமாகவுள்ள எல்லை நாடுகளிலிருந்து அவற்றைச் சம்பாதித்துக்கொள்ள இவர்கள் ஆவலுள்ளவர்களானார்கள். ஆனால் அந்தச் சில்லரை ராஜாங்கத்தாராகிய ஹாலண்ட், ஸ்விட்ஜர்லண்ட், பெல்ஜியம் நாட்டினர் தங்கள் தங்கள் நாடுகளைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டு, 1814, 1815, 1839-வது வருஷங்களில் ஜெர்மனியாருடனும், பிரெஞ்சுக்காரருடனும், ஆங்கிலேயருடனும் ஒன்று சேர்ந்து தத்தம் நாட்டின் க்ஷேமார்த்தம் லண்டன்மாநகரத்தில் உடன்படிக்கைகளைச் செய்துகொண்டு அவரவர் பயமின்றித் தமது நாடுகளைக் காத்துவந்தனர். இதனால் ஜெர்மனிக்குத் தமது எண்ணம் முடிவு பெறக் கூடவில்லை. வேறுவகைச் சூழ்ச்சிகள் செய்யவேண்டியதாயிற்று.

1898-ம் வருஷம் இவ்விராஜாங்கத்தார் வெகு தந்திரமாகச் சைனுதேசத்தில் கியாசேள என்னும் ஒரு மாகாணத்தைச் சைனு சக்ரவர்த்தியினிடம் 99 வருஷங்களுக்கென்று குத்தகைக்கு வாங்கிக்கொண்டு, அதில் இருப்புப்பாதைகள் ஏற்படுத்திக் கனிகள் வெட்டி வர்த்தகம் செய்வதாகவும், அவ்வர்த்தகத்திற்கு யாதொரு அபாயமும் நேரிடாவண்ணம் சைனு சக்ரவர்த்தியே காக்கவேண்டுமென்றும், மற்றும் சில ஏற்பாடுகளும் செய்துகொண்டு, அன்று முதல் இவர்கள் அந்நாட்டைத் தமது ஸ்வாதீனமாக்கிக்கொண்டு வர்த்தக மியற்றுவாராயினர்: சிலகாலஞ் சென்ற பின்பு யாதோ சமாதானஞ்சொல்லி அதனை ஆக்ரமித்துக்கொண்டு, அதில் சில கோட்டைகளையும் கட்டிச் சிறிது ராணுவத்தையும் சில யுத்தக்கப்பல்களையும் சேர்த்து வைத்திருந்தனர்.

இவர்கள் 1870-71-ம் வருஷங்களில் பிரெஞ்சுக்காரருடன் யுத்தம் செய்து அல்ஸேஸ் லோறேன் என்னும் நாட்டைக் கைப்பற்றிக்கொண்டனர். அந்த யுத்தத்தில் இருதிறத்தினர்க்கும் எட்டுலக்ஷத்து ஐம்பத்து மூவாயிரம் (8,53,000) ஜனங்கள் நாசமடைந்தனர். தவிர, அறுநூற்றறுபத்தாறுகோடி (666,00,00,000)ரூபாய்ச்செலவாயிற்று. அதனால், இவ்விரண்டு நாட்டினர்க்கும் ஒருவர்மீதொருவர்க்கு அதிக வைராக்கியம் உண்டாகிவிட, அன்றுமுதல் இருவரும் மறுபடியும் யுத்தஞ் செய்ய விருப்பம் கொண்டவராகி யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவந்தனர்.

இந்த ஜெர்மனி ராஜ்யத்தின் ஜனத்தொகை சுமார் ஏழுகோடி (7,00,00,000). இத்தொகை வருஷமொன்றுக்குப் பத்துலக்ஷம் வீதம் நாளுக்கு நாள் விருத்தி யாய்க்கொண்டேவருகின்றது. இந்த ராஜ்யத்தில் விளையும் தானியாதிகளினால், இவ்வளவு ஜனங்களும் வருஷத்தில் ஒன்பதுமாதம்தான் ஜீவனம்

செய்யக்கூடும் ; மற்ற மூன்று மாதம் கழிப்பதற்கு அந்நியதே-சத்து விளைவை எதிர்நோக்கியிருக்கவேண்டும்.

இப்படி வருஷாவருஷம் அதிகரித்துக்கொண்டேவரும் குடிகளுக்குத் தமது நாட்டில் குடியிருந்து ஜீவனம் செய்யப் போதுமான பூமி யில்லாததனால், ஜெர்மனி சக்ரவர்த்தி தமது குடிகளுக்கு இடங்கொடுத்துக்காப்பாற்றும்பொருட்டு வெளித்-தேசங்களில் நாட்டைச் சம்பாதிக்கவேண்டியது மிகவும் ஆவ-சியகமாயிற்று. ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சுக்காரருக்கும், டச்-சுக்காரருக்கும் அதிகமாக வெளிநாடுகளிருப்பதனால், அவற்-றிற் சிலவற்றைத் தாம் எப்படியாவது கைப்பற்றவேண்டு மென்னும எண்ணத்தினால் கெய்ஸர் அவர்களுடன் யுத்தஞ் செய்யக் கருதி இரகசியமாய் 20 வருஷகாலமாக யுத்தத்திற்கு வேண்டிய சாமான்களையும் பெரிய சைனியத்தையும் தயார் செய்ய ஆரம்பித்தார்.—

இந்த ராஜ்யத்துக் குடியாகிய ஒவ்வொருவனும் தான் புக்-தவயதடைந்ததும், சில வருஷகாலம் ராணுவத்தில் சேர்ந்து பழகி, அரசனுக்குத் தேவையான காலத்தில் யாதொரு தடை-யும சொல்லாமல் யுத்தத்திற்கு வந்துசேரவேண்டிய தென்னும் நிர்ப்பந்த சட்டம் ஒன்று உண்டு. அதனை மீறி நடப்பவர்க்-குக் கடுந்தண்டனை விதிக்கப்படும். இப்படி ஒவ்வொருவனும் ராணுவப்பயிற்சி யடைந்திருப்பதனால், ஜெர்மனி சக்ரவர்த்தி-யினிடம ஓர் சாதாரண கலகத்தை யடக்கப் போதுமான சொற்ப சைனியமேம தவிர, அதிகமாகச் சைனியம் சம்பளத்திற்கு அமைந்திருப்பது அநாவசியகமாயிற்று. சாதாரண காலத்தில் இந்த ராஜ்யத்தில் 8,60,000 போர்வீரர்கொண்ட சைனியம் தயாராயிருப்பதுண்டு. சமயம் நேரிடுமானால், நாட்டுக் குடிகளில் ஸ்த்ரீகளும் பாலர்களும் விருத்தர்களும் நீங்க மற்றை யாவரும் சேர்ந்து ராணுவப்படைகளாக அமைந்துவிடுவர். இப்படியி-ருந்தும், இந்தச் சக்ரவர்த்தி அதிக திரவியம் செலவழித்து

அளவுக்கு மிஞ்சிய சைனியத்தையும் யுத்த சாமான்களையும் சேகரித்துவந்தார்.

இப்படி இவரிடம் தற்சமயம் குதிரைப்பட்டாளமும் காலாட்படையும் சேர்ந்து அறுபதுலக்ஷம் (60,00,000) போர் வீரர்களும் அநேகவாயிரம் பீரங்கிகளும் உண்டு. ட்ரெட்நாட்களும், டார்பிடோ போட்டெஸ்ட்ராயர்களும், க்ரூஸர் சப்மரீன்கள் முதலியனவும் சேர்ந்து 263 கப்பல்கள் 79,000 வேலையாட்களுடன் யுத்தவாரம்பத்தில் சித்தமாயிருந்தன. அன்றியும், 70,000 பேர் ரிஸர்வில் காக்கப்பட்டிருந்தனர். ஆகாயக் கப்பல், ஏரோப்ளேன், ஜெப்ளின் என்பவை யுட்பட 1,040 நவீன யந்திரங்களும் யுத்தத்திற்குச் சித்தமாயிருந்தன. இவை போன்ற இன்னும் பலவற்றையும் தயார்செய்துவருகின்றனர்.

கெய்ஸர் திடீரென ஆங்கிலேயருடன் யுத்தம் செய்தால் தாம் அபஜயமடைவது நிச்சயமென்று ஊகித்தறிந்து,முதலில் பிரெஞ்சுக்காரரிடம் தாம் வெகுநாளாய்க் கொண்டிருக்கும் பகை தீர யுத்தம் செய்து அவர்களுடைய வெளிநாடுகளை அபகரித்துக்கொண்டு, பிறகு ஹாலண்ட், டென்மார்க், ஸ்விட்ஜர்லண்ட், பெல்ஜியம் முதலிய தேசங்களைப் படிப்படியாக அடக்கி, இட்டலியையும் கைப்பற்றி, இறுதியில் இங்கிலாந்துடன் யுத்தத்திற்குப் போகலா மென்றும், அதுவரையிலும் ஆங்கிலேயருடன் வெளி நட்புப் பாராட்டவேண்டு மென்றும் நிச்சயித்தார்.---இஃது ஓர் வெறிகொண்ட யோசனையே யல்லவா?—

சென்ற சில வருஷங்களாக, ஐர்லாந்து தேசத்துக் குடிகள் தமது நாட்டுப் பரிபாலன விஷயமாகத் திருப்தியற்று ராஜாங்கத்தாருடன் தர்க்கித்துவந்தனர். இந்தியா தேசத்திலும் குடிகள் தங்களுக்கு நாட்டின் பரிபாலன விஷயத்தில் சில சுதந்திரங்களைக் கொடுக்கவேண்டுமென்று காங்க்ரெஸ் என்னும் மகா சபை மூலமாக வருஷப்ரதிவருஷமும் முறையிட்டுவருகிறதும்,இந்திய வைஸ்ராயாக விருந்த கர்ஜன் பிரபுவின் காலத்-

தில் வங்காள மாகாணம் இருபிரிவாகப் பிரிக்கப்பட்டு அதனால் குடிகள் அதிருப்தி யடைந்திருந்ததும், அந்நியதேச வர்த்தகம் ஓங்காமல் ஸ்வதேசவர்த்தகம் சிறப்புறுத்தலில் இந்தியர்கள் அதிக ஊக்கமுள்ளவர்களானதும், இந்தியாவில் ஆங்காங்குச் சில அயோக்கியர்கள் ராஜத்ரோஹமான காரியங்களைச் செய்து நாட்டிற் சில விடங்களில் குழப்பத்தை யுண்டாக்கியதும், தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்கள் அகௌரவப்படுத்தப்பட்டு அத-னால் இந்தியர்க்குண்டான மனவருத்தமும், இவையாவும் ஜெர்-மனி சக்ரவர்த்திக்குத் தெரியும். இவர் இத்தகைய சந்தர்ப்-பத்தில் தாம் யுத்தத்திற்கு ஆரம்பித்துவிட்டால், இந்தியர்க-ளும் ஐர்லாந்து குடிகளும் தாம் வாழுநாட்டிற் கலகம்விளைத்து அரசாங்கத்தார்க்கு விரோதமாக நின்று, ஜெர்மனியாளுகை-யை உள்ளமுவந்து எதிர்கொண்டேற்றுவ ரென்று ஓர் பெரும் பைத்தியக்கார யோசனை செய்ததாகத் தெரியவருகின்றது.— இஃது இணையற்ற மடைமையே யன்றிப் பிறிதென்னே ?—

இந்தியர்களும் ஐரிஷ் குடிகளும் தங்களுக்கு வேண்டிய சுதந்திரங்களைப் பெறுவதற்காகத் தமது நாட்டின் சட்ட திட்-டங்களையனுசரித்துத் தமது ராஜாங்கத்தார்க்கு மனுக்கள்மூல-மாயும், சட்டதிற்கடங்கிய கிரமமான மகாசபைகள் மூலமா-யும் வேண்டிக்கொள்ளுகின்றார்களே யன்றி, அரசாங்கத்தார்க்கு எள்ளளவேனும் விரோதமாக நடக்கின்றார்களில்லை யென்பதை ஜெர்மனிய சக்ரவர்த்தி தெரிந்திலர்போலும். யுத்தம் நடக்கு-மிப்போது குடிகள் ஆங்கிலேயவரசின் காரியங்களை யாமோ-தித்து ஒட்டி நடப்பதைப் பார்க்கத் தமது மதியீனம் நன்றாக விளங்கியிருக்குமே !—

---

## 3. CROWN PRINCE OF AUSTRIA

## ஆஸ்ட்ரிய இளவரசன்

ஆஸ்ட்ரியாதேசம் ஐரோப்பாவின் மத்தியத்திலுள்ளது. இதன் விஸ்தீரணம் இரண்டுலக்ஷத்து அறுபத்தோராயிரம் (2,61,000) சதுரமைல். இதனுடன் 19 சில்லரை நாடுகளும், ஹங்கெரி என்னும் ஓர் பெரிய நாடும் 1867-ம் வருஷத்தில் சேர்க்கப்பட்டு, இது ஓர் சக்ரவர்த்தியினை ஆளுகைக்கு உட்பட்டது. இதற்கு வியென்னு பிரதானபட்டணம். இதன் தற்கால சக்ரவர்த்தியின் பெயர் ப்ரான்ஸிஸ் ஜோஸேப். இவர் 1830ஆு ஆகஸ்ட் மீ 18-ம் தேதி ஜனித்து, 1848ஆு டிஸெம்பர் மீ 2-ம் தேதி பட்டத்துக்கு வநதார். இப்போது இவருக்கு வயது 84 ஆய்விட்டது. இவர் ராஜதந்திரங்களில் வெகு சாமர்த்தியவானென்றும் புத்திமானென்றும் ஐரோப்பாவில் மிகவும் கியாதிபெற்றவர்.

இவரது ராஜ்யத்தில் வெவ்வேறு கொள்கைகளை யநுசரிக்கும் ஐந்துகோடியேபதின்மூன்றுலக்ஷத்து நாற்பதினாயிரம் (5,13,40,000) குடிகள் இருக்கின்றனர். அவர்களில் ஜெர்மனியார் ஒருகோடியே பன்னிரண்டுலக்ஷத்து ஐம்பதினாயிரம் (1,12,50,000) பேர். ருஷிய ராஜ்யத்தைச் சேர்ந்த ஸ்லாவ் ஜாதியார் 3,00,00,000-க்குமேல் இருக்கின்றனர். ஸெர்வியா தேசத்தைச் சேர்நதவர் பத்துலக்ஷம்பேரும், அறுபதுலக்ஷம் மாகியரும், வெவ்வேறு பாஷை மதாசாரங்களினால் வித்தியாசப்பட்டு அவ்வப்போது நாட்டில் ஒருவரோடொருவர் கலகஞ் செய்து திரியும் மற்றைப் பற்பல ஜாதியாரும் வசிக்கின்றனர். ஆஸ்ட்ரியா சக்ரவர்த்தி அதிக தைரியசாலி. ஏராளமான குதிரைப்பட்டாளங்களும் காலாட்படைகளும் சேர்ந்து இருபத்தைந்துலக்ஷம் (25,00,000) போர்வீரர்களையும் புதிய ஏற்பாடுகளுடன் 23,000 போர்வீரரையுடைய 40 யுத்தக்கப்பல்களை-

யும், 20,000 ரிஸர்வ் கப்பலாட்களையும், 408 ஆகாயக்கப்பல்க-ளையும் சித்தமாக வைத்திருந்தனர்.

சென்ற சில வருஷங்களாக இவர் வயோதிகத்தினால் சக்தியற்றவராய்த் தமது ராஜாங்க விஷயங்களிற் பெரும் பாகத்தை இளவரசனை ஆர்ச்டியூக் ப்ரான்ஸ் பெர்டினண்ட் என்னும் சிறுவனிடம் ஒப்புவித்துத் தாம் மேற்பார்வையிட்டு வந்தார். இவ்விளவரசன் மகா சாமர்த்தியவான்; புத்திமான்; மிகு தைரியவான். ராஜதந்திர விஷயங்களில் மிகவும் தேர்ச்சியுள்ளவன்; தெய்வபக்தி மிக்குடையவன்; ஆனால், முரட்டுத்-தனமும அஹம்பாவமும் அதிகமாகக் கொண்டவன. இவன் ஜெர்மனி சக்ரவர்த்திக்கு உயிர்த்தோழன்: தன் நாட்டு வர்த்-தகத்தை விருத்திப்படுத்தித் தேசத்தை மேன்மையுறச் செய்ய-வேண்டுமென்று மெண்ணத்துடன் 30 வருஷகாலமாக ஆஸ்ட்-ரிய சக்ரவர்த்தியின் மேற்பார்வைக்குமட்டிலு முட்பட்டு ஸ்வ-யமாக ஆளப்பட்டுவந்த போஸ்னியா, ஹெர்ஜ்கோவினு என்-னும் நாடுகளை 1908-ம் வருஷத்தில் அக்கிரமமாய்த் தன் நாட்-டுடன் சேர்த்துக்கொண்டான். அதனால், ஏட்ரியாடிக் கடல் ஓரமாயுள்ள சிறுசிறு நாடுகளினால் தனக்குத் தீங்குசம்பவிக்கா-மற் காத்தற்பொருட்டுக் கப்பற்படைகளையும் அங்கு நிறுத்தி-விட்டான். இவன் ஹாப்ஸ்பர்க் வம்சத்தவனாதலால், ஜெர்மனி-யரின் மதக்கொள்கையில் அதிக அபிமானங்கொண்டு தன நாட்டிற் குடியிருக்கும் ஜெர்மனியார்க்கு அநேக விதமான சௌகரியங்களை ஏற்படுத்தியது மன்றி, மற்ற ஜாதியாரை வெகுவாக அவமதித்தும் ஹிம்சித்தும் வந்தான். அதனால் இவன் பகுஜன விரோதியாகி அவர்களது அபிமானக்குறை-வைச் சம்பாதித்துக்கொண்டான்.

இவனது நாட்டிலிருக்கும் ஸ்லாவ் ஜாதியாரினும் மாஜியர் ஜாதியாரினும் நாட்டில் பெரிய கலகங்கள் அப்போ-துக்கப்போது விளைய வாரம்பித்தன. இவன் அக்கலங்களை

அடக்கிவந்தான்: ஸ்லாவ் வகுப்பினர்க்கு அவ்வினத்தைச் சேர்ந்த அரசனாகிய பீடர் என்பவன் இரகசியமாய்ச் சகாயம் செய்யக் கருத்துளனென்று ஊகித்து, அவனது தேசமாகிய ஸேர்வியா வென்னும் சிறிய தனியரசின்மீது கண்ணோட்டியிருந்தான். இவனுடைய எண்ணங்களுக்கும் காரியங்களுக்கும் ஜோஸெப் சக்ரவர்த்தி முழுச்சம்மதி கொடாராக, இவனது உயிர்த்தோழரான ஜெர்மனி சக்ரவர்த்தி தாம் வெகு நாளாகக் கொண்டுள்ள எண்ணத்தை நிறைவேற்றும் யோசனையுடன் இவனை உற்சாகப்படுத்தி இவனது காரியங்களை ஆமோதித்து இவனுக்குச் சகாயமும் செய்துவந்தார்.

---

## 4. CAUSES OF THE WAR

## யுத்த காரணம்

ஸெர்வியா, பல்கேரியா, போஸ்னியா, ஹெர்ஜ்கோவினா என்னும் நாடுகள் சில வருஷங்களுக்கு முன் துருக்கி சுல்தான் ஆளுகைக்கு உட்பட்டிருந்தன. இந்நாட்டினர் பெரும்பான்மையோர் கிறிஸ்துவ மதத்தை யநுசரித்த ஸ்லாவ் ஜாதியாரானதனால், இவர்கள் மகம்மதிய அரசாட்சியன்றித் தனியரசை ஏற்படுத்திக்கொள்ளும் யோசனையுடன் 1878-வது வருஷத்தில் நாட்டிற் பெருங்கலகம் விளைத்தனர். ஸெர்வியா போஸ்னியா ஹெர்ஜ்கோவினா வென்னும் நாடுகளிலுள்ளவர் பெரும்பாலும் தம்மவரே யானதனாலும், அங்குள்ள கோயில்களிற் பல ருஷியதேசத்துத் திரவிய சகாயத்தினாற் றான் கட்டப்பட்டுள்ளனவாதலாலும், ருஷிய சக்ரவர்த்தியானவர் கலகஞ் செய்யுமிவர்களுக்குச் சகாயம்செய்ய ஆரம்பித்தனர்.

அதைக் கண்ட துருக்கிசுல்தான் தன் இனத்தைச் சேர்ந்த மகம்மதியரில் பெரும்பான்மையோர் இந்தியாவில் குடிகொண்-

டிருப்பதனாலும், விக்டோரியா மகாராணியார் இந்த ஜாதியாரின் அபிவிருத்தியைக் குறித்து மிக்க ஆவலுடன் பார்த்துவந்த-தனாலும், ருஷிய சக்ரவர்த்தி விக்டோரியா மகாராணியார்க்கு நெருங்கின உறவினரானதனாலும், தன்னாட்டிலுண்டான கல-கத்தை யடக்குவதில் மகாராணியைத் தமக்குச் சகாயம் செய்-யும்படி வேண்டிக்கொண்டான்.

இச்சமயத்தில், ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தியும் தமது நாட்-டின் வர்த்தக சௌகரியத்தின்பொருட்டுச் சில துறைமுகங்-களைச் சம்பாதித்துக்கொள்ள வெண்ணித் தமது சிநேகிதரான ஜெர்மனிய சக்ரவர்த்தியுடன் ஆலோசித்து இருவருமாய் விக்-டோரியா மகாராணியார்க்குத் தெரிவிக்க. மகாராணியார் ஓர் மத்தியஸ்த வேற்பாடு செய்தார். அவ்வேற்பாட்டின்படி ஸெர்-வியாவும் பல்கேரியாவும் வெவ்வேறான தனியரசை யடைந்தன: போஸ்னியாவும் ஹெர்ஜிகோவினாவும ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தி-யின் மேற்பார்வைககு உட்படவேண்டுமென்றும், அவ்வவற்றின் ராஜாங்க வருப்படியில் பெருமபாகம துருக்கிசுல்தானை அடை-யவேண்டு மென்றும் தீர்மானிக்கப்பட்டன. இநதத் தீர்மானங்-களைப் பெர்லின் நகரத்தில் இவர்கள் யாவரும் சேர்ந்து உறு-திப்படுத்தி அங்ஙனமே உடன்படிக்கையும் செய்துகொண்டனர்.

இப்படித் தனியரசையடைந்த ஸெர்வியா பதினெட்டாயி-ரத்து அறுநூற்று அறுபது (18,660) சதுரமைல் விஸ்தீரண முள்ளது. இதற்குப் பெல்க்ரேட் பிரதானபட்டணம். இதன் ராஜா பீடர் என்பவர். இவர் 1844௵ ஜூன்௴ 29௳ பிறந்து 1903௵ ஜூன்௴ 2௳ பட்டத்திற்கு வந்தார். சாதாரண காலத்தில் இவரிடம் 50,000 போர்வீரர் கொண்ட பட்டாளம் இருக்கவேண்டும். யுத்தகாலத்தில் 3,50,000 போர்வீரர் கொண்ட பட்டாளத்தைத் தயார் செய்ய இவரால் முடியும். இவரிடம் 60 ஆகாய யந்திரங்கள் தயாராயிருந்தன. இந்த ராஜ்யத்தில் இருபத்தொன்பது லக்ஷத்துப்பதினாயி-

ரம் (29,11,000) குடிகளிருக்கின்றனர். இவர்களிற் பெரும்பான்மையோர் ஸ்லாவ் ஜாதியார். ஆஸ்ட்ரியாவின் மேற்பார்வைக்குட்பட்ட போஸ்னியாவிலும் ஹெர்ஜ்கோவினுவிலும் குடியிருக்கும் ஸ்லாவ் ஜாதியார் சிலவருஷங்களாகத் தாங்கள் அந்நாட்டு இளவரசனுல் அவமதிக்கப்பட்டுத் தமது மதாசாரங்களைச் சரிவர நடத்திக்கொள்ள முடியாதவர்களாயிருந்தார்கள். அதனுல் அவர்கள் மனங்குன்றி ஸெர்வியாவில் வசிக்கும் தம்மவருடன் சதியாலோசனை செய்தார்கள். ஆக, ஸெர்வியாவின் அரசன் தன்னை நாடிவந்த அவ்விருநாட்டினர்க்கும் எங்ஙனம துணை செய்யலாமென்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில், ஆஸ்ட்ரியாவின் இளவரசன் முற்கூறிய பெர்லின் நகரத்து உடன்படிக்கையை மீறித் தன் மேற்பார்வையிலுள்ள போஸ்னியா ஹெர்ஜ்கோவினு நாடுகளை 1908-ம் வருஷத்தில் தனது ஆஸ்ட்ரியாவுடன் சேர்த்துக்கொண்டான்: இவ்விஷயமாய் ஸெர்வியாவினுலும் மற்றைச் சில்லரை நாடுகளினுலும் கலகம் நேராதபடி போஸ்னியாவில் ஓர் பெரிய சைனியத்தையும், அட்ரியாடிக் கடலில் சில கப்பல்களையும் காவலாக அமைத்துவிட்டான்.

அச்சமயம் ருஷியா ஜப்பானுடன் சண்டைசெய்து ஏராளமான பொருள் நஷ்டமும் ஜனநஷ்டமும் அடைந்திருந்தது. அதனுல் ருஷியவரசன் தற்காலம் ஸெர்வியாவுக்குச் சகாயம் செய்ய முயன்றால், ஜெர்மனி சக்ரவர்த்தி ஆஸ்ட்ரியாவுக்குச் சகாயம் செய்வரென்று அறிந்து, மற்றும் சண்டைக்குத தலை கொடுக்க விருப்பமின்றி ஸெர்வியாவின விஷயம் அறியாதவரைப்போ விருந்துவிட்டான்.

அச்செய்தி யறிந்த ஆஸ்ட்ரியாவின் இளவரசன் ஸெர்வியாவைச் சமயம் பார்த்து அடக்கிவிட்டால் அங்குத் தன் பெரிய தொரு சைனியத்தை நிறுத்திச் சமீபமாயுள்ள சில்லரை நாடுகளையும் மெல்லெனத் தன் ஸ்வாதீனமாக்கிக்கொள்ளலாமெனவும், அதனுல் நெடுநாளாகத் தான்கொண்டிருக்கும் விருப்-

பத்தின்படி மத்தியதரைக்கடலிலும் தனக்குத் துறைமுகப் பட்டணங்கள் கிடைக்குமெனவும் எண்ணிக் காத்திருந்தான். இவ்வாறாய் இரண்டு நாட்டினர்க்கும் உபயத்வேஷம் நாளுக்கு-நாள் அதிகரித்துக்கொண்டே வந்தது. இளவரசனோ எதற்கும் அஞ்சாமல் தன்வசப்படுத்திக்கொண்ட கலகக்கார நாட்டினரி-ருவரையும் அடக்கி வெகு ஜாக்கிரதையாக அரசு செலுத்தி-வந்தான். ஆனாலும், நாட்டில் குழப்பமும் கலகமும் அதிக-ரித்துக்கொண்டே வந்தன. இளவரசனை யாவரும் வெறுக்கத் தொடங்கினர்.

நிற்க:—

சென்ற ஜூன் மாதம் 28-ம் தேதி அந்திப்பொழுதில் போஸ்னியா நாட்டின் தலைநகராகிய ஸெராஜிவோ என்னும் பட்டணத்தில் ஆஸ்ட்ரியதேசத்துப் பிரதான ராணுவாதிபதி-யும இளவரசனுமான ஆர்ச்ட்யூக் ப்ரான்ஸ் பெர்டினண்ட் பிரபு தம சைனியங்களைப பார்வையிடுதற்காகத் தம் பத்தினியு-டன் உல்லாஸமாகப் போய்க்கொண்டிருக்கையில், ஸ்லாவ் ஜாதி-யைச சேர்ந்த ப்ரின்ஸிப் என்னும் ஓர் மாணாக்கன் திடீரெனக் குறுக்கே வந்து தன்னிடம் வைத்திருந்த கைத்துப்பாக்கியி-னால் அத் தம்பதிகளைச் சுட்டுக் கொன்றுவிட்டான்.

இளவரசனை இழந்த ஆஸட்ரியசக்ரவர்த்தி இதுவரையி-லும் தமது நாட்டில் நடந்துள்ள செய்திகளை யுன்னி, இவ்வநி-யாயக்கொலை ஸெர்விய ராஜாங்க மந்திரிகளின் பிரேரணையினால் நடந்திருக்கலாமென்றூகித்தது தாம் ஸமசயிக்கும் மந்திரிகளை ஸெர்விய கவர்ன்மெண்டார் உடனே உத்தியோகத்தினின்றும் நீக்கிவிடுதல் தவிர, அவர்களைத் தம்மால் நியமிக்கப்படுபவர் களால் விசாரித்துத் தண்டனைக்குட்படுத்தவேண்டு மென்றும், மற்றுஞ் சில நிபந்தனைகளுக்கும் ஸெர்வியா நாட்டினர் 48 மணிக்குள்ளாக ஒப்புக்கொள்ளவேண்டு மென்றும், 1914௵ ஜூலை மாதம் 24-ம் தேதி அந்நாட்டினர்க்குத் தெரிவித்தார்.

ஸெர்வியா கவர்ன்மெண்டார் அவ்வியாயக்கொலைக்கு மிகவும் விசனப்பட்டு, ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தியின் நிபந்தனைகளிற் பெரும்பான்மைக்கு ஒப்புக்கொண்டனர்; ஆனால், மேற்படி கொலையானது தமது நாட்டில் நடக்காததென்றும், தமது மந்திரிகள் அக்கொலையில் சம்பந்தப்பட்டிருப்பாரென்பதற்கு அத்தாட்சி யாதுமில்லையென்றும், ஆனபோதிலும், அவ்விஷயத்தைக் குறித்துச் சீக்கிரத்தில் விசாரித்துத் தமது குடிகள் அக்குற்றத்திற் பாற்பட்டவர்களாக வேற்படின், அவர்களைத் தண்டித்து அச்செய்தியை ஆஸ்ட்ரிய சக்ரவர்த்திக்குத் தெரியப்படுத்துவதாகவும், தமது மந்திரிகள் குற்றவாளிகளாய்க் கருதப்படும் பக்ஷத்தில் மத்தியஸ்த ஹேக் மகாசபையினரால் தீர்மானிக்கப்படுவதற்குமுன் அவர்களைச் சம்சயத்தால் மாத்திரம் உத்தியோகத்தினின்றும் நீக்குவதாகவென்றும் தெரியப்படுத்தினர். ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தி அதற்குச் சம்மதிக்காமல் அந்த ஜூலை மாதம் 28-ம் தேதி ஸெர்வியாவின்மேல் யுத்தத்திற்கு ஆரம்பித்துவிட்டார்.

---

## 5. EMPEROR GEORGE V

## ஜார்ஜ் சக்ரவர்த்தி

விக்டோரியா மகாராணியாரின் பேரனும் ஏழாவது எட்வர்ட் சக்ரவர்த்தியின் புதல்வருமான நமது ஜார்ஜ் சக்ரவர்த்தி 1865௵ ஜூன்௴ 3௳ மார்ல்பரோ மந்திரத்தில் ஜனித்தார். இக்கனவான் எட்வர்ட் சக்ரவர்த்திக்கு இரண்டாவது புதல்வர். இவர் தமையனான ஆல்பர்ட் விக்டர் என்பவர் தம் 19-வது வயதில் மரணமடைய, இவர் காலக்கிரமத்தில் ஆங்கிலேய ராஜ்யத்திற்கு இளவரசராயினர். இவர் பாலியமுதல் கப்பற்சைனிய விஷயங்களில் அதிக ஊக்கமுள்ளவராய்

அவைகளிற் பழகி அவற்றின் ஸௌக்ஷ்மங்களை நன்றாகத் தெரிந்துகொண்டார்.

இவர் 1893ஞ ஜூலைமீ 6வ ஸேன்ட் ஜேம்ஸ் அரண்மனையில் டெக் தேசத்து ராஜகுமாரியான விக்டோரியா மேரி என்று மதியழகு படைத்த மங்கையைக் கடிமணம் புரிந்தார். இவருக்கு 1894ஞ ஜூன்மீ 23வ ப்ரினஸ் எட்வர்ட் ஆல்ப்ரெட் க்ரிஸ்சியன் ஜார்ஜ் ஆண்ட்ரூ பீட்ரிக் டேவிட் என்னும் செல்வக் குமாரர் பிறந்தார். இக்குமாரர்தான் இப்பொழுது ஆங்கிலேய நாட்டின் இளவரசர்: ப்ரன்ஸ் ஆப் வேல்ஸ் எனப்படுபவர். இவர்க்குப பிறகு நமது சக்ரவர்த்திக்கு ஒரு பெண்ணும் நான்கு புதல்வரும் பிறந்திருக்கின்றனர்.—கடவுள் இவ்யாவர்க்கும் குறைக்கினுங் குன்றாக் குபேர ஸம்பத்தும், வஜ்ர சரீர நிர்த்தோஷ நிருபத்ரவ ஸௌகாநுபவங்களும், தீர்க்காயுளும் அருளிக் காத்து ரக்ஷிப்பாராக!—

நமது சக்ரவர்த்தியாரவர்கள் இளவரசரா யிருக்கும்பொழுது தமது அருமை மனையாட்டியுடன் 1904-ம் வருஷம் இங்கிலாந்தைவிட்டுப் புறப்பட்டு இந்தியா முதலிய வெளிநாடுகளைச் சுற்றிப்பார்த்து இன்புற்று யாவராலும் வெகுவாக உபசரிக்கப்பட்டுத் தமது நாடு சேர்ந்தார். 1910ஞ மேமீ 6வ காலகதியினால் மரணமடைந்த இவரது அருமைத் தந்தையார்க்குப் பின் ராஜ்யத்தை ஆளவாரம்பித்து 1911ஞ ஜூன்மீ 22வ ஆங்கிலேயநாட்டுச் செங்கோலரசராகப் பட்டாபிஷேகம் பெற்று, இந்தியாவுக்குச் சக்ரவர்த்தியாயினார். அதே வருஷம் தமது பத்தினியுடன் இந்தியாவுக்கு வந்து டில்லிமாநகரத்தில் டிஸெம்பர்மீ 12வ ஓர் பெரிய தர்ப்பார் கூட்டினார். அச்சமயம் இந்தியாவிலிருக்கும் எல்லா மஹாராஜாக்களும், சிற்றரசர்களும், ஜமீன்ஜாகீர்மிட்டாதார்களும், பெருங்குடிகளும், அநேக கல்விமான்களும் கூடி இவரது வரவிற்கு வெகு சந்தோஷப்பட்டுக் கொண்டாடித் தமது ராஜபக்தியைக் காட்டிப் பணிந்து-

னர்.—இந்தியர்களின் நிகரற்ற ராஜ பக்திக்கும் விசுவாஸத்திற்கும் மெச்சி, இவர் தமது நாடு சேர்ந்தது முதல் இந்தியாவைத் தமது கண்ணைபோற் கருதி மிக்க உபகாரம்செய்துவருகின்றார்.

இப்பொழுது ஆஸ்ட்ரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் யுத்தம் ஆரம்பமாய்விடவே, ஐரோப்பாவில் பெரிய யுத்தம் நடக்கக்கூடு மெனை நினைத்து அதைத் தடுக்கப் பல முயற்சிகளைச் செய்தார் இவர். ஆஸ்ட்ரியாவின் சக்ரவர்த்திக்கு ஸெர்விய அரசாங்கத்தார் கொடுத்த உத்தரம் மிகச்சரியானதேயென்றும், ஸெர்விய கவர்ன்மெண்டார்க்குப் போதுமான அவகாசம் கொடாமலே ஆஸ்ட்ரியகவர்ன்மெண்டார் யுத்தத்திற்கு ஆரம்பித்துவிட்டதனால், ஆஸ்ட்ரிய கவர்ன்மெண்டார் முன்னமே யுத்தத்திற்குச் சித்தமாகவிருந்தனரென்றும், ஸெர்வியா கொடுத்த ஸவால் அக்கிரமமென்று கருதி யுத்தத்திற்கு முனைந்த ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தியானவர் ஜெர்மனி சக்ரவர்த்தியின் பிரேரணையினாலேதான் இவ்வாறு செய்தாரென்றும் நிச்சயித்தார்.

சென்ற சிலவருஷங்களாக ஜெர்மனியார் ஏராளமான சைனியங்களைத் தயார்செய்துவருவதை ஆங்கிலேயர்கண்டு தாமும் பெரிய சைனியங்களைத் தயார்செய் தவந்தனர். ஜெர்மனிய சக்ரவர்த்தியும ஆங்கிலேய சக்ரவர்த்தியும் நேராக ஒருவர்க்கொருவர் பகை காட்டாவிட்டாலும், முன் ட்ரான்ஸ்வால் யுத்தம் நடந்தகாலத்தில் ஜெர்மனிய சக்ரவர்த்தி ஆங்கிலேயரின் காரியங்களை ஆமோதிக்காதவராய் க்ரூகர் பிரபுவிற்கு அனுப்பிய தந்தியே காரணமாக அன்றுமுதல இருவர்க்கும் மனத்துள் வித்வேஷமுண்டாகித் தனித்தனி யுத்தத்திற்குப் படைகளைக் கூட்டிவந்தனர்.

இப்பொழுது நேரிட்டிருக்கும் யுத்தத்தில் தாமும் சேர வேண்டிவருமென்பது தெரிந்து, நமது சக்ரவர்த்தியார் இவ் யுத்தத்தை விலக்கவெண்ணி ருஷியசக்ரவர்த்திக்கும் ஜெர்மனிய சக்ரவர்த்திக்கும் சமாதானம் சொல்ல முயன்றார். ருஷிய சக்ர-

வர்த்தி பட்டினும் இவரது அபிப்ராயத்திற்கு இணங்கினர். ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தியும் நமது அரசன் அபிப்ராயத்திற்கிணங்க ஸெர்வியாவின் விஷயத்தில் சற்று அனுகூலமான யோசனை செய்வதாகவும் ஒப்புக்கொண்டார். ஆனால், ஜெர்மனிய சக்ரவர்த்தியோ, வெகு நாளாகத் தாம் கொண்டிருந்த எண்ணத்தை நிறைவேற்றும்பொருட்டே இந்த அநியாய யுத்தம் தம்மால் ஆரம்பிக்கப்பட்டதென்று யாவரும் அறிந்துகொள்ளும்படியாக, சென்ற ஜூலை மாதம் 25-ம் தேதி, ஸெர்வியாவிலிருந்து பதில் வருமுன்னரே, ஆஸ்ட்ரியா ஸெர்வியாவுக்குச் சங்கதி அனுப்பிய மறுநாளே, ப்ரான்ஸ் தேசத்து எல்லையின் ஓரமாகத் தமது சைனியங்களைக் கொணர்ந்துவந்து நிறுத்தித் தமது கோட்டைகளைப் பத்திரப்படுத்திப் பிரெஞ்சுக்காரரின் வழிகளை யடைத்து வண்டிகள் முதலியவைகளைத் தடுத்துத் தந்திக்கம்பிகளை அறுத்து வெகு அட்டகாசஞ் செய்தனர்.

இவ்வகாரியங்களை யறிந்த நமது ஜார்ஜ் சக்ரவர்த்தியார் இனி ஸமாதானம் இயலாதென்று தேர்ந்து, தாம் துணைசெய்யப் பாத்தியப்பட்டிருக்கும் மற்ற நாடுகளின் சங்கதிகளைக் குறித்து ஆலோசிக்கலாயினர்.

---

## 6. BELGIAN NEUTRALITY

## பெல்ஜிய மத்தியஸ்தம்

பெல்ஜியம் என்பது ஜெர்மனிக்கு மேற்கிலும் பிரான்ஸுக்கு வடகிழக்கிலுமுள்ள ஓர் சிறிய ராஜ்யம். இதன் விஸ்தீர்ணம பதினோராயிரத்து முன்னூற்றெழுபது (11,370) சதுரமைல்; அதாவது மைசூர் ஸம்ஸ்தானத்தில் பாதிக்குக் கொஞ்சம குறைவு. இது ஓர் தனியரசு. இதன் ஜனத்தொகை எழுபத்துநான்குலக்ஷம் (74,00,000); இவர்களிற் பெ-

ரும்பான்மையோர் ஆங்கிலேயரும் பிரென்சுக்காரரும். இந்நாட்டிற்கு ப்ருஸேல்ஸ் பிரதான பட்டணம். இதைத் தற்காலம் ஆல்பர்ட் என்னும் ஓர் குணவந்தர் ஆண்டுவருகின்றார். இவர் 1875௵ ஏப்ரல் மாதம் 8-ம் தேதி ஜனனமாகி, 1909௵ டிஸெம்பர்மாதம் 23-ம் உ இந்நாட்டு அரசனாகிப் பட்டாபிஷேகம் பெற்றார். இவருக்கு வயது 39. இவர் மகா சூரர்: மிகவும் தயாளு: தெய்வபக்தியுள்ளவர்: நன்றாகக் கல்விகற்று ராஜதந்திரங்களில் தேர்ந்தவர். இவர் தமது 15-வது வயதில் (1890-ம் வருஷம்) ராணுவ விஷயங்களைக் கற்குமாறு ஓர் யுத்த சாஸ்திர கலாசாலையிற் பிரவேசித்து, பிறகு 1892-ம் வருஷத்தில் தமது நாட்டுச் சேனையில் கலந்து சில வருஷகாலம் அங்குப் பழகி, ராணுவதந்திரங்கள் நன்றாகக் கற்றுத் தமது ராணுவங்களுக்கெல்லாம் தாமே அதிபதியாயினார். ஸமாதான காலத்தில் இவரிடம் 58,000 போர்வீரர் கொண்ட சைனியம் இருப்பதுண்டு. யுத்தசமயத்தில் இச்சைனியம் 3,00,000 போர்வீரரைக் கொண்டதாகும். யுத்தவாரம்பத்தில் இவரிடம் 102 ஆகாய யந்திரங்க ளிருந்தன.

இதற்குமுன் இவ்விராஜ்யம் டச்சுக்காரருக்குச் சொந்தமாயிருந்தது. இதன் குடிகள் 1830-ம் வருஷத்தில் டச்சுக்காரருடன் கலகஞ்செய்து தனி ராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொண்டனர். அச்சமயம், ஆஸ்ட்ரியா ப்ரான்ஸ் ருஷியா இங்கிலாந்து தேசங்களின் அதிபதிகள் ஒன்றுகூடி டச்சுக்கார ராஜ்யத்திற்கும் இதற்கும் மத்தியஸ்தம் செய்து மத்தியஸ்தமான எல்லைகளை ஏற்படுத்தி, விக்டோரியா மகாராணியாரின் நெருங்கின உறவினரான லீயோபால்ட் என்பவரை அரசனாக நியமித்தார்கள். இந்த ராஜ்யம் எப்பொழுதும் மத்தியஸ்த நிலையிலேயே யிருக்கவேண்டுமென்றும், ஐரோப்பாவில் எந்த யுத்தம் நடந்தபோதிலும் யாவர்க்கும் பொதுவாகவே நிற்கவேண்டுமென்றும், தம்மில் யாராவது ஒருவேளை இந்த ராஜ்யத்தில் அக்-

கிரமமாகப் பிரவேசிக்கும்பக்ஷத்தில் மற்றவர்கள் அதற்குச் சகாயம் செய்து காக்கவேண்டுமென்றும், 1813-ம் வருஷத்தில் லண்டன்மாநகரத்தில் மேற்கூறிய நால்வரும் உடன்படிக்கை செய்துகொண்டு அதிற் கையொப்பமிட்டனர்.

இங்ஙன் பெரிய ராஜாங்கத்தார் தமது மத்தியஸ்த நிலைமையைச் சாப்பாற்றிக்கொள்ளும்பொருட்டும், மேற்படி உடன்படிக்கையின் நிபந்தனைகளை யாரேனும் மீறி நடக்காமல் காத்தற்பொருட்டும், போதுமான சைனியத்தைத் தயாராக வைத்துக்கொள்ளவேண்டுமென்றும், யுத்தத்திற் சேர்ந்த எந்தக் கக்ஷியாராயினும் யுத்த யோசனையுடன் இந்நாட்டிற்குள் பிரவேசிப்பாராயின் அவர்கள் யுத்தத்தை நிறுத்திவிட்டதற் கறிகுறியாகத் தமது ஆயுதங்களைக் கீழேவைத்து இந்நாட்டு ஸம்ரக்ஷணத்து உட்படவேண்டுமென்றும் ஏற்பாடு செய்தனர். பிறகு 1839-ம் வருஷம் தமது நாடுகளின் பந்தோபஸ்துக்காக ஜெர்மனி சக்கரவர்த்தியும் உலாந்தாதேசத்ததிபதியும் மேற்குறித்த நான்கு தேசத்தாரோடு சேர்ந்து யாவரும் வேறொரு உடன்படிக்கை செய்துகொண்டனர். மறுபடியும் இவர்கள் பெல்ஜியத்திற்குச் சமீபமாயும் 1831-ம் வருஷமுதல் தனியாசாயுள்ள லக்ஸம்பர்க் என்னும் ஓர் சிறிய மாகாணத்தையும் பெல்ஜியத்தைப்போலவே 1867-ம் வருஷத்தில் மத்தியஸ்த நாடாக்கினர்.

1870-ம் வருஷம் ஜெர்மனிக்கும் பிரான்ஸுக்கும் யுத்தம் நேரிட்டகாலத்தில், பிரான்ஸ் அதிபனான மூன்றாவது நெப்போலியன் பெல்ஜியத்தின் மத்தியஸ்தநிலைமையைக்கெடுக்க முயல்வதை அறிந்த நமது விக்டோரியா மகாராணியார் பெல்ஜியத்திற்கு நேரப்போகும் ஆபத்தினை அவ்வரசனுக்குத் தெரிவித்து, முன்னைய உடன்படிக்கைக் கிணங்கச் சமயம் நேரிடுமாயின் தாம் பெல்ஜியத்தைக் காக்கச் சித்தமாக விருப்பதாகவும் உறுதிமொழி கூறினர். அதன்மேல் இருகக்ஷியாரும் விக்டோ-

ரியா மகாராணியாருடன் நேரில் பேசினார். அப்போது மகா-ராணியார் பெல்ஜியத்தின் மத்தியஸ்த நிலைமையைக் காப்பாற்று-வது மிகவும் ஆவசியகமென்று அவர்க்குத் தெரியப்படுத்தினர். அதற்கிணங்க, பிரென்சுக்காரருக்கும் ஜெர்மனியாருக்கும் பின் யுத்தம் நிகழ்ந்தபோது பெல்ஜியத்தின் மார்க்கத்தை நீக்கி, அதற்குத் தென்கிழக்காயுள்ள மெட்ஸ், ஸ்ட்ராஸ்பர்க் என்னும் பட்டணங்களின் வழியாகச் சென்று ஒருவரையொருவர் எதிர்-த்து யுத்தஞ்செய்தனர். இப்பொழுதோ, இந்த வழிகளில் பிரென்சுக்காரரால் பலமான கோட்டைகள் கட்டப்பட்டுப் பெரிய சைனியமும் காவலாக இருக்கின்றது.

ஆஸ்ட்ரியா ஸெர்வியாவின்மேல் யுத்தத்திற்கு ஆரம்பம் செய்தவுடனே, ஸெர்வியாவைக் காக்கும்பொருட்டு ருஷிய சக்-ரவர்த்தி சென்ற ஜூலைமாதம் 30-ம் தேதி தமது படைகளைச் சேர்க்க ஆரம்பித்தார். ஜெர்மனியாரும் ஆஸ்ட்ரியாவுக்குச் சகா-யமாகத் தமது சேனைகளைத் தயார் செய்தனர். இது கண்டு நமது ஜார்ஜ் சக்ரவர்த்தியார் மத்தியஸ்தம் செய்யுமுயற்சியு-டன் அநேக ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்கையிலேயே, ஜெர்மனியின் சக்ரவர்த்தி ஆகஸ்டு மாதம் முதல்தேதி ருஷியாவின்மேல் யுத்தம் ஆரம்பம்செய்துவிட்டார்.

1892-ம் வருஷம் ருஷியாவுக்கும் பிரான்ஸுக்கும் ஏற்-பட்டுள்ள உடன்படிக்கைக் கொப்ப, இப்பொழுது பிரென்சுக்-காரர் ருஷியாவுக்குச் சகாயஞ்செய்வரென் றறிந்த ஜெர்மனிய சக்ரவர்த்தி பிரென்சுக்காரருடனும் எதிர்க்கும்பொருட்டுப் பரி-வாரங்களைச் சித்தஞ்செய்தார்

ஜெர்மனியின் சைனியம் வெகு சுலபமாயும் சீக்கிரமாயும் ப்ரான்ஸ் தேசத்திற்குப் போகவேண்டுமானால், மத்தியஸ்த லக்ஸம்பர்க் நாட்டின் மூலமாய்ப் பெல்ஜியத்தில் நுழைந்தே போகவேண்டும். ஜெர்மனிய சக்ரவர்த்தி தாம் முன் செய்து-கொண்ட உடன்படிக்கையினால் இவ்வழியாய்ப்போதல் கூடாது.

ஆயினும், அவர் இப்போது அந்த நிபந்தனைகளை மீறிப் பெல்ஜி-யத்தின் வழியாகவே செல்லத் தீர்மானித்தார்: அங்ஙனம் செய்தற்கு உடம்பட்டு வழிவிடுவது தவிர, தமது சைனியங்களுக்கு வேண்டிய சௌகரியங்களையும் ஏற்படுத்தும்படி சென்றவருஷம் ஆகஸ்டுமீ 3உ பெல்ஜியத்தரசனுக்கு ஓர் தூது அனுப்பினார். பெல்ஜிய வாசன் ஜெர்மனிய சக்ரவர்த்தியின் வேண்டுகோளுக்-கிணங்காமல் மறுத்துவிட்டான். ஆயினும், மறுநாள் வில்லியம் சக்ரவர்த்தி முரட்டுத்தனமாய்த் தமது சைனியங்களைப் பெல்-ஜிய நாட்டின் எல்லையுட் பிரவேசிக்கச் செய்து உள்ள உடன்-படிக்கையை நிக்ரஹித்த தமது தீர்மானத்தை மறுபடியும் பெல்ஜியவாசனுக்குத் தெரிவித்தார். பெல்ஜியத்தரசன் அத-னாற் கடுங்கோபங் கொண்டு அஞ்சாநெஞ்சினனாய் அங்ஙனம் வழிவிட முடியாதென்று சொல்லிவிட்டான். உடனே இரு-வர்க்கும் யுத்தம் மூண்டுவிட்டது.

ஜெர்மனியார் பெல்ஜியத்தைக் கைப்பற்றுவாராயினும், அல்லது பிரான்ஸ்தேசத்தின் வட எல்லையிற் சேர்ந்து சண்டை செய்தாராயினும், சமீபமாயுள்ள ஆங்கிலேயநாட்டிற்குக் கட்டா-யம் அபாயம் உண்டாகக் கூடும். பிரான்ஸ்தேசத்து மேற்கு வடக்குப் பாகங்களில் ஜெர்மனியார் கப்பற்போர் துவக்குவா-ராகில், மத்தியதரைக்கடலில் வர்த்தகக்கப்பல்களும் சில தீவு-களும் ஆங்காங்குள்ள சில சில்லரை நாடுகளினால் உபத்திரவப்-படுத்தப்படாவண்ணம் காத்துவருகின்ற பிரெஞ்சுக்கப்பற் படைகள் தமது நாட்டைக் காப்பாற்றும்பொருட்டு அங்கிரு-ந்து திரும்பிவரவேண்டியிருக்கும்.

அப்பொழுது மத்தியதரைக்கடலில் ஆங்கிலேயர்க்குக் கப்-பற்படைச் சகாயம் குன்றி, அக்கடலின் ஓரமாகவிருக்கும் சில சில்லரை நாடுகளினாற் சற்றுக் கஷ்டம் நேரிடக்கூடும். இந்த ஸௌக்ஷ்மங்களை யறிந்த நமது ஆங்கிலேய துரைத்தனத்தார் தற்காலசெய்திகளை யுன்னிப் பிரெஞ்சுக்காரருடைய கப்பற்சை-

கையம் இதுகாறும்போலவே மத்தியதரைக்கடலிலேயே இருக்க வேண்டுமென்றும், அதற்குப் பிரதியாகத் தாங்கள் ப்ரான்ஸ் தேசத்தின் வடபுறத்தையும் மேற்புறத்தையும் தமது கப்பற்களால் காக்கவேண்டுமென்றும் தீர்மானித்தனர். அன்றியும், முன்னைய உடன்படிக்கைகளினால் பத்தப்பட்டிருக்கும் நமது ஆங்கிலேயவரசர் இந்தச் சண்டை ஆரம்பித்துவிடவே, மத்தியஸ்த தேசமாகிய பெல்ஜியத்தையும் ஜெர்மனியினால் வலுவிற் போர்க் கிழுக்கப்பட்ட பிரான்ஸ் தேசத்தையும் உதவிசெய்து காத்தற்பொருட்டு, யுத்தம் பிரகரிக்கப்பட்ட தினமே, நாம் யாவரும் சேர்ந்து கையொப்பமிட்டிருக்கும் உடன்படிக்கையை ஜெர்மனியக் கெய்ஸருக்கு ஞாபகப்படுத்தி, அதை மீறி நடக்கப்படுமாயின், தாம் பெல்ஜியத்தார்க்குச் சகாயம் செய்யவேண்டி வருமெனத் தெரியப்படுத்தினர். இதுவரையிலுமே தமது சைனியம் பெல்ஜியம் தேசத்தில் வெகுதூரம் சென்றுவிட்டதென்றும், இனி அதைத் திருப்புவது அசாத்தியமென்றும் ஜெர்மனிய சக்ரவர்த்தி சொல்லிவிட, நமது ஆங்கிலேயர் அன்றே (அதாவது 1914 ௵ ஆகஸ்டுமீ 4௳) இரவு பத்துமணிக்கு ஜெர்மனி தேசத்தாருடன் தர்மமே ஜயமெனத் துணிந்து யுத்தத்திற்குத் துவக்கிவிட்டனர்.

---

## 7. THE ALLIES AND THE COMPACT

## கூட்டாளிகளும் ஏற்பாடும்

### I. THE FRENCH : பிரேஞ்சுக்காரர்

ப்ரான்ஸ் தேசம் இங்கிலாந்திற்குத் தெற்கே யுள்ளது. இதற்கும் இங்கிலாந்திற்கும் 20 மைல் தூரமுண்டு. இடையே சமுத்திரமிருக்கின்றது. இந்நாட்டின் விஸ்தீரணம் இரண்டுலக்ஷத்து ஏழாயிரம் (2,07,000) சதுரமைல்: என்றால், பர்மாவைவிடச் சிறியது. இதன் ஜனத்தொகை மூன்றுகோடி-

யேதொண்ணூற்றாறுலக்ஷம் (3,96,00,000). இது ஓர் குடியரசு. அப்போதுக்கப்போது குடிகளால் தெரிந்தெடுக்கப்படும் நாட்டின் குடியொருவரே அக்ராஸநாதிபதியென்னும் பட்டம்பெற்று ராஜ்யபரிபாலனம் செய்துவருகிறார். இதற்குப் பாரிஸ் நகர் பிரதான பட்டணம். தற்சமயம் பாய்ன்கேர் என்பவர் அரசிறை நடாத்துகின்றார். இவர் 1912ஆம் ஜனவரிமாதம் 13உ இவ்விராஜ்யத்திற்கு அக்ராஸனாதிபதியாயினார். இந்த ப்ரான்ஸ் ராஜ்யத்திற்கும் ஐந்து கண்டங்களிலும் சில நாடுகள் உண்டு.

சமாதானகாலத்தில் இந்நாட்டில் 7,90,000 வீரர்கொண்ட சைனியம் இருக்கவேண்டும்: இவ்விராஜ்யததாரிடம் தற்சமயம் வெகு யுத்தத்திறமையுள்ள குதிரைப்பட்டாளமும் காலாட்படையுமாக நாற்பதுலக்ஷம் (40,00,000) போர்வீரரும் அநேக ஆயிரம் பீரங்கிகளும் உண்டு. ஏராளமான இச்சைனியத்தில் ஒரு பகுதியார், இருபது லக்ஷப்பேர், இப்போது யுத்தகளத்தில் சேர்ந்திருக்கின்றனர். கடற்சைனியமென்றாலோ, ட்ரெட்நாட்கள், டார்பிடோபோட்டெஸ்ட்ராயர்கள், ஸப்மரீன்கள் முதலிய நவீன ஸந்நாஹங்கள் 335ப், ஏரோப்ளேன் ஆகாயக்கப்பல் முதலிய நூதன அற்புத யந்திரங்கள் 1,422ம் யுத்தமுதலில் இருந்தன. இவ்வெண்கள் தினதினமும் உயர்ந்துகொண்டிருக்கின்றன.

1904-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 8-ம் தேதி இந்நாட்டினர்க்கும் ஆங்கிலேயர்க்கும் வெகு நாளாக விருந்த மனஸ்தாபம் எட்வர்ட் சக்ரவர்த்தியாரின் ஏற்பாட்டினால் நீங்கி ஓர் சமாதான உடன்படிக்கை யுண்டாயிற்று. அதனால் பிரெஞ்சுக்காரர் ஆங்கிலேயருக்குச் சகாயமாக மத்தியதரைக்கடலைக் காக்கவும், அதற்கீடாக ஆங்கிலேயர் ப்ரான்ஸின் வடபாரிசத்தைக் காக்கவும் ஒப்புக்கொண்டனர்.

ஜெர்மனியார் 1914 ஆம் ஜூலை மீ 25-ம் உ ப்ரான்ஸ் தேசத் தெல்லையிலோரமாகக் கூடி அலக்கழித்ததையும், ஆகஸ்-

டு மொதம் முதல்தேதி ருஷியாவின்மேல் சமர் தொடுத்துவிட்ட-தையும் நோக்கி, பிரென்சு அரசாங்கத்தார் தமக்கு ஜெர்மனி-யாரிடமிருக்கும் நெடுநாட் பகை தீர்த்துக்கொள்ளலாமென்று களிப்புற்றார்கள்; ஆனால், யுத்தத்தை இவ்வளவு சீக்கிரத்தில் எதிர்பார்க்கவில்லை: 1892-ம் வருஷத்தில் தாம ருஷியாவுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி அவர்களுக்கு உதவிசெய்வ-தற்காகப் படைகளைச் சேர்க்க ஆரம்பித்தனர். ஆகஸ்டு மீ 2வ ஜெர்மனியார் பொதுநாடான லக்ஸம்பர்க் என்னும் சிறிய தேசத்தின் வழியே சென்று ப்ரான்ஸ் தேசதநிற் பிரவேசித்து ஸீரே என்னுமிடத்தில் சண்டைக்கு ஆரம்பித்தனர்.

## ii. THE RUSSIANS : ருஷியர்

ருஷிய ராஜ்யமானது ஐரோப்பா கண்டத்திற் பாதிக்கு மேல் விஸ்தீரணமுள்ளதாய் இருபது லக்ஷம் (20,00,000) சதுரமைல் கொண்டது: இந்தியாவைக் காட்டிலும் பெரியது. இதன் ஜனத்தொகை பதினாறுகோடியே அறுபத்தொருலக்ஷம் (16,61,00,000). இதற்கு ஆசியா கண்டத்திலும் அறுபத்-தைந்து லக்ஷம் (65,00,000) சதுரமைல் விஸ்தீரணமுள்ள நாடுகளிருக்கின்றன. இதற்கு முன் ஸேண்ட்பீடர்ஸ்பர்க் என்று சொல்லப்பட்ட பீட்ரோக்ராட் பிரதான பட்டணம். இதை ஆள்பவர்க்கு ஜார் என்று பெயர். இவரைச் சக்ரவர்த்தி யென்-பர். இவர் மற்றெந்தச் சட்டத்திற்கும் உட்படாது தமது இஷ்-டமே சட்டமாகக் கொண்டு தம் குடிகளை அரசாண்டுவரலாம். இப்பொழுது இந்த ராஜ்யத்திற்கு நிக்கோலஸ் என்பவர் சக்ர-வர்த்தி. இவர் 1868௵ மேமீ 6௳ பிறந்து, 1894௵ அக்டோபர்மீ 20௳ இந்நாட்டுச் சக்ரவர்த்தியாகப் பட்டாபி-ஷேகமடைந்து, அதே௵ நொவெம்பர்மீ 26௳ விக்டோரியா மகாராணியாரின் இரண்டாவது புதல்வியான அலீஸ் மாட் மேரி என்னும் ராஜகுமாரியின் மகளான அலெக்ஸாண்ட்ரா விக்-

டோரியாவென்னும் சீமாட்டியை மணந்தார். இவருக்கு நான்கு பெண்களும் ஒரு பிள்ளையு மிருக்கின்றனர். இவருடைய தாயாரும் நமது சக்ரவர்த்தியாரவர்களின் தாயாரும் ஸகோதரிகள். இவருடைய மனையாளும ஜெர்மனிய சக்ரவர்த்தியினது தம்பியின் மனையாளும் ஸகோதரிகள். இந்த ருஷிய சக்ரவர்த்தி கல்வியிலும நாகரிகத்திலும சிறந்தவர் : மிகவும் தயாளு.

இவரது முன்னோர் தமது குடிகளுக்கு நாட்டின் பரிபாலன விஷயத்தில் சுதந்திரம் கொடுக்க வெண்ணிக் குடிகளின் பிரதிநிதிகள் தமக்கு ராஜாங்க விஷயங்களை ஆராய்ந்து ஆலோசனை சொல்வதற்கு அதிகாரம் கொடுத்திருந்தார். இந்தப் பிரதிநிதிகளின் சபைக்கு டூமா என்று பெயர். இவரும் தம் குடிகளுக்கு இந்தச்சுதந்திரம் இன்னும அதிகமாகக்கொடுத்திருப்பதனால். இவர் யாவராலும மிகக அன்புடன் மரியாதை செய்யப்படுகின்றனர்.

இந்தச் சக்ரவர்த்தியினிடம் இப்பொழுது குதிரைப்பட்டாளங்களும் காலாட்படைகளும் சேர்ந்து எழுபது லக்ஷம் (70,00,000)போர்வீரர் சித்தமாக விருக்கின்றனர். அவர்களில் இருபது லக்ஷம் (20,00,000) பேர் மாத்திரமே ஐபாயிரம் (5,000) பீரங்கிகளுடன் இப்போழ்திய யுத்தத்திற்கு முனைந்து சென்றிருக்கின்றனர். மிகுதிச் சைனியம இப்படியே இருபது இருபது லக்ஷம கொண்ட பகுதிகளாகப் பீரங்கிகளுடன் தனித்தனிக் கும்பலாகச் சித்தமாக இருக்கின்றது. அன்றியும், இவரிடம் தற்சமயம் சண்டைக்கப்பல்களும் நீர்முழ்கிக்கப்பல்களுமாக 159 கப்பல்கள் நூதன விசித்திர யந்திரங்களுடனும், அநேகமாயிரம் பீரங்கிகளுடனும, 59,500 வேலைக்காரருடனும் யுத்தத்திற்குச் சித்தமாயின. ஏரோப்ளேன் ஆகாயக்கப்பல் முதலியவை சேர்ந்து 818 தற்கால யந்திரசூக்ஷ்மங்களுடன் தயாராயின.

இந்தச் சக்ரவர்த்தியார் தமது நாட்டைச் சேர்ந்த ஜாதி-

யாராகிய ஸெர்வியா தேசத்துக் குடிகளின் க்ஷேமத்தை நாடி-னவராகி அவர்கள் மேல் அக்கிரமமாக யுத்தம் தொடுத்த ஆஸ்-ட்ரிய கவர்ன்மெண்டாரின் கர்வத்தை யடக்க வெண்ணிப் பெரிய தொரு சைனியத்தைத் தயார்செய்துகொண்டிருந்தார். இடை-யில், ஜெர்மனிய சக்ரவர்த்தி இவர்மேல் சென்ற வருஷம் ஆகஸ்டு மாதம்முதல்தேதி யுத்தத்திற்கு ஆரம்பித்துவிட்டார்.

## iii THE COMPACT : ஏற்பாடு

இப்படி அநாவசியமாய் யுத்தத்தை ஏற்படுத்திய ஜெர்மனிய ஆஸ்ட்ரிய சக்ரவர்த்திகளிருவரையும் இனி வெளிக்-கிளம்பவொட்டாமல் நன்றாகப் புடைத்து அவர்களது கர்-வத்தை அடக்கி ஐரோப்பாவிற்கு இனி இப்படிப்பட்ட துன்-பம் நேராமற் காத்துக் குடிகட்கும் மற்றைச் சில்லரை ராஜாங்-கத்தார்க்கும் சந்தோஷத்தை யுண்டாக்குமெண்ணங்கொண்டும், உடன்படிக்கைகளினால் ஒருவர்க்கொருவர் கட்டுப்பட்டிருப்பத-னாலும், ஆங்கிலேயர் ப்ரென்சுக்காரர் ருஷியர் ஆகிய இம்மூவ-ரும் ஒன்றுசேர்ந்து தமது கூட்டுச்சைனியங்களைச் சமயத்திற்-குத் தக்கவாறு நடத்தி யுத்தஞ்செய்து பெல்ஜியத்துக்கும் ஸெர்வியாவுக்கும் சகாயஞ்செய்யத் தீர்மானித்தனர்.

இவர்கள் யுத்தகாலத்தில் ஒருவர்க்கொருவர் சமயத்திற்-குத் தகுந்தபடி சகாயம்செய்துவரவேண்டுமென்றும், ஒருவரை யறியாது ஒருவர் எதிரிகளின் சமாதானவார்த்தைகளுக்கு உட்-படக் கூடாதென்றும் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கின்றனர். ஐரோப்பா முழுவதையும் தனிக் கொடைக் கீழ்த் தானே அர-சாளவேண்டுமென்னும் பேராசையினால் இம்மஹா யுத்தத்தை மூட்டிவிட்ட ஜெர்மனியக் கெய்ஸருக்கு எதிரிகளாய் ஆங்கிலே-யர் தம் கூட்டாளிகளுடன் தருமத்தையும் சத்தியத்தையும் நிலைநாட்டித் தீனர்களைக் காப்பாற்றுவான் வேண்டி யுத்தத்-தில் தலையிட்டுக்கொண்டனர்.—'தருமம் தலை காக்கும்' எனு-முண்மை தவறிடுமோ ?

## 8. COMBINED STRENGTH & RESOURCES

### கூட்டுப்பலமும் ஆதாரங்களும்

பிரெஞ்சுக்காரரும் ருஷியரும் ஒன்றுசேர்ந்து வெளி-நாடுகளிலிருந்து வரும் சைனியபலத்துடன் ஒருகக்ஷியாகி முன்னமே ஏராளமான சைனியத்தையுடைய ஆங்கிலேயருடன் கூடியபலத்திற்கு எதிரிகளாகிய ஜெர்மனி ஆஸ்ட்ரியா சக்ரவர்த்திகள் ஒன்றுசேர்ந்து யுத்தகளத்திற் சேர்ந்திருக்கும் பலமானது மிருகேந்திரனைப்போராற்றல்படைத்ததொரு ஸிம்ஹத்திற்கும் கடும்பசி கௌவியதோர் கொடிய வ்யாக்ரத்திற்கும் போன்றதாகும். கூட்டாளிகளுடன் சேர்ந்த நமது ஆங்கிலேயரின் மொத்த குதிரைப்பட்டாளமும் காலாட்படையும் சுமார் ஒருகோடி சைனியமாகின்றன. எதிரிகளின் படையோ எண்பதுலக்ஷம (80,00,000) போர்வீரர்களானதனால், ஏறக்குறைய இவ்விரு கக்ஷியாரதும் ஸமபலமென்னலாம். ஆங்கிலேயக் கூட்டுக் கப்பற்சைனியங்களில் 1,282க்கு மேற்பட்ட கப்பல்கள் இரண்டரைலக்ஷம் வேலையாட்களுடனும் அநேக ஆயிரக்கணக்கான பீரங்கிகளுடனும் 2,990 ஆகாயக்கப்பல்களுடனும் பிரகாசிப்பதுமன்றி, இன்னும் வெளிநாடுகளிலிருந்து அநேகம் கப்பல்களும் பீரங்கிகளும் குதிரைப்பட்டாளங்களும் காலாட்படையும் ஆங்கிலேயரிடம் சென்றடைந்து கொண்டிருக்கின்றன.

எதிரிகளுக்கோ 358 கப்பல்களும், 1,468 ஆகாய யந்திரங்களும், சுமார் 1,50,000-த்துக்கு மேற்பட்ட கப்பல்வேலைக்காரரும் உண்டு.

இவ்விரண்டு கக்ஷிகளின்பலாபலத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்தில், எதிரிகளின் பலமானது ஆங்கிலேயரின் கூட்டுப்பலத்தில் ஏறக்குறைய மூன்றில் இரண்டு பங்கிற் கதிகமிருக்கின்றது; எனினும், ஆங்கிலேயருக்கு வெளிநாடுகளிலிருந்து

சகாயம் கிடைப்பதுபோல் எதிரிகளுக்குக் கிடையாது. ஜெர்மனியார்க்கோ தமது குடிகளை யுத்தத்திற்கு வரவேண்டியிருப்பதனால், செல்லச் செல்ல அக்குடிகளின் விவசாயம் கெட்டு ஆகாராதிகள் கிடைப்பது அரிதாகி, நாட்டிற்குக் கஷ்டம் சம்பவிக்கலாம். யுத்தம் வெகு காலம் நடக்குமாயின், ஜெர்மனியார் கையிலிருப்பவற்றை யெல்லாம் செலவழித்தபின் பட்டினியால் வருந்தவேண்டி நேரிடும்.

நமது சக்ரவர்த்தியாருக்கும் ஜெர்மனியாருக்கும் யுத்தம் ஆரம்ப மாய்விட்டதெனக் கேள்விப்பட்ட இந்தியரும் வெளி நாட்டினரும் அங்கங்கிருந்து தங்கள் தங்களுக்குக் கூடுமான உதவி செய்து தமது ராஜாபிமானத்தைக் காட்டத் தொடங்கினர். நமது சக்ரவர்த்தியவர்களின் குடிகள் தமது அரசனுக்கு இப்படிப்பட்ட சமயத்தில் சகாயஞ்செய்யக் கடமைப்பட்டிருப்பது ஸஹஜமே யாயினும், அவரது குடிகளல்லாத தென் ஆப்பிரிக்காவிலுள்ள டச்சுக்காரரும், அமெரிக்கா தேசத்தில் ஓர் வகுப்பினராகிய அறுபதினாயிரம் (60,000) குடிகளும், போர்ச்சுகல் தேசத்தாரும், இட்டலி தேசத்தாப் பலரும் நமது சக்ரவர்த்தியார்க்குச் சகாயம் செய்வதாக முன்வந்திருப்பதை நோக்க, நமது ஆங்கிலேய அரசாட்சியின் நியாயமும் நடுவுநிலைமையும் சத்தியநெறியுமே காரணமென்று நன்கு புலப்படும்.

இந்த யுத்தத்திற்குச் சகாயமாகக் கனடா நாட்டிலிருந்து 20,000 போர்வீரரும், 21,000 காலாட்படையும், 3,000 பெரிய [illegible]ண்டுகளுடன் 27 பீரங்கிகளும், 500 குதிரைப்பட்டாளமும், [illegible]000 வைத்தியர்களும், அநேக வேலைக்காரரும் அனுப்பப்பட்டிருக்கின்றனர். தவிர, இன்னும் ஒருலக்ஷம் போர்வீரர்கொண்ட சைனியமும், 300 யந்திரபீரங்கிகளும், 7,500 குதிரைகளும் வருவதற்குத் தயாராயிருக்கின்றன. இப்படி யனுப்பப்பட்ட தம் நாட்டுச்சைனியங்களுக்குப் பிடிக்கும் செலவைக் கனடாக்காரர் தாமே ஏற்றுக்கொள்வதும் தவிர, யுத்த செலவிற்காகப்

பதினைந்துகோடி (15,00,00,000) ரூபாய் அனுப்புவதாகவும் தெரிவித்தனர் : அன்றியும், பத்துலக்ஷம் (10,00,000) மூட்டைக் கோதுமையும் அனுப்பியிருக்கின்றனர். அந்நாட்டு ஸ்திரீகள் தங்கள் செலவால் ஓர் ஆஸ்பத்திரிக்கப்பலும் அனுப்ப உத்தேசித்திருக்கின்றனர்.

டொரான்டோ நகரத்திலிருந்து ஒன்பதுலக்ஷம் (9,00,000) ரூபாயும், ஒன்டேரியோ மாகாணத்திலிருந்து பதினைந்துலக்ஷம் (15,00,000) ரூபாயும், ந்யூபௌண்ட்லண்டிலிருந்து 1,000 காலாட்படையும் 1,000 கப்பற்காரரும், ஆஸ்ட்ரேலியாவிலிருந்து 20,000 போர்வீரரும் பல யுத்தக்கப்பல்களும் ஒருலக்ஷத்து ஐம்பதினாயிரம் (1,50,000) ரூபாயும், ந்யூஜீலண்டிலிருந்து 8,000 பேர்கொண்ட சைனியமும் அதன் செலவிற்காக 90,000 ரூபாயும் ஆங்கிலேய சேனையின் செலவிற்காகப் பன்னிரண்டு லக்ஷம் (12,00,000) ரூபாயும், டர்பான் தேசத்திலிருந்து 1,95,000 ரூபாயும், நேட்டாலிலிருந்து ஓர் குதிரைப்பட்டாளமும 75,000 ரூபாயும, இந்தியாவின் பொது ஜனங்களிடத்திலிருந்து எழுபத்தைந்து லக்ஷம் (75,00,000) ரூபாயும், இன்னும் பற்பல நாடுகளிலிருநது ஏராளமான பொருட்சகாயமும் படைச்சகாயமும் வந்துகொண்டிருக்கின்றன.

எட்வர்ட் தீவிலிருந்து ஒரு லக்ஷம் (1,00,000) மூட்டைத் தினைமாவும், க்விபெக் தேசத்திலிருநது நாற்பது லக்ஷம் (40,00,000) ராத்தல் பாற்கட்டியும், நோவோஸ்கோஷியாவிலிருந்து ஒரு லக்ஷம் (1,00,000) டன் நிலக்கரியும், ஆல்பர்டவிலிருந்து 8,500 டன் பார்லி மாவும், கொலம்பியாவிலிருந்து ஒரு லக்ஷம் (1,00,000) பீபாய் அத்திப்பழங்களும், சிலோன் தீவிலிருந்து பத்துகோடி ராத்தல் எடையுள்ள தேயிலையும், மோரீஷஸிலிருநது இருபதுலக்ஷம் ராத்தல் எடைச் சர்க்கரையும், இப்படி விதம்விதமாக அநேக ஆகாராதிகள் வந்து சேர்கின்றன. அநேக இந்திய அரசர்கள் தமது நாடுகளின் வரும்-

படி யாவற்றையும் கொடுத்துத் தாமும் தமது சைனியங்களிற் சிலவற்றுடன் யுத்தகளத்திற் போய்ச் சேர்ந்திருக்கின்றனர்.

இங்கிலாந்தின் கீழ்நாடுகளில் ஜெர்மனியாரால் கலகம் உண்டாகாதபடி (1905ளு ஆகஸ்டுமீ ஏற்பட்டு, மறுபடியும் 1911-ம் வருஷம் புதுப்பித்துக்கொண்ட உடன்படிக்கையின்படி) ஜப்பான் தேசத்தினர் கடல்களைக் காத்துவருகின்றனர். டிபெட் தேசத்துப் பௌத்தமதத்தாரின் லோககுருவும் அரசருமாகிய டலாய் லாமா என்பவர் 1,000 டிபெட்டுத் துருப்புக்களை அனுப்புவதாகத் தெரிவித்திருக்கின்றார்.

நமது சக்ரவர்த்தியின் மைத்துனரும் டெக் தேசத்துச் சிற்றரசருமான அலெக்ஸாண்டர் என்னும் ராஜகுமாரர் ஆங்கிலேயபடைகளிற் சேர்ந்து யுத்தம் செய்யப்போயிருக்கின்றனர். முன் போர்ச்சுகல் தேசத்து எமிலீ என்னும் பெரிய மகாராணியாரும் வெஸ்ட்மின்ஸ்டர் சீமாட்டியும் இன்னும் பல பெரிய குடும்பத்துப் பெண்டிரும் தனிகர்வீட்டு ஸ்திரீகளும் காயமடைபவர்க்குச் சிகிச்சைசெய்வதற்காக யுத்தமுனைக்குப் போயிருக்கின்றனர். நமது சக்ரவர்த்தியாரின் ஸ்வதேசத்திலேயே குடிகள் 22½ கோடி ரூபாய் யுத்தநிதிகளுக்குக் கொடுத்ததுமன்றி, பத்துலக்ஷம் (10,00,000) பேர் ராணுவத்தில் சென்று அமர்ந்தனர். இன்னும், மணிநேரமொன்றுக்கு 400 பேர்க்குமேல் விழுக்காடாய்ப் பட்டாளத்தில் சென்று அமர்ந்துகொண்டிருக்கின்றனர். இப்படி ஏராளமான பலவகைச் சகாயங்கள் தினம் தவறாமல் அதிகரித்துக்கொண்டேயிருக்கின்றன. யுத்தமானது இனி எத்தனை வருஷம் நடந்தாலும், நமது ஆங்கிலேயருக்குச் செலவுசெய்வதற்கு வேண்டிய திரவியத்திற்கும் யுத்தஞ்செய்வதற்கு வேண்டிய படைகட்கும் குறைவில்லை.—இந்த யுத்தத்தினால் கஷ்டமென்பதே தெரியவராது. நமது அரசாங்கத்தார் அவ்வளவு வளம்பொருந்தியவர்களென்பதை யாவரும் அறியவேண்டும்: ஆதாரமற்று மடைமையி-

னூலும் தூரபிமானத்தினூலும் வெளிப்படும் சந்தைச் சமாசா-ரங்களைக் கேட்டு மருண்டு மயங்கவேண்டா.

---

## 9. THE WAR

## யுத்தம்

இவ்வளவு தளவளமும் தனவளமும் படைத்த நமது ஆங்கிலேயர் யுத்தத்திற்கு ஆரம்பித்த வுடனே, அமெரிக்காவில் யுனைடெட் ஸ்டேட்ஸ்காரர் தாம் மத்தியஸ்தமாக விருக்கத் தீர்மானித்தனர். மற்றைச் சில்லரை நாடுகள் இப்பொழுது மத்தியஸ்த நிலையிலிருந்தபோதிலும், கூடிய சீக்கிரத்தில் அவற்றிற் பெரும்பான்மையன ஆங்கிலேயருடனே சேர்ந்துவிடுமென்பதற்கு இடமுண்டு.

ஆஸ்ட்ரியாவும் ஜெர்மனியும் ஒன்று சேர்ந்து யுத்தத்திற்கு ஆரம்பிக்க, இங்கிலாந்து, ப்ரான்ஸ், ருஷியா, பெல்ஜியம், ஸெர்வியா, ஜப்பான் தேசங்கள் ஒன்று சேர்ந்து பிரதிகக்ஷியாய் எதிர்க்கின்றன. இவர்கள் இவ் யுத்தத்தை இவ்வளவு சீக்கிரத்தில் எதிர்பாராததனுல், எதிரிகளாகிய ஜெர்மனியாரது சைனியம் இவ்வளவு தொகையினது, இன்னின்ன விடங்களில் சேர்க்கப்பட்டுள்ளது, இவ் விப்போது எதிர்க்குமென்பது உடனே அறிந்துகொள்ளக் கூடவில்லை. ஜெர்மனியார் மட்டிலும் வெகுநாளாய் யுத்தம் தொடுப்பதில் கருத்துள்ளவர்களாய் அதற்கு வேண்டிய முயற்சிகள் பலவும் செய்திருந்தனர். இவர்கள் அநேக நவீன யுத்தோபகரணங்களைத் தயார் செய்துவைத்திருந்தனர். சைனியம் மிகுதியும் பலமானது. இவர்களைக் கடும்போர் செய்துதான் வெல்லவேண்டும். ஆனுல், அக்ரமமாய் இவர்கள் யுத்தம் துவக்கினராதலின், இறுதியில் ஜயம் பெறுவது இயலாது. தகுந்த காரணமின்றியே ஆஸ்ட்ரிய இளவரசனது மரணத்தை யோர் வியாஜமாகக் கொண்டு

யுத்தம் தொடங்க, தருமமேற்கொண்டு நமது ஆங்கிலேயர் இதில் பிரவேசித்தனராக, இவர்களே ஜயமடைவார்க ளென்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஆங்கிலேயரது படைப் பலமும் இப்பொழுது அதிகமாயிற்று.

நமது சக்ரவர்த்தியார் தமது கடற்சைனியத்திற்கு ஸர் ஜெல்லிகோ என்பவரையும், கரைச்சைனியத்திற்கு ஸர் ஜான் ப்ரேன்ச் என்பவரையும் அதிபதிகளாக நியமித்துக் கிச்னர் பிரபுவை யுத்தமந்திரியாகவும் ஏற்படுத்தினார்.—ப்ரெஞ்சுக்காரரின் தரைப்பட்டாளங்களுக்கு ஜாபர் என்பவரையும், தண்ணீர்ப் பட்டாளங்களுக்குப் பாணீடீலா பேயரீ என்பவரையும் அதிபதிகளாக நியமித்தனர்.—ருஷிய படைகளுக்கெல்லாம் நிக்கோலஸ் என்னும் பெரிய பிரபுவானவர் அதிபதியாக நியமிக்கப்பட்டனர்.—பெல்ஜியத்துப் படைகளுக்கு அதன் அரசனான ஆல்பர்ட் பிரபுவே அதிபதியாயினர்.—ஜெர்மனிய சக்ரவர்த்தி தமது கடற்சைனியங்களுக்கு வான் இங்கநோல் என்பவரை அதிபதியாகவும், கரைச்சைனியங்களுக்கு ஹேல்மெட் வான் மோல்ட்க் என்பவரை அதிபதியாகவும் நியமித்தும் தமது சைனியங்கள் யாவற்றிற்கும் தாமே பெரிய அதிபதியாயினார்.—இங்ஙனமாக யாவர் சைனியமும் தயாராகி, ருஷியரும் ஸெர்வியரும் ஒன்றாக ஆஸ்ட்ரியாவின் பேரிலும், ஆங்கிலேயரும் ப்ரெஞ்சுக்காரரும் ஒன்றாக ஜெர்மனியின் பேரிலும் எதிர்த்து யுத்தஞ் செய்ய, பெல்ஜியத்தார் தம் நாட்டில் துராகிருதமாய்ப் பிரவேசித்த ஜெர்மனியாருக்கு வழி விடாது தடுத்து அவர்களது சைனியங்களை வெகு சின்னாபின்னப்படுத்தினர்.

ஆங்கிலேயரும் ப்ரெஞ்சுக்காரரும் ஜெர்மனியாருடைய டோகோலாண் டென்னும் நாட்டைப் பிடித்துக்கொண்டும், ஆஸ்ட்ரியாவுடன் ஏட்ரியாடிக் கடலில் கப்பற் சண்டைசெய்து அவர்களது கப்பல்களை மூழ்கடித்தும், அல்ஸெஸ்லொரேன் என்னும் நாட்டின் சில பாகத்தை மறுபடியும் கைப்பற்றியும்,

மூல்ஹௌஸெனிலிருந்து ஜெர்மனியாரைத் துரத்தியும், ப்ரா-
ன்ஸ் தேசத்தில் நுழையும் ஜெர்மனியாரைப் பல விடங்களில்
அதிக மும்முரமாய் எதிர்த்து நாசப்படுத்தியும், சமயத்திற்
கேற்றவாறு மிக்க விமரிசையாய்ப் பகைவரைத் தாக்கி அவர்-
களில் அநேகரைக் கைதிகளாகப் பிடித்து வைத்திருக்கின்றனர்.

ருஷியரோ ப்ரஷ்யாவில் பிரவேசித்து ஜெர்மனியரை
வெருட்டி யோட்டி அவர்களது பீரங்கிகளைக் கைப்பற்றினர்:
கலீஷியாவில் நுழைந்து பெரிய யுத்தம் செய்து 80,000 ஜெர்-
மனியாரையும் ஆஸ்ட்ரியரையும் கைதிகளாக்கித் தமது நாட்-
டிற்கு அனுப்பினர்: ஆஸ்ட்ரியாவின் உட்பாகத்தில் நுழைந்து
கடும்போர் விளைத்தனர்: ஸெர்வியருடன் கலந்து போஸ்னியா-
வில் பெரும்போர் புரிந்தனர்: மாண்டிநீக்ரோ வென்னும்
தேசத்தாரைத் தம்முடன் சேர்த்துக்கொண்டு போல்ஜுநிட்ஜா
என்னுமிடத்தில் ஆஸ்ட்ரியரை முறியடித்தனர்: ஜெர்மனிக்-
குள் பிரவேசிக்க வேண்டுமென்று அதன் கிழ எல்லைக்கு
20 மைல் சமீபத்திற்போய்ச் சேர்ந்துவிட்டனர். இவ்வாறாக
இவர்கள் எதிரிகளை த்வம்ஸம் பண்ணி எங்கும் இரத்தம் ஆறு-
களாகப் பெருகப் பெரும்போர் புரிந்துவருகின்றனர்.—

ஜெர்மனியரோ பெல்ஜியத்தில் பெருங்கொலை செய்து
வீடுகளை எரித்துக் கிராமங்களைக் கொள்ளையடித்துப் பெரிய
பட்டணங்களை நாசஞ் செய்து, ப்ரான்ஸ் தேசத்திற்குள்
நுழைந்து அதன் தலைநகராகிய பாரிஸ் பட்டணத்தின் சமீப
மாகச் சென்று பிறகு இருபது மைல் தூரத்திற் கப்பால் ஓடிப்
போய் அங்கிருந்து பெரிய யுத்தம் நடத்திச் சில பட்டணங்க-
ளையும் கோட்டைகளையும் பிடித்துத் தமது சைனியங்களை
அங்கு நிறுத்தினர். பிறகு ஆங்கிலேயர் ஜெர்மனியாரை
யெதிர்த்துத் தோற்கடித்து அப்பட்டணங்களைக் கைப்பற்றி-
னர். ஜெர்மனியார் மறுபடியும் அவற்றைப் பிடித்தனர். முடி-
வில் பிரெஞ்சுக்காரர் ஜெர்மனியரை முதுகிட்டோடச் செய்த-

ணர். இப்படிப் பல இடங்களில் ஜயாபஜயங்கள் மாறிமாறி யுண்டாகின்றன. ஜெர்மனியார் திடீரென யுத்தம் துவக்கிவிட்டதால் ப்ரான்ஸ்தேசத்தில் சிலவிடமும் பெல்ஜியத்தின் பெரும் பாகமும் கைப்பற்ற இயன்றது. ஆயினும், இது ஜெர்மனியார்க்கு ஸ்திரமான வெற்றியென்று கருதவேண்டா.

ஆங்கிலேயரும் தமது இரண்டு லக்ஷம் படைகளுடன் ப்ரான்ஸ் தேசத்தின் வட எல்லையி லிறங்கி, இந்தியாவிலிருந்து வந்த 1,00,000 சைனியங்களுடனும் வெளிநாடுகளிலிருந்து வந்த 1,00,000 சைனியங்களுடனும் தக்குவான இடங்களில் தங்கி எதிரிகளை வெகுவாகப் பறக்கடிக்கின்றனர்.

இந்த யுத்தத்தில் இதுவரையில் 6,04,000 ஜெர்மனியக் கைதிகள் பிடிக்கப்பட்டுப் பிரான்ஸ் தேசத்தில் சிறை வைக்கப் பட்டிருக்கின்றனர். சிலர் ருஷியாவுக்குக் கொண்டுபோகப்பட்டனர்: இன்னும் சிலர் ஆங்கிலேய வெளிநாடுகளில் பத்திரப்படுத்தப்பட்டனர். நம்மவர்களில் சுமார் 5,60,000 பேர் ஜெர்மனியரால் பிடிக்கப்பட்டிருக்கின்றனராம். இந்த யுத்தத்தினால் அல்லும்பகலும் இடைவிடாது இரத்தவெள்ளம் பெருகிப்போகின்றது. நாம் பாரத யுத்தத்தைக் கேள்விப்பட்டிருக்கின்றோமே யொழியப் பார்த்ததில்லையே! இப்பொழுது நடக்கும் யுத்தமோ அதைவிட மிகவும் பலமானதாகத் தோற்றுகின்றது. இருதிறத்தினின் சைனியமும் நின்று யுத்த ஸங்காரங்கள் கூடியிருக்கும் ஒரு களத்தின் விஸ்தீர்ணம் 350 மைல் (அதாவது சென்னையிலிருந்து மதுரைவரையிலுள்ள தூரம்). மற்றது சுமார் 500 மைல் விஸ்தீர்ணமுள்ளது. இதனால் இதுவரையிலுமே இருதிறத்தினர்க்கும் அளவிறந்த உயிர்ச்சேதமாயிற்று. அநேக ஆயிரம் வீரர் காயமடைந்தனர். அநேகர் இருகக்ஷியாராலும் கைதிகளாக்கப்பட்டனர்.

இந்த யுத்தத்தில் ஜெர்மனியாருக்கு நிகழ்ந்த நஷ்டம் அளவற்றது. ஆங்கிலேய சைனியத்திற்கு நாளொன்றுக்கு

மூன்றுகோடி (3,00,00,000) ரூபாய்க்குமேல் செலவாகின்றது. பிரெஞ்சுக்காரருக்கும் இத்தொகைக்குச் சற்றுமேல் பிடிக்கும். இதற்கும் சற்று அதிகமாகவே ருஷியருக்குச் செலவாகும். ஜெர்மனியும் மற்றவர்களைப்போலவே நாளொன்றுக்கு அதிக பணம் செலவழிக்க வேண்டியிருக்கின்றது. முந்திய மூவர்க்கும் பணக்குறைவென்னும் விசாரமே யில்லை. ஜெர்மனியார்க்கு மாத்திரம் நாட்டிலுள்ள திரவியம் முற்றும் போதவில்லை. அவரது தற்கால நிலைமையோ வெகு பரிதாபமானது: நாட்டில் தானியம் சேகரம்செய்யக் குடிகளில்லை: பயிர் விருத்திசெய்யப் பொழுதில்லை; சைனியங்களுக்கு ஆகாரம் தயார்செய்ய நாட்டின் விளைவு போதவில்லை: வெளியிலிருந்து சகாயம வர வழியில்லை: கையிலிருந்த பணமும் நாளுக்குநாள் குறைந்துவிட்டது: தமது ராஜ்யத்தில் ஏழைக்குடிகளால் சேவிங்க்ஸ் பாங்கியில் கட்டப்பட்டிருந்த சுமார் இரண்டாயிரத்திருநூற்றைம்பது கோடி(2,250,00,00,000)ரூபாய்த் தொகையைத் தமது யுத்தசெலவிற்காக அநியாயமாய் ஏழைகள் வயிறெரியக் கைப்பற்றிக் கொண்டனர். யுத்தத்திற்கோ இன்னும் அதிக பணம் தேவை. யுத்தசாமான்களும் நாளுக்குநாள் குறைந்துவருகின்றன. இவர்கள் என் செய்வர்? பாவம்! கர்வித்து நெறிநீங்கி மேற்கொண்ட அநியாயப்போரின் பலனை யநுபவித்துச் சீரழிவது தகுதியே.

இந்த யுத்தமோ நாளுக்கு நாள் விருத்தியாகி அதிக மும்முரமாகவே நடந்துவருகின்றது. இதில் நமது ராஜப்பிரதிநிதியின் குமாரன் மரணமடைந்தான். பம்பாய்க் கவர்னரின் புதல்வன் காயமடைந்து தனது சைனியத்துடன் எதிரிகளால் பிடிக்கப்பட்டிருக்கின்றான். நமது இளவரசர் குதிரைப்பட்டாளத்தில் சேர்ந்து யுத்தஞ்செய்துவருகின்றார். ஆங்கிலேய நாட்டின் மந்திரியாகிய ஆஸ்க்வித் துரையின் புதல்வனும் யுத்தமுனைக்கு வந்திருக்கின்றான். ஜெர்மனிய சக்ரவர்த்தியின் ஸகோதரியின் புதல்வரில் இருவர் மாண்டுபோயினர். ஜப்பான்

தேசத்தார் ஜெர்மனியாரின் ஸ்வாதீனத்திலிருந்த கியாசௌ என்னும் தீவைப் பிடித்துக்கொண்டனர். ஆஸ்ட்ரேலியா நாட்டினர் பிஸ்மார்க்குத் தீவுகளையும் ந்யூகினியையும் பிடித்துக்கொண்டனர். ஜெர்மனியைச் சேர்ந்த கிழ ஆப்ரிகா தேசம் எதிரிகளால் பிடிக்கப்பட்டது. அவர்களது அநேகம் யுத்தக் கப்பல்கள் நாசமடைந்தன. அநேக வர்த்தகக்கப்பல்கள் நம்மவர்களாலும் அவர்களது கூட்டாளிகளாலும் பிடிக்கப்பட்டன. ஜெர்மனியாருக்கு ஆகாரமும் பணமும் கொண்டு செல்லும் சில கப்பல்கள் ஆங்கிலேயரிடம் அகப்பட்டுவிட்டன. ஜெர்மனியார்க்குச் சகாயமாக வந்த துருக்கி நாட்டினர் பல விடங்களில் அபஜயமடைந்து தமது நாடுகளை இழக்கின்றனர். ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தி அதைரியப்பட்டுத் தளர்ந்துவிட்டார். ஜெர்மனியச் சைனியம் தளர்வடைய வாரம்பித்துவிட்டது. ஆனல், கெய்ஸர் மட்டிலும் தமது தைரியத்தை இன்னும் விட்டவால்லர்.

---

## 10. TURKISH TREACHERY

## துருக்கியின் துரோகம்

துருக்கி ராஜ்யம் ஐரோப்பாவின் தென்கிழக்கு ஓரத்திலிருக்கின்றது. இது ஓர் மகம்மதிய ராஜ்யம்: பதினைந்துலக்ஷத்து இருபத்தோராயிரம (15,21,000) சதுரமைல் விஸ்தீரண முள்ளது. இதன் ஜனத்தொகை மூன்றுகோடியே அறுபத்தேழுலக்ஷம் (3,67,50,000). இதற்குக் கான்ஸ்டான்டிநோபில் பிரதானபட்டணம். இதை யாண்டுவருபவருக்குச் சுல்தான் என்று பெயர். இப்பொழுது மகம்மத் இமாம் ஸிட்டிக் உல் இஸ்லாம் பாக்ஷா என்பவர் இந்த நாட்டிற்குச் சுல்தானாயிருக்கின்றனர். இவர் 1844-ம் வருஷ நொவெம்பர் மீ

3டை ஜனனமாகி, 1909-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 27-ம் தேதி பட்டத்துக்கு வந்தார். இப்போது இவருக்கு வயது எழுபது.

இந்த ராஜ்யத்திற்கு ஆங்கிலேயர் அநேக தடவைகளில் மிகுதியும் சகாயம்செய்து பற்ற அரசர்களாற் கெடுதி உண்டாகாத ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றனர். இந்தச் சுல்தான் ஆங்கிலேயரிடத்துத் தான் அடைந்துள்ள நன்மைகள் பலவற்றையும் மறந்தவனாய் இப்போது ஜெர்மனியாருடன்சேர்ந்து ஆங்கிலேயருக்கு விரோதமாக நடக்க ஆரம்பித்துவிட்டான்.

ஐரோப்பாவில் யுத்த மாரம்பமானதும் ஆங்கிலேயரிடமிருந்தும் ப்ரென்சுக்காரரிடமிருந்தும் தப்பியோடிவந்த கோபின பரேஸ்லாமென்னும் இரண்டு ஜெர்மனிய யுத்தக்கப்பல்கள் துருக்கி தேசத்து டார்டநெல்ஸ் ஜலசந்தியில் பிரவேசித்தன. துருக்கி சுல்தான் பத்தியஸ்தநாட்டினரின் நிபந்தனைப்படி அவற்றை 24 மணிக்குள்ளாகத் தனது துறையிலிருந்து வெளிப்படுத்தியோ அல்லது அங்கிருந்த ஜெர்மனிய வேலைக்காரரையும் அதிகாரிகளையும் நீக்கி அவற்றைத் தன் சுவாதீனப்படுத்தியோ இருந்திருக்கவேண்டியதை விட்டு, தன் அதிகாரத்திற்குட்பட்ட அந்த ஜலசந்தியிலேயே அக்கப்பல்களை வெகுநாளாக இடங்கொடுத்து நிறுத்திவைத்து, இறுதியில் அவைகளைத் தான் விலைக்கு வாங்கிவிட்டதாகச் சொல்லி ஜெர்மனிய உத்தியோகஸ்தரை இருந்தவிடங்களிலேயே சௌக்கியமாய் நிறுத்திவைத்தான். இது செய்தது நிபந்தனையின்படி பிழைப்பானது. சுல்தான் இன்னும் துருக்கிக் கப்பற்படைகளுக்கு இதுவரையிலும் அதிகாரியாக விருந்த ஆங்கிலேய உத்தியோகஸ்தரொருவனை வேலையினின்றும் நீக்கிவிட்டான்: அவனுக்கு பிரதியாக ஜெர்மனியனொருவனை நியமித்துவிட்டான்: வருஷமொன்றுக்குப் பதினையாயிரம் (15,000) வர்த்தகக் கப்பல்கள் சாதாரணமாக மத்தியதரைக்கடலிலிருந்து கருங்கடல் வழியாக ருஷியாவுக்குச் செல்ல ஆதாரமாயிருக்கின்ற 47 மைல்

நீளமும் மூன்றுமைல் அகலமுமுள்ள டார்டனெல்ஸ் ஜலசந்தி முழுவதையும் வெடிமருந்துகளினால் நிரப்பி ஆங்கிலேய வர்த்தகக் கப்பல்கள் பிரயாணஞ்செய்வதற்கு அபாயமும் அசாத்தியமு மாக்கினான்: கடற்படையையும் கரைப்படையையும் தயார்செய்ய ஆரம்பித்தான்: அப்பெரிய ஜலசந்தியில் வெடிமருந்துகள் வைத்ததனால், சுமார் 70 ஆங்கிலேய வர்த்தகக் கப்பல்கள் அதைத்தாண்டி அப்புறம் போகமாட்டாமல் அங்கேயே நின்றுவிட்டன. அதனால் வர்த்தகம் தடைப்பட்டதுமன்றி, அங்குத் தங்கியிருந்த ஜெர்மனியாரின் அந்த யுத்தக்கப்பல்களிரண்டும் அவற்றை நாசப்படுத்துவதற்கான வழி உண்டாகிவிட்டது. ஆங்கிலேயர் மேற்சொன்ன ஜலசந்தியின் வழியாகக் கருங்கடலுக்குச் செல்லக்கூடாதென்றும் சுல்தான் வழிமறித்துவிட்டான். இவையாவும் மத்தியஸ்தமாயுள்ள நாட்டினர் செய்யத்தகுந்த வேலைகளல்ல. மேலும், பக்டாட் பட்டணத்திலும், மெஸபொடேமியா நகரத்திலுமுள்ள ஆங்கிலேயக் குடிகளைத் துருக்கி உத்தியோகஸ்தர் வெகு அவமரியாதையாகப் பேசி அவர்களது சகாயத்தாரையும் இழிவாக நடத்தினர். ஆங்கிலேயருடைய மேற்பார்வைக்குட்பட்ட ஈஜிப்ட் தேசத்தின்மேற் படையெடுக்க வெண்ணிச் சுல்தான் தளங்களைத் தயார் செய்தனன். இந்திய மகம்மதியரையும், துருக்கி மகம்மதியரையும் கிறிஸ்துவர்களுக்கு விரோதமாகக் கலகஞ்செய்யும்படி ஏவுதற்பொருட்டு ஷேக் அஜீஜ் என்னும் ஓர் தூஷணைத் தயார் செய்தனுப்பினான். அநேகம ஜெர்மனியார் அநுதினமும் யுத்த ஆயுதங்களையும் மற்றைச் சாமான்களையும் கான்ஸ்டான்டிநோபில் பட்டணத்தில் சேர்த்துக்கொண்டிருந்தனர். இவையாவும் சுல்தானுடைய முழுச் சம்மதத்தின்பேரிலேதான் நடந்திருக்கவேண்டும்.

இந்நாட்டரசன் வெகு நாளாகத் தனது ஜன்மசத்துருவான ஆஸ்ட்ரியாவுடன் இப்பொழுது உறவுகொண்டு ஜெர்ம-

னிக்குச் சகாயம் செய்தற்கு ஒப்புக்கொண்டான். ஆயினும், இந்நாட்டின் இளவரசனான இஜ்ஜிடீன் பாக்ஷா என்பவன் மட்டிலும் ஆதிமுதற்கொண்டு ஆங்கிலேயரின் பக்ஷமாகத்தான் சேரவேண்டுமென்று தீர்மானித்திருக்கின்றான். சில நாளைக்கு முந்தி, இந்நாட்டு அரசனும் மந்திரிகளும் இளவரசனும் அரண்மனையிற் கூடிச் சில அந்தரங்கவாலோசனைகள் செய்தனர். அச்சமயத்தில் இராணுவ மந்திரி என்வர்பே என்பவன் ஆங்கிலேயரைத் தூஷித்துப் பேசும் சமயத்தில், இளவரசன் அவனைத் தடுத்து ஆங்கிலேயரைப் புகழ்ந்துபேசினான். துருக்கி சைனியங்களுக்கெல்லாம் வான் ஸானடர்ஸ் என்னும் ஜெர்மனியானொருவன் தளகர்த்தனாக நியமிக்கப்பட்டிருக்கின்றான்: கூட, அவ்வந்தரங்க சபையில் இளவரசனது அபிப்பிராயத்திற்கு மாறாக அவ்விராணுவமந்திரி அந்த ஜெர்மனியானை அழைத்து ஏதோ சற்று ஆலோசனைசெய்கையில், அவன் இளவரசனை எதிர்த்துப்பேசினான். இளவரசன் தன் வேலைக்காரனை அந்த ஜெர்மனியானை வாய்திறக்கக் கூடாதெனத் திட்டஞ்செய்து சபைவிட்டு வெளியில் நீங்கும்படி சொல்ல, என்வர்பேக்கு அதிக கோபமுண்டு அவன் தன் ஆசனத்தை விட்டெழுந்து துப்பாக்கியைக் கைப்பிடித்தான். அவ்வகங்காரச் செய்கையைக் கண்ணுற்ற இளவரசன் தனது கைத்துப்பாக்கியினால் என்வர்பேயின் தொடையிலும் வான் ஸாண்டர்ஸின் தோளிலும் சுட்டுக் காயப்படுத்தினான்.

அன்று முதல் துருக்கி இளவரசனும் அந்நாட்டுப் பிரதான மந்திரியும் ஆங்கிலேயருக்குச் சகாயமாகவே தாங்கள் நடக்கவேண்டுமென்றும், ஜெர்மனியாரின் ஸஹவாஸமே கூடாதென்றும் சொல்லி அக்கோட்பாடுகளுக்காமோதிக்கும்படி சுல்தானைக் கட்டாயப்படுத்திவந்தனர். ஆனாலும், துஷ்டனாகிய என்வர்பேயின் துற்போதனையினால் நிஷ்காரணமாய் ஆங்கிலேயருக்கு விரோதமான அநேக துஷ்காரியங்கள் நடந்துவருகின்-

றனை. இவைகளுக்குச் சம்மதப்படாத பிரதான மந்திரி தமது வேலைக்கு ராஜீநாமா கொடுத்துத் தாம் விலகி நிற்க மூன்று முறை பிரயத்தனப்பட்டார். அதன்மேல் என்வர்பேயும் மற்ற ஜெர்மனி ராணுவாதிபரும் அவரை யுத்தசட்டத்தின்படி விசாரித்துச் சுட்டுக் கொன்றுவிடுவதாகத் தெரியப்படுத்தினர். அதனால் அவருடைய எண்ணம் கைகூடவில்லை.

துருக்கிநாட்டார் மத்தியஸ்தநிலைமையிலேயே யிருந்து, டார்டனெல்ஸ் வழியே வந்த இரண்டு ஜெர்மனிய யுத்தக்கப்பல்களிலுள்ள ஜெர்மனியவேலைக்காரரைத் தள்ளிவிட்டுத் துருக்கி வேலைக்காரரை அமர்த்தி ஜெர்மனிய ராணுவ உத்தியோகஸ்தரை நீக்கிவிடும்பக்ஷத்தில், இதுவரையில் நடந்துள்ள தப்பிதங்கள் யாவற்றையும் ஆங்கிலேயர் மறந்துவிடுவதுமன்றி, இனி யுத்தத்திற்குப் பிந்தியும் அந்தத் துருக்கிநாட்டின் கௌரவ நிலைமைக்கு யாதொரு குறைவும் உண்டாகாத ஏற்பாடுகளைச் செய்வதாகச் சொல்லினர். துருக்கி சுல்தான் ஜெர்மனியாரின் வசப்பட்டுத் தன் ஸ்வாதீனமிழந்து இந்நன்மொழிகளைக் கவனித்தானில்லை.

துருக்கி ராணுவவீரர் ஆங்கிலேயப் பிரதிநிதியின் மாளிகையிற் பறக்கும் ஆங்கிலக் கொடியைக் கிழித்துக் கொடிமரத்தை முறித்தெறிந்தனர்: ஆங்கிலேயருக்கு விரோதமாக இன்னும் பற்பல அக்கிரமங்கள் செய்தனர். சென்ற அக்டோபர்மீ 29வ கருங்கடல் ஓரமாயுள்ள ஒடெஸ்ஸா நகரத்தின் துறையிலிருந்த சில ருஷியகப்பல்களை நாசம் செய்தனர்: அது போதாமல் பிரென்சுக்கப்பல்களை யெதிர்த்து அதிக நஷ்டத்தை உண்டாக்கினர்: அதில் அநேகர் காயமடைந்து உயிர்நீத்தனர். எதிர்க்கக்ஷியுடன் சேர்ந்து தாம் யுத்தத்திற்குச் சித்தமாயிருக்கும் விஷயத்தைத் தெரியப்படுத்தாமலே துருக்கிதேசத்தார் இவை யாவும் நடத்தினர். துருக்கி சுல்தான் புறம்பாய் வார்த்தைகளினால்மட்டிலும் மித்திரன்போலவே நடித்து,

உள்ள காரியங்களினால் ஆங்கிலேயருக்கும் அவர்களது கூட்டாளிகளுக்கும் விரோதமாக அநேக தீக்காரியங்களை ஜெர்மனியாரின் ஏவுதலினால் செய்துவந்தனன். இனிச் சும்மாவிருந்துவிடின், தமது கௌரவத்திற்குக் குறைவுறுமென்று கருதி நமது ஆங்கிலேயர் சென்ற நொவெம்பர்மீ முதல்தேதி துருக்கியுடன் யுத்தத்திற்கு ஆரம்பித்துவிட்டனர். துருக்கி சுல்தான் இந்தச் சங்கதிகள் யாவும் தனக்குத் தெரியாமலே நடந்துவிட்டதாகச் சொல்லி இன்னும் பாசாங்கு செய்துவருகின்றான். இந்தியாவிலிருக்கும் மகமதியர் யாவரும் துருக்கியின் வஞ்சக நடத்தையில் வெகு வெறுப்படைந்திருக்கின்றனர்.

யுத்த ஆரம்பமான சில நாட்களுக்குள்ளாகிய இப்போதே இவர்கள் ஆங்காங்குத் தோல்வியடைவதை நாம் கேட்கின்றோமே! பஸ்ரா மாகாணத்தைப் பிறகுவிட்டனரே! இவர்களது வழிகள் எட்டியாயுதக் கடலிலும் டார்டனெல்ஸ் ஜலசந்தியிலும் ஆங்கிலேயரால் அடைக்கப்பட்டுவிட்டன. இவர்கள் சைனியமும் ருஷியரால் பற்பல இடங்களில் துரத்தப்பட்டுக்கொண்டிருக்கின்றன. செய்ந்நன்றிகொன்றமையின் பலன் இன்னும் விரிவாய்ச் செவிகுளிரக் கேட்போமே!

இப்பொழுது நடக்கும் யுத்தம் மதசம்பந்தமானதல்லாததாகையினாலும், பால்கன் சண்டையில் துருக்கி ராஜ்யத்தை ஐரோப்பாவில் நிலைநிறுத்திய ஆங்கிலேயரது சகாயத்தை மறந்து இந்தச் சுல்தான் நன்றிகொன்றவனாய் எதிரிகளாகிய ஜெர்மனியாருடன் சேர்ந்து யுத்தத்திற்குப் பிரயத்தனப்பட்டதனாலும் சுல்தானது செய்கையை ஐதராபாத்து நவாபும், மகம்மதிய குருவாகிய ஆகா கான் உட்பட இந்தியாவிலுள்ள எல்லா மகம்மதியரும் ஆமோதிக்காமல் வெறுத்துச் சுல்தானைத் தூஷித்துத் தாம் ஆங்கிலேயருக்கு உற்ற துணையினராக நின்றிருக்கத் தீர்மானங்கொண்டிருக்கின்றனர்.

இவ்வளவு நன்றி மறந்து துரோக சிந்தையுடன் நடக்கும் துருக்கி சுல்தான் முடிவில் அதிக கஷ்டங்களை யநுபவித்து அல்லற்படுவா னென்பதற்குச் சந்தேகம் யாதேனு முண்டோ?

---

## 11. EGYPTIAN IMPRUDENCE

## எஜிப்டின் அவிவேகம்

எஜிப்ட் தேசமென்பது ஆப்பிரிக்கா கண்டத்தின் வட பாகத்திலும், மத்தியதரைக் கடலுக்குத் தென்கிழக்காயுமிருக்கின்றது. இதன் விஸ்தீரணம் மூன்று லக்ஷத்து அறுபத்து மூவாயிரத்து இரு நூறு (3,63,200) சதுரமைல். இதில் ஒரு கோடியே பதின்மூன்று லக்ஷம் (1,13,00,000) குடிகள் வசிக்கின்றனர். அவர்களிற் பெரும்பான்மையோர் மகம்மதியர். இதற்குக் கெய்ரோ பிரதானப் பட்டணம். இதை யாளும் அரசன் கேடிவ் என்று சொல்லப்படுவான். இப்போது அப்பாஸ் ஹில்மி பாஷா என்பவன் அரசனாயிருக்கிறான். இவன் 1874 வரு ஜூலை மீ 16வ பிறந்து, தன் பதினெட்டாவது வயதில் 1892 வரு ஜனவரி மீ 7வ ராஜ்யபாரத்தை வகித்தான்.

எஜிப்ட் சுயேச்சை ராஜ்யமாகப் பரிபாலிக்கப்பட்டு வருகின்றதாயினும், துருக்கி சுல்தானுக்குக் கீழ்ப்பட்டது. இது ஆங்கிலேயரது மேற்பார்வைக்கும் விசாரணைக்கும் அடங்கியிருப்பதால், குடிகளுக்கு அநேக சௌகரியங்கள் உண்டாயிருக்கின்றன. நாடும் மிகச் செழிப்பாயிருக்கின்றது. ஐரோப்பாவில் யுத்தம் ஆரம்பமானவுடனே, ஜெர்மனி சக்ரவர்த்தியும் துருக்கி சுல்தானும் அப்பாஸ்பாஷாவை ஆங்கிலேயருக்கு விரோதமாகத் தம்முடன் சேரும்படி வற்புறுத்தினர். இவ்வரசன் அவர்களுக்குச் செவிகொடுத்து ஆங்கிலேயருக்கு விரோதமாய் நடக்கவாரம்பிக்கையில், அக்காரியத்தை அங்கீகரிக்காமல்

சில சபையோரும் நாட்டுச் சீமான்களும் தேசத்தைத் துறந்து செல்லத்துணிந்தனர். நாட்டினர் ஆங்கிலேயரிடம் அபிமானங் கொண்டவர்களாய்க் குடிகளிற் பலர் ஆங்காங்குச் சபைகளைச் சேர்த்து ஆங்கிலேயரது பல யுத்தநிதிகளுக்கு ஏராளமான பொருள் அனுப்பினர்.

'கெடுவான் 'கேடு நினைப்பான்' என்பதற் கிணங்க, அபாஸ் ஹில்மி ஜெர்மனியாருடன் சேர்ந்துவிட்டமையால், தன் ராஜ்யத்தை இழந்துவிட நேர்ந்தது. அவனுக்குப் பதிலாக நமது துரைத்தனத்தார் ஹுஸேன் கேமல் என்னும் ராஜகுமாரனுக்கு 'ஸுல்தான்' பட்டமளித்து அவனை ஈஜிப்ட் அரசனாக்கினார். இப்புதிய சுல்தான் குடிகளின் அபிமானத்திற்குப் பாத்திரனாய் அவர்களை யநுசரித்து ஆங்கிலேயருக்குத் துணைவனாயிருக்கின்றான்.

---

## 12. GERMAN ATROCITIES

## ஜெர்மனியக் கொடுமைகள்

அக்கிரமமாய் யுத்தத்திற்கு ஆரம்பித்த ஜெர்மனியார்க்கு இப்பொழுது கையிலிருந்த பணமும் ஆஹாரஸாமக்ரிகளும நாளுக்குநாள் குறைந்துபோகின்றன. இவர்கள பெல்ஜியத்தின பெரிய ஸிவில் உத்தியோகஸ்தர்களையும் தனிகர்களையும் பிடித்துத் தமது நாட்டிற்குக் கொண்டுபோய் அறுவடைக்குச் சித்தமாயிருந்த பயிர்களை அறுத்துத் தானியங்களைச் சோக்கச்செய்தனர்: ப்ருஸ்ஸெல்ஸ் பட்டணத்திலுள்ள ரொட்டி வியாபாரிகளிடமிருந்து நாளொன்றுக்கு எழுபதினாயிரம் (70,000) ராத்தல் வீதம் ரொட்டியைக் கட்டாயப்படுத்தி வாங்கினர்; அங்கர்க்கருகிலுள்ளதொரு சிறிய கிராமத்தாரைப் பிரதிதினம் 400 புட்டிக்குமேல் உயர்ந்த சாராயமும் நாற்பதி-

னாயிரம் (40,000) ராத்தல் மாமிசமும் கொடுக்கும்படி வற்புறுத்தினர்: ப்ருஸ்ஸேல்ஸ் பட்டணத்தில் தங்கள் யுத்த செலவிற்காகப் பன்னிரண்டு கோடி (12,00,00,000) ரூபாய் வசூல் செய்யவெண்ணிக் குடிகளை ஹிம்ஸிக்க ஆரம்பித்தனர். அந்நகரத்திலிருக்கும் தனிகரான நான்கு வர்த்தகர் அத்தொகை முழுவதையும் கொடுத்துவிடவே, குடிகளுக்கு உபத்திரவம் நீங்கிற்று. லீஜ் பட்டணத்திலிருந்து மூன்றுகோடி (3,00,00,000) ரூபாய் வசூல்செய்தனர்: ஆன்ட்வேர்ப் நகரத்தின் குடிகளினிடமிருந்து மூன்றுகோடி (3,00,00,000) ரூபாயை அடித்துப் பிடுங்கினர்: அதனுடன் திருப்தியடையாமல் அப்பட்டணத்திற் சில பாகத்தை அநியாயமாய் அக்நிக் கிரையாக்கிவிட்டனர். ஜெர்மனியார் இப்படிப் பற்பல கிராமங்களில் ஆகாரமுதலிய பொருட்களையும் ரொக்கத்தையும் கட்டாயப்படுத்தி வாங்கினர்.

அநேக வருஷங்களாக நானாவித சித்திரவிசித்திர வஸ்துக்கள் நிறைந்ததும், அரிய கிரந்தங்கள் பல அச்சிட்டு முடியாமலும் சேகரிக்கப்பட்டிருந்ததும், மதிப்புக்கெட்டாத அநேகமான விலையுயர்ந்த புஸ்தகங்கள் நிறையப்பெற்றதும், நானாவித கைத்தொழில் திறம் காட்டும் சித்திரங்களும் பொம்மைகளும் கூடியதான லோவேன் நகரத்துப் புஸ்தகசாலையை அநியாயமாய்க் கொளுத்தி நாசம் செய்தனர். பலகோடி பௌன் செலவு செய்து வெகு அற்புதமாகவும் உன்னதமாகவும் கட்டப்பட்டுப் பார்ப்போர் யாவரும் வியக்கும்படி அழகா யமைந்துள்ள ப்ரெஞ்சு ரேஹிம் தேவாலயத்தைச் சீர்குலைத்தனர்.

இவர்கள் சென்ற பட்டணங்கள் தோறும் குடிகளின் வீடுகளில் நுழைந்து அவர்களது ஆகாரவஸ்துக்களையும் திரவியத்தையும் கைப்பற்றிக்கொண்டது மன்றி, அங்கங் குள்ள அழகிய சிறுமிகளைக் கற்பழித்து ஹிம்ஸித்து வீடுகளைக் கொளுத்தி அச்சிறுமிகளுட்பட யாவரையும் உயிருடனே எரிப்பிட்டனர்.—இத்தகைய அமார்க்கம் அமானுஷமே யன்றோ?

சிற்சில விடங்களில் குடிகளைக் கண்டமாத்திரத்தில் அவர்க-
ளிற் சிலரைத் துரத்தியோட்டித் துப்பாக்கிகளினாற் சுட்ட-
னர்; வேறு சிலரை ஈட்டிகளினாற் குத்தினர்; இன்னும் சில-
ரைக் காதுகளை அறுத்தனர்; பின்னும் சிலரைக் கைகளை ஒடித்-
துக் கால்களை முறித்தனர்; மற்றும் சிலரைத் தலைகீழாகத்
தொங்கவிட்டு உயிருடன் நெருப்பிட்டுப் பொசுக்கினர்; இவ்-
விதமாகப் பற்பல சொல்லமுடியாத துஷ்காரியங்கள் செய்தனர்
ஜெர்மனியர். இந்தக் கஷ்டங்களைத் தாங்க முடியாமல் அவரவ-
வர் ஓலமிட்டு அழுவதைக் கண்டு செந்நாய் புலிச் சேஷ்டைகளை
மேற்கொண்ட இந்த ஜெர்மனிக்கயவர்கள் அவ்வாறு பரிதவிப்-
பவர்களின் எதிரே நின்று சிரித்து ஆனந்தக்கூத்தாடினராம்!

இந்த ஜெர்மனியர் செய்துவரும் கோரகிருத்தியங்களுக்-
குப் பயந்து தப்பித்துக்கொள்ள வெண்ணி வீடுகளிற் பதுங்கி
யிருக்கும் பெண்களையும் குழந்தைகளையும் சென்று தேடிப்
பிடித்துப்பிடித்து அவர் துப்பாக்கிக் கணையாக்குவதும், சுவர்களில்
மோதியடித்து உயிர்போம்படியும், ஜனங்கள் ஒடிமறைந்து தங்-
கியிருக்கும் கட்டடங்களை அப்படியே வெந்தழலுக்கிட்டு
வேடிக்கை பார்ப்பதும், யுத்தத்தில் காயமடைந்திருப்பவர்களிற்
சிலரைக் கொன்றுவிடுவதும், சிலரைக் குழிகளை வெட்டச்
செய்து அவரவர் வெட்டிய குழிகளிலே அவரவரையே சுட்டுப்
புதைக்கச்செய்வதும், பெற்ற தாயாரின்னெதிரிலே குழந்தையை
உயிருடனே நெருப்பிலே தள்ளுவதும், கணவனெதிரிலே மனை-
வியை மானங்கெடுத்து அலங்கோலப்படுத்திக் கொன்றுவிடு-
வதும், கோயில்களை யிடிப்பதும், பயிர்ப்புலங்களை நாசப்படுத்து-
வதுமான எண்ணிறந்த கொடிய காரியங்களைச் செய்தனர்.

இவ்வாறான துர்ச்செய்கைகளினால் இந்நாட்டினர் தம்மை
உலகினர் யாவரும் வெறுக்கும்படி செய்துகொண்டனர்.—ஆங்-
கிலேய ராணுவமந்திரி கிச்னர்பிரபு இங்கிலாந்திலிருந்து பிரான்-
ஸுக்குத் துருப்புக்களை யனுப்பும்போது எழுதிச் சொல்லிய

நற்போதனையைத் தங்கச் சிலையிற் சாஸனமிட் டேற்றவேண்டு-
மே!—“ நீங்கள் யுத்தத்திற்குச் செல்லுமிடங்களில் குடிமேற்-
கொண்டு ஸ்வாதீனமிழந்து நெறிநீங்கி நடவாதீர்கள். ஸ்திரீகள்
குழந்தைகளிடம் வெகு மரியாதையுடனும் அன்புடனும் நட-
ந்துகொள்வீர்கள். முறையிறழ்ந்து நடப்பீர்களாயின், நாட்டின்
கௌரவத்தை யழித்து நாசமடைவீர்கள்!” என்றல்லவோ
சொல்லினார்? ஆ ஹா! இவர் ஆங்கில வீரர்க்குப் புகட்டிய
புத்திமதிகளுக்கும் ஜெர்மனியார் நடந்துகொண்டதற்கும்
உள்ள ஏற்றத்தாழ்வு எத்தகையது!

---

## 13. BELGIAN BRAVERY

## பெல்ஜிய தைரியம்

சிறிய சைனியங்களை வைத்திருந்த பெல்ஜியம் தேசத்தரா-
சன் ஜெர்மனிசக்ரவர்த்தியை நிகர்நெதிர்த்துத் தனது
வீரத்தைக் காட்டி ஜெர்மனியாரின் பெரிய சைனியங்களுக்கு
வெகு உபத்திரவம் கொடுக்க ஆரம்பித்தான்: டேர்மான்டி
என்னும் பட்டணத்தில் நாலாயிரம் போர்வீரருடன் இருபதி-
னாயிரம் ஜெர்மனியாரை எதிர்த்துக் கடும் போர் செய்தான்:
கடலோரமாக விருக்கும் மதகுகளின் பலகைகளைப் பிடுங்கி
யெறிந்து நாட்டில் சமுத்திரஜலத்தை விட்டு ஜெர்மனி சைனி-
யங்களை நாசப்படுத்தினான்.

இந்த நாட்டினர் லீஜ் நகரத்து முற்றுகையில் சண்டை
யிட்ட விதமும், ப்ருஸ்ஸெல்ஸ் நகரத்தில் காட்டிய தைரிய-
மும் நிகரற்றவை. ஆலாஸ்ட் என்னுமிடத்தில் இவர்களுக்
குண்டான வெற்றி யாவராலும் வெகுவாகப் புகழ்ந்து பேசப்-
படுகின்றது. ஆன்ட்வெர்ப் நகரத்தில் நடந்த யுத்தமும், அதில்
ஜெர்மனியாருக் குண்டான கஷ்டமும் நஷ்டமும் சொல்லத்
தரமல்ல.

ஜெர்மனியார் ஓர் பெல்ஜிய தனிகனை அக்கிரமமாய்ப் பிடித்துக் கம்பத்திற் கட்டி அவனது மண்டையில் துப்பாக்கியின் அடிக்கட்டையினுல் ஓங்கி அடிக்குஞ் சமயத்தில், 19 வயதுள்ள அந்தத் தனிகனின் மகள் ஓடிவந்து அத்துப்பாக்கியைப் பிடுங்கிக்கொண்டு தன் தகப்பனை அடித்தவனையும் அப்படையின் அதிகாரியையும் சுட்டுக் கொன்றனள்: அன்றியும், சில ஜெர்மனிய உத்தியோகஸ்தரையும பல ராணுவ வீரரையும் கொடிப்போதினில் நாசஞ்செய்து தன் தந்தையை விடுவித்துப் போயினள்.

ஜெர்மனியின் தளகர்த்தனொருவன் பெல்ஜிய நாட்டில் நுழைந்து அநேகரைக் கொன்று பிணகுவியல்களைச் சேர்த்து அவற்றின் மத்தியில் தான் நின்றுகொண்டு பெல்ஜியத்தின் பெரிய படமொன்றை விரித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். சற்றுத் தூரத்தில் அவனைச் சேர்ந்த பெரிய சைனியம் நாற்புறமும் காவலாக வளைத்துக்கொண்டிருந்தது. அப்பொழுது அந்தத் தளகர்த்தன் நின்றிருந்த விடத்திற்குச் சுமார் 900 கஜதூரத்தில் பிணக்குவியல்களினருகே அவனுக்குப் புலப்படாமல் 18 வயதுள்ள ஹெய்ல்ஸ் என்னும ஓர் பெல்ஜியச் சிறுவன் மறைந்திருந்தான். அச்சிறுவன் அந்த ராணுவாதிபன் தனியே நின்று படத்தைப் பார்த்திருப்பதைக் கண்டு, மெல்லெனப் பூமியிற் படுத்து அப்படியே பிணங்களினடுவே ஊர்ந்துசென்று அந்த ராணுவாதிபனுக்கு 400 கஜ தூரத்தில் திடீரெனத் தலையெடுத்து நின்று தன் கைத்துப்பாக்கியினுல் அவனைச் சுட்டுக் கொன்றுவிட்டான். தளகர்த்தனைச் சுற்றிக் காத்துக்கொண்டிருந்த சைனியம் இச்சிறுவனது காரியத்தைத் தெரிந்துகொள்ளு முன்னமே, இவன் தான் கொன்ற அந்த ராணுவாதிபதியின் கிரீடத்தையும் சட்டைகளையும் தான் தரித்துக்கொண்டு அவனுடைய குதிரையின்மீது ஏறி வெகு வேகமாக அச்சைனியத்தின் மத்தியில் நுழைந்தான். அங்கு

அவ்விராணுவ இரகசியங்களிற் சிலவற்றைத் தந்திரமாகத் தெரிந்துகொண்டு வெகு தீரமாய்த் தப்பித்துக்கொண்டு தன் நாட்டுப்படைகளிடம் சேர்ந்தான். அங்குத் தான் தரித்திருந்த கிரீடத்தையும் மாறுடைகளையும் கழற்றி அவற்றைத் தன் நாட்டு அரசனிடம் கொடுத்துத் தானறிந்துவந்த இராணுவ ரகசியங்களையும் தெரியப்படுத்தினான்."

பெல்ஜியத்தரசன் அச்சிறுவனுடைய தைரியத்திற்கும் சூக்ஷ்மபுத்திக்கும் வெகுவாக மெச்சி அவனுக்கு அந்த யுத்த களத்திலேயே யாவரறிய ஸர் பட்டம்கொடுத்து, அவன் ஏறி-வந்த குதிரையையும் அந்தராணுவாதிபதியின் சட்டைப்பையி லிருந்த அவனுக்குச் சொந்தமான சிறிது பணத்தையும் தங்கக் கடியாரத்தையும் அச்சிறுவனுக்கே இனாமாகக் கொடுத்-ததுமன்றி, அந்த ராணுவாதிபனிடம் ஜெர்மனி சைனியச் செலவிற் கென்று சட்டையிலுள்ள எண்பத்தோராயிரம் (81,000) ரூபாயையும் காயமடைந்த தனது சைனியங்களின் சிகிச்சைக்காகக் கொடுத்துவிட்டான்: அச்சிறுவனுடைய தைரி-யத்தைக் குறித்து யாவரிடத்தும் கொண்டாடினான்.

இப்படி ஜெர்மனியரின் சைனியம் இந்நாட்டில் பலவித நஷ்டங்களுக்கு உட்படவேண்டியதாயிற்று. பெல்ஜியத்தில் பெண்கள் குழந்தைகளுட்பட யாவரும் மிக்க சூரத்துவம் பொருந்தியவர்களாகவே காணப்படுகின்றனர்.

இந்தப் பெரிய யுத்தத்தில் பெல்ஜியத்தார் காட்டி வரும் தைரிய ஸாஹஸங்கள் உலகமெங்கும் பிரசித்தமாக விருக்கின்-றன. ஜெர்மனியார் லீஜ்கோட்டைகளைப் பிடித்துவருகையில் அப்படைகளின் அதிகாரியான லிப் என்னும் ராஜகுமாரனும் அவனது மருமகனும் ப்ளேமல்லி கோட்டையை முற்றுகை யிட்டு வளைத்தனர். அதன் சுற்றுப்பக்கத்திலுள்ள சில விடங்-களைப் பரிசோதித்துப் பார்க்கவேண்டி ஓர்நாளிரவு இவ்விரு-வரும் தனியாய் இரகசியமாகப் பாதசாரிகளாய்ச் சென்றனர்.

பெல்ஜிய வீரனொருவன் அவர்களிருவரும் வருவதைக் கண்டு இன்னாரென்று அறிந்துகொண்டு தன்னெதிரிலிருந்த ஓர் பள்ளத்திற் பதுங்கியிருந்து, அவர்கள் தனக்குச் சமீபமாக வரும் சமயம் பார்த்துத் தன் துப்பாக்கியினால் அவ்விருவரையும் சுட்டுவிட்டுச் சங்கதியைத் தன் ராணுவாதிபனுக்குத் தெரிவித்தான்.

அதை யறிந்த பெல்ஜிய ராணுவாதிபன் அந்த வீரனை மிகுதியும்ஸன்மானித்துப் பின்னர் அவ்விரண்டு பிணங்களையும் லேரெய்ங் என்னுமிடத்திற்குக் கொணர்ந்து பரிசோதித்துப் பார்த்தான். ராஜகுமாரனுடைய தொப்பியில் ஏராளமாய் நோட்டுக்களும், அவனது கத்தியின் கைப்பிடியிலும் அறையிற் கட்டியிருந்த பொற்கச்சையிலும் அநேகபௌன்விலையுள்ள அபூர்வமான நவரத்தினங்களிழைக்கப்பட்டிருப்பதையும் கண்டான். அந்தத் திரவியம் பகைவர்களதானபோதிலும, பெல்ஜியத்தரசன் பெருந்தன்மையுடன் யாவையும் பத்திரமாக வெடுத்து ஜெர்மனி சக்ரவர்த்திக்கே அனுப்பிவிட்டான்.— இத்தகையப் பெருந்தகைமை இரக்கமென்பதின்றி ஸ்திரீபாலர்களையும அலக்கழித்துக் கொள்ளையிட்ட முரட்டு ஜெர்மனியாரிடத்திற் கண்டோமோ ?

---

## 14. RUSSIAN HEROISM

## ருஷிய பராக்கிரமம்

அதிக குதிரைப்படைப் பலமுடைய ருஷியர் இந்த யுத்தத்தில் ஆஸ்ட்ரியாவிலும் ஜெர்மனியிலும் காட்டிவரும் பராக்கிரமம் இவ்வள வவ்வள வல்ல. இவர்கள் அநேக லக்ஷம் சைனியங்களுடன் ஆஸ்ட்ரியாவை எதிர்க்க, ஆஸ்ட்ரியா இவர் பலத்தைத் தாங்கமாட்டாமல் தத்தளிக்கும் தருணத்-

தில், ஜெர்மனியார் ஓர் பெரிய சைனியத்துடன் அங்கு அவர்களுக்குச் சகாயமாய் ஓடி ருஷியரால் பங்கப்பட்டதும், அச் சமயத்தில் ப்ரான்ஸ் தேசத்தில் ஜெர்மனியாரின் யுத்தம தளர்ந்து ஆங்கிலேயரால் அவர்கள் வெருட்டி ஓட்டப்பட்டதும் யாவராலும் மெச்சப்படுகின்றன.

ருஷியர் ஆஸ்ட்ரிய ராஜ்யத்தின் கீழ்ப்பாகம் பெரும்பான்மையும் கைப்பற்றிக்கொண்டனர்: ருஷியாவினால் இன்னும ஒரு கோடி சைனியம் தயாராக்கப்படுகின்றது. இவர்கள் வருஷங்கள் எத்தனையானாலும் ஜெர்மனியையும் ஆஸ்ட்ரியாவையும தலையெடுக்க வொட்டாமல் அடித்து நாசம்செய்யத் தீர்மானித்திருக்கின்றனர். இவர்களது தேசமோ பெரியது : குடிகளோ அதிகம் : பணமோ மிகுதி : பராக்கிரமமோ வலிது.

ருஷிய சக்ரவர்த்தி தமது பிரதான பட்டணமாகிய 'ஸேன்ட் பீடர்ஸ் பர்க் என்பதன் பெயர் ஜெர்மனி நகரத்தைப் போலக் காணப்படுகிறபடியாலும், (பர்க் என்பது ஜெர்மனி தேசத்துக் கிராமத்திற்குப் பெயர்) ஜெர்மனியாரின் கடுஞ்செய்கைகளைக் கண்டு உலகம் முழுவதும் வெறுப்படைந்திருப்பதனாலும், தமது குடிகளின் அபிப்பிராயத்திற் கிணங்க, 'அந்நகரத்தின் பெயரைப் பீட்ரோக்ராட் என்று மாற்றிவிட்டனர்.

குதிரைச்சவாரியில் அதிக சாமர்த்தியமுள்ள ருஷியவீரர்களில் ஒருவன் இரு கக்ஷியார்க்கும் வலிய யுத்தம் நடந்துவரும் சமயத்தில் தான் ஏறியிருந்த குதிரை ஜெர்மனி தளகர்த்தனொருவனாற் கொல்லப்படவே, அக்குதிரையானது பூமியில் விழு முன்னமே தப்பித்துக்கொள்ளக் கீழ்க் குதிக்கும் போது, அந்த ஜெர்மனி தளகர்த்தன் அவன்மேல் தனது கத்தியை ஓங்கினான். அதைக் கண்ட ருஷியவீரன் திடீரெனத் தன் எதிரியின் குதிரைவயிற்றின்கீழ்ப் பதுங்கிச் சடக்கெனப் பின்புறமாக வந்து சரேலென அக்குதிரையின்மீதேறி உட்கார்ந்தான். உடனே அவன் அந்த ஜெர்மனியானின் காதில் ஓர்

பேரிரைச்சலிட்டான். மற்றவன் திக்ப்ரமை கொண்டு தன் கையிலிருந்த கத்தியை நழுவவிட்டான். அதைக் கண்ட ருஷியன் அவனைக் குதிரைமீதிருந்தவாறே கைகள் இறுகக் கட்டிக் குதிரைக்கடிவாளத்தைத் தான் பற்றிக் குதிரையை வெகுவேகமாய் நடத்தி எதிரியின் படைகளினின்றும் தப்பித்துக்கொண்டு தன் படைகளுடன் வந்துசேர்ந்தான்: பிறகு அந்த ஜெர்மனி தளகர்த்தனைத் தன் ராணுவாதிபதியினிடம் ஒப்புவித்தான்.— இப்படித் தான் பிடிக்கப்பட்டபோதிலும், ஜெர்மனி தளகர்த்தன் ருஷிய வீரனது தைரியத்திற்கும் புத்திநுட்பத்திற்கும் சாமர்த்தியத்திற்கும் வெகுவாக மெச்சிக்கொண்டான்.

இந்த யுத்தத்தில் இதுவரையிலும் அபஜயமடையாத ஓர் ருஷிய ராணுவவீரன் தன் படைகளுடன் ஜலம் நிறைந்த ஓர் பெரிய ஏரியின் கரையோரமாக வந்துகொண்டிருக்கையில், ஜெர்மனியார் பெரிய சேனையுடன் அவனையும் அவனது பட்டாளத்தையும் மூன்று பக்கமும் வளைத்துக்கொண்டனர். அதை எதிர்பாராத ருஷியவீரன் எதிரிகளின் சைனியம் தனதைவிட ஐம்பதுபங்கு அதிகமாக இருப்பதை யறிந்து தான் வெற்றிபெறுவது அசாத்தியமெனக்கருதி, உயிரைவிட மானமே பெரிதென்று தேர்ந்து, எதிரிகளிடம் சிக்கிப் பங்கப்படாமல் தக்ஷணமே தன் பட்டாள முழுவதையும் பீரங்கிகளுடனும் மற்றைச் சாமான்களுடனும் அவ்வேரியிற் குதிக்கச்செய்து தானும் அதில் மூழ்கிவிட்டான்.

இந்த ஸாஹஸத்தைக் கண்ட ஜெர்மனியார் ருஷியரது மனோதைரியத்திற்கும் மானாபிமானத்திற்கும் வெகுவாக ஆச்சரியப்பட்டனர்.

---

## 15. FRENCH STRATAGEM

## பிரேன்சுத் தந்திரம்

காலாட்படைகளிற் பிரசித்திபெற்ற ப்ரான்ஸ்தேசத்தின் எல்லைக்குள் ஜெர்மனியார் பிரவேசித்தவுடனே, ப்ரென்சுக் கவர்ன்மெண்டார் சில வியூகோபாயங்களை யனுசரித்துத் தமது பிரதான பட்டணமாகிய பாரிஸ் நகரத்தை நீக்கிப் போர்டோ வென்பதைத் தற்சமயம் பிரதானபட்டண மாக்கிக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் எதிரிகளைத் தமது நாட்டிற்குள் பிரவேசிக்கவொட்டாமல் தடுத்து யுத்தம் செய்துவருவது மிகவும் ஆச்சரியகரமானது ; பலவிடங்களில் சத்துருவுக்கு அதிக கஷ்டத்தை விளைக்கின்றனர் : சூக்ஷ்மமாய்த் தந்திரங்கள் செய்து எதிரிகளை வமாற்றிவருகின்றனர்.

ஜெர்மனியார் பாரிஸ் கோட்டைகளைப் பிடிப்பதற்காக அந்நகர்க்கு மூன்றுமைல் சமீபத்தில் நெருங்கி நகர்க்குள் பிரவேசிக்கவெண்ணுகையில் பிரெஞ்சுக்காரரால்தடுத்து எதிர்க்கப்பட்டு 20 மைலுக்கு அப்பால் ஓடிப்போய்விட்டனர். மற்றோர் புறமாய் இவர்கள் பெரிய சைனியத்துடன் ப்ரான்ஸின் உட்பாகத்திற் செல்லப் பிரயத்தனப்படுகையில், வஞ்சகமாய்ப் பூமியில் ஆழமாய் ஜலம் நிறைந்த அகழ்கள் சமபூமியைப்போலவே புற்பூண்டுகளால் மூடப்பட்டிருப்பதை மூடராகிய இவர்கள் அறியாமல் வெகு கம்பீரமாய்க் கர்வித்து நடக்க, யாவரும் அவ்வகழ்களில் வீழ்ந்து நமன்பாற் சென்றனர்.

ஐம்பது போர்வீரர்களைப் பின்னிட்டுச்செல்லும் பிரென்சு வீரனொருவன் தூரத்தில் நின்றுகொண்டிருந்த எதிரிகளுக்குத் தான் ஐந்நூறுபேர் கொண்டதோர் சைனியத்துடன் போவதாகத் தனது படையை ஓர் விதமாகத் திருப்பி வளைத்துக் காண்பித்து, ஒரு இரவுமுழுவதும் ஓர் பெரிய ஜெர்மனி சைனியத்தை யோர் காட்டின் மேற்புறத்தில் நிற்கச்செய்தான். எதிரி-

களின் அநேகமாயிரம் குண்டுகள் அன்றிரவெல்லாம் அக்காட்டுப் புதர்களை நாசமாக்கினவே யன்றித் தந்திரமாய் நிற்கும் பிரெஞ்சுவீரனது படையில் 37 பேர்க்குமேல் மாய்க்க முடியவில்லை. மறுநாள் சூரிய உதயத்திற்குமுன்னமே பிரெஞ்சுவீரன் மிகுந்த சேனையுடன் தன்னவர்களிடம் வந்துசேர்ந்தான். அதை யறிந்த ஜெர்மனியார் முன்னாளிரவெல்லாம் தாம் வெண்ணெய் வெட்டி சிப்பாய்களா யிருந்தமை கருதி வெட்கமடைந்தனர்.

இருதிறத்தார்க்கும் யுத்தம் பலமாக நடந்துகொண்டிருக்கையில், ப்ரெஞ்சுக்காரர் ஓர் நாள் அந்திப்போழ்தில் ஓர் உயர்ந்த மண்மேட்டின்மீது அநேக ஆயிரம் கொம்புகளை, வரிசை வரிசையாய் ஒன்றின் பின் ஒன்றாக நட்டு அவைகட்குச் சட்டைகளை மாட்டித் தொப்பிகளையும் போட்டனர். தூரத்திலிருந்த ஜெர்மனியார் அக்காட்சியைக் கண்டு அங்கு ஓர் பெரிய சேனை நின்றிருப்பதாக வெண்ணி ஆயிரக்கணக்கான பீரங்கிக் குண்டுகளை அப்பொம்மைகளின்மேல் விட்டனர்! இவ்வாறாய் ஒரு நாள் முழுவதும் எதிரிகளின் குண்டுகளும் வெடிமருந்தும் அநேக டன் வீணாகச் செலவழிந்தன. அப்படி ஜெர்மனியார் மரப்பாவைகளின்மேல் மும்முரமாய் யுத்தம் நடத்தும் சமயத்தில், பிரெஞ்சுக்காரர் எதிரிகளின் மற்றொரு பாகத்தின்மேற் சென்று முறியடித்தனர்.

இவர்களது குதிரைப்பட்டாளத்துத் தளகர்த்தனொருவன் ஓர்நாளிரவு தன் படையிலிருந்து பன்னிரண்டு வீரரை ஒரு ஸார்ஜெண்டின் அதிகாரத்திற் குட்படுத்தி, லார்க் காட்டுச் சமீபமாக வந்துகொண்டிருக்கும் எதிரிகளின் பலத்தினளவை இரகசியமாய்த் தெரிந்துவரும்படி யனுப்பினான். இப்பதின்மூவரில் ஒருவன் மற்றவர்க்கு முன்னதாகச் சென்று ஓரிடத்திற் பதுங்கியிருந்து நடந்துவரும் எதிரிகளின் கணக்கை யறிந்து வெகு வேகமாகத் திரும்பித் தன் எஜமானனாகிய ஸார-

ஜென்டுக்குத் தெரிவித்தான். மகா யுக்திசாலியான அந்த ஸார்-
ஜென்ட் உடனே தன்னவர்களுடன் அருகே சாலை ஓரமாகச்
செடிகள் அடர்ந்துள்ளதோர் பாழ்வீட்டில் குதிரைவிட்டிறங்கி
நுழைந்து பின்புறத்தில் குதிரைகளைப் பத்திரப்படுத்தி, அவ்-
வீட்டுக் கதவுகளை மூடிக்கொண்டு மாடியின்மேற் சென்று
சந்தடி செய்யாமற் காத்திருந்தான். பிறகு சற்றுநேரத்திற்கெல்-
லாம் எதிரிகளின் பட்டாளத்திலிருந்து முன்னதாக நடந்து
வந்த 70 ஜெர்மனிக் குதிரைவீரர் மிகு குதூஹலமாகச் சிரித்-
துப் பேசிக்கொண்டு இவர்கள் பதுங்கியிருக்கும் வீட்டிற்குச்
சமீபமான பாதையின்வழியே வந்துகொண்டிருக்கையில், மாடி
யில் மறைந்திருந்தவர் அதி வேகமாய் அவர்கள்மேல் துப்பாக்-
கிக் குண்டு மழை பொழியலாயினர். இவ்வாபத்தினை எதிர்
பாராத ஜெர்மனியார் தம்மேற் குண்டுகள் இன்னவிடமிருந்து
வருகின்றனவெனத் தெரியாமல் திப்பிரமையுடன் நின்றுவிட்-
டனர். பிரெஞ்சு ஸார்ஜென்டானவன் தன்னுடனிருப்பவர்-
களில் அறுவரை யழைத்துச் சிலசங்கதிகளைச் சொல்லி அனுப்-
பிவிட்டுத் தான் மற்றவருடன் மறுபடியும் துப்பாக்கிகளினால்
எதிரிகளைச் சுட்டுவந்தான். ஜெர்மனியார் இருட்டில் குண்டு-
கள் வரும் வீடு நோக்கிச் சுட ஆரம்பித்தனர். இதற்குள் மாடி-
யினின் றிறங்கிச் சென்ற அறுவரும் அவ்வீட்டிலிருந்தசாமான்-
களை யெடுத்து ஒன்றின்மேலொன்றை மோதிப் பேரிரைச்சலு
லுண்டாக்க, "யுத்தத்திற்குச் சித்தப்படுங்கள்" என்று
குறிக்கும்படியாக ஒருவன் தன் தாரையைப் பலமாகப் பன்
முறை ஊதினன்.

அதைக் கண்ட ஜெர்மனியார் இரவில் அக்கட்டடத்தின்
பின்புறம் ஏராளமான ப்ரெஞ்சுசைனியம் பதுங்கியிருப்பதாக
நினைத்துப் பயந்து, அந்த ஸார்ஜென்டை ராணுவாதிபதியேயெ-
ன நினைத்து அவனிடம் சென்று தமது ஆயுதங்கள் யாவையும்
ஒப்புவித்துச் சமாதானமாகி நின்றனர். இப்படி அவர்களு-

காமை, நமது ஆங்கிலேய சைனியத்தின் சாமர்த்தியமும் வீரமும் யுத்ததந்திரமும் மிகவும் சிரேஷ்டமானவையென ருஷியர் முதலிய யாவராலும் மெச்சப்படுகின்றன.

இந்தப் பெரிய யுத்தம் நடந்துவரு மொரு நாள், பிரெஞ்சுக்காருடைய சைனியம் ஓர் பள்ளத்தரையில் அகப்பட்டுக்கொண்டது. அச்சைனியம் அப்பள்ளத்தைத் தாண்டிப் போகுமானல் எதிரிகளின் மத்தியில் சிக்கிக்கொண்டு நாசமடைவது நிச்சயம். இவ்விஷயம் அச்சைனியத்திற்குத் தெரியாது. அச்சமயத்தில் சமீபமான ஓர் தோப்பில் பதுங்கியிருந்த ஆங்கிலேய சைனியம் பிரெஞ்சுக்காரரின் இக்கட்டை யறிந்தது. உடனே அச்சைனியத்து வீரனொருவன் தனது ரப்பர் வண்டியின் மீதேறி, ஆபத்திலகப்பட்டிருக்கும் பிரெஞ்சு சைனியத்திற்கு அதன் நிலைமையைச் சொல்லிக் காப்பாற்ற வெண்ணி வெகு வேகமாகச் செல்ல, ஜெர்மனியார் அவனைச் சுட்டுக் கொன்றனர். அவன் கீழே விழவும், மற்றொருவன் அதே மாதிரியாக விரைவுடன் வநதான். அவனும் பகைவரால் அப்படியே மாய்க்கப்பட்டான். அதைக் கண்டும் வேறொருவன் ஓர் ஒற்றைச்சுவட்டுவண்டியில் (பைஸிகிலில்; ஸைகிலில்) ஏறி அதன் கைப்பிடிகளுக்குக் கீழ்த் தன் தலையைத் தாழ்த்தி மறைத்துக் கொண்டு எதிரிகளின் குண்டுகளுக்குத் தப்பி ஆபத்திலிருந்த அந்தப் பிரெஞ்சு சைனியத்திற்கு அதன் நிலைமையைக் காட்டி, அப்பள்ளத்தை விட்டு நகரவொட்டாமல் தடுத்து எதிரிகளினின்றும் காப்பாற்றினன். அதைப் பார்த்திருந்த பிரெஞ்சு தளகர்த்தன் அவ்வாங்கிலேய வீரனை மிகவும் உபசரித்துக் கைகுலுக்கித் தான் அணிந்திருந்த ஓர் பதகத்தை அவன் மார்பிற் சொருகி, “ அப்பா ! நான் ஒருவனைக் காப்பாற்றினதற்காக இந்தப் பதகத்தை விருதாகப் பெற்றேன். நீயோ அநேக ஆயிரம்பேரைக் காப்பாற்றினய். உன் தைரியமே தைரியம். உன் நடத்தையே ஆங்கிலேயரின் சிரேஷ்டமான வீரத்தை

உதாஹரிக்கின்றது" என்று புகழ்ந்து பேசி அவனுக்கு அநேக வந்தனமளித்தான்.

ஒரு நாள் பகல் ஆங்கிலேயரின் பெரிய சைனியத்தை ஜெர்மனியார் அநேக பீரங்கிகளினால் தாக்கினர். ஆங்கிலேய வீரர்கள் அப்பீரங்கிக் குண்டுகளுக்குப் பயப்படாமல் எதிராகச் சென்று வெகு சாமர்த்தியமாய்த் திடீரெனப் பகைஞரின் சைனியத்தின்மேல் விழுந்து அப்பீரங்கிகளைத் தாம் கைப்பற்றிக்கொண்டு அவற்றினாலேயே எதிரிகளை நாசஞ்செய்ய ஆரம்பித்தனர். இந்த ஸாஹஸத்தொழிலைச் செய்யச் சென்றதில் நமது ஆங்கிலேய வீரர்களிற் சிலர் நாசமடைந்தனர். ஆனபோதிலும், எதிரிகளுடைய ஆயுதங்களைக் கொண்டே அவர்களை நாசப்படுத்தியது மிக்க கீர்த்திகரமான தன்றோ?

துப்பாக்கிகளைச் சரியாகக் குறிபார்த்து உபயோகிப்பதில் ஜெர்மனியாரைவிட ஆங்கிலேயர் மிக்க திறம் படைத்தவர்கள். இதற்கு நிதரிசனமாக அநேக ஸம்பவங்கள் இந்த யுத்தத்தில் காணப்படும்.—ஒருநாள் ஜெர்மனியாரின் ஆகாயக்கப்பலொன்று ஆங்கிலேயரது சைனியத்தை நோக்கிப் பறந்து வந்தது. அதையறிந்த ஆங்கிலேயவீரனொருவன் ஆகாயத்தில் நிலையற்று வெகு வேகமாகப் பறக்கும் அந்தக் கப்பலுக்குச சரியாகக் குறிவைத்துத் துப்பாக்கியினாற் சுட்டான். ஆங்கிலேயசைனியத்தில் ஒரு பெரிய வெடிக்குண்டைப்போடவந்த அவ்வாகாயக்கப்பலோட்டி தன் குறி தப்பிக் கீழிருந்து விட்ட துப்பாக்கிக்குண்டுக் கிலக்காகித் தன் இருகரங்களும் அவ்வாகாச யந்திரத்தின் சக்கரத்தைப் பிடித்தவாறே மார்பிற் காயமுண்டு யந்திரத்துடனே பூமியில் விழுந்தான்.—இப்படிக் குறி வைக்க வல்லவர் ஆங்கிலேயரில் அநேகர் இருக்கின்றனர். பறக்கும் யந்திரங்களி லிருப்பவரையும் குறி தப்பாமல் அடிக்கும் சாமர்த்தியம் ஆங்கிலேயர்க்கு மிகுதியும் உண்டென்னும் விஷயம் யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது.

சென்ற செப்டம்பர் மீ வெர்னியூல் என்னுமிடத்தில் வெகு பலமான யுத்தம் நடந்துவருகையில், ஹைலண்ட் காலாட்படையைச் சேர்ந்த ஜார்ஜ் வில்ஸன் என்னும் ஓர் ஆங்கிலேய யுத்த வீரன் தனக்குச் சகாயமாக மற்றொருவனை அழைத்துக்கொண்டு எதிரிகள் வெகு பத்திரமாகக் காத்துவரும் ஓர் யந்திரப் பீரங்கியினிடம் செல்ல முயன்றான். இவர்கள் தம்மை நோக்கி வருவதை யறிந்த எதிரிகள் துப்பாக்கிகளினால் இவ்விருவர் மேலும் சுட்டனர். அதனால் மற்றவன் இறந்துவிட, இவன் மட்டிலும் தப்பித்துக்கொண்டு வெகு தந்திரமாய் அப்பீரங்கி வைத்திருக்கு மிடத்தைச் சேர்ந்து, அங்குக் குண்டுகளை வேகமாக அப்பீரங்கியினுள்ளே தள்ளிக்கொண்டிருந்த ஜெர்மனிய வீரர் அறுவரையும் அவர்களதிகாரியுடனே ஒரு க்ஷணத்தில் சுட்டுக் கொன்றுவிட்டு அப்பீரங்கியைக் கைப்பற்றிக்கொண்டான். இவனுடைய தைரியத்திற்கும் சாமர்த்தியத்திற்கும் மெச்சி நமது சக்ரவர்த்தியார் இவனுக்கு விக்டோரியா க்ராஸ் பட்டமும் ஓர் கௌரவப் பதகமும் வெகுமதி யளித்தனர்.

இச் சைனியங்களுக்கெல்லாம் பிரதான அதிபதியாகிய ஸர் ஜான் ப்ரென்ச் என்பவரும் அவருடைய உபஅதிபரும் இந்த யுத்தத்திற் காட்டிவரும் வீரத்திற்கும் சாமர்த்தியத்திற்கும் நமது துரைத்தனத்தார் மகிழ்ந்து அவர்களுக்குப் பலவித கௌரவப் பட்டங்கள் முதலியன கொடுத்துக் கொண்டாடுகின்றனர்.

---

## 17. INDIAN GALLANTRY

## இந்தியரின் சூரத்துவம்

மாட்சிமைதங்கிய நமது ராஜப்ரதிநிதி ஹார்டிஞ்ஜ் பிரபுவவர்களின் சிபார்சினால் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்ட இந்திய சைனியத்தார் பிரான்ஸ்தேசத் தெல்லை

சேர்ந்த வுடனே அந்நாட்டு ஜனங்களால் அதிக விசுவாஸமாக உபசரிக்கப்பட்டனர். இங்கிலாந்து முழுவதிலும் நமது இந்தியப் படைகளைக் குறித்து வெகுவாகப் புகழ்ந்து பேசுகின்றனர். நம்மவர் இப் பெரிய யுத்தத்திற் காட்டிவரும் தைரியமும் சூரத்துவமும் யாவராலும் வெகுவாகக் கொண்டாடப்படுகின்றன. பெல்ஜியம் நாட்டிலும் ப்ரான்ஸ்தேசத்திலும் நடந்தேறிவரும் யுத்தத்தில் இந்தியர்கள் செய்துள்ள பல அற்புதமான காரியங்களை ஆங்கிலேயரும் அவர்களது கூட்டாளிகளும் கண்டு மிக்க வியப்படைந்திருக்கின்றனர். யுத்தத்தில் காயமடையும் இந்தியவீரர்களுக்குச் சகாயமாக இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் ஏராளமான உதவிகள் தவிர, ஆங்கிலேயரும் பிரென்சுக்காரரும் தத்தம் நாடுகளில் அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களை அமைத்திருக்கின்றனர். அலெக்ஜாண்ட்ரியா, மால்டா, ஈஜிப்ட் முதலிய விடங்களில் ஆஸ்பத்திரிகளும் இவர்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

இந்தியாவிலிருந்து சென்றிருக்கும் நமது படைவீரர்களிற் சிலர் கிழக்கே சைனாதேசத்திலுள்ள ஸிங்க்டௌ பட்டணம் முதல் மேற்கே பெல்ஜியத்திலுள்ள டிக்ஸ்மூட் நகரம் வரையில் ஆங்காங்குப் பக்குவமான விடங்களில் நிறுத்தப்பட்டு, அங்கங்கு அவரவர் தத்தம் சமர்த்திறத்தைக் காட்டி நமது சக்ரவர்த்தியார்க்கு ஜயத்தை யுண்டாக்கும்படியான பல காரியங்களைச் செய்துவருகின்றனர்.

பெல்ஜியநாட்டினர் யுத்தம் செய்தவிடத்திற்கு வடக்கே சற்றுத் தூரத்திலுள்ள ஓர் அடர்ந்த தோப்பின் மத்தியில் ஜெர்மனியார் தமது பீரங்கிகளை இருத்தித் தா மிருக்கு மிடத்தை எவரும் அறியாமலிருக்கும்படியாகத் தெற்கே, சிறிது தூரத்திற் கப்பால் பெரிய படைகளை நிறுத்தி மறைவிடத்திலிருந்துகொண்டு எதிரிகளின்மேற் குண்டுகளை விட்டு வெகு நஷ்டத்தை யுண்டாக்கினர். இவர்களிருந்த இடம் எவராலும்

கண்டுபிடிப்பது அசாத்தியமானது. முடிவில், ஆகாயக்கப்பற்காரர் அவ்விடத்தை மிக்க பிரயாசையுடன் கண்டுபிடித்தனர். அந்த இடம் சமுத்திரக்கரைக்கு 7 மைல் கிழக்காகவும், ஜெர்மனியார் படைகள் அப்பொழுது நின்று யுத்தம் செய்யுமிடத்திற்கு மூன்றரை மைல் வடக்கிலுமாக விருந்தது. அவ்விடம் செல்வது யார்க்கும் அசாத்தியமாகக் காணப்பட்டது. இந்திய படையைச் சேர்ந்த ஓர் சிறிய கூர்க்கபட்டாளத்தார் ஒருநாளிரவு இரகசியமாக இரண்டு கப்பல்களிலேறி விளக்குக்களை அவித்துவிட்டுச் சந்தடியில்லாமல் கடலில் வெகு வேகமாகப் பயணம்செய்து ஐஸர்நதியின் முகத்துவாரத்தின் மூலமாய் மெல்ல மெல்ல உள்நுழைந்து, ஜெர்மனியார் மறைத்து வைத்திருக்கும் பீரங்கிகளுள்ள விடத்திற்கு முக்கால்மைல் சமீபமாக நின்று பார்த்தனர் : அப்போது அக்கரையோரமாக ஆறு ஜெர்மனிப் போர்வீரர் வெகு ஜாக்கிரதையாகப் பாரா கொடுப்பதைக் கண்டனர். உடனே, கூர்க்க ராணுவாதிபன் தன் கப்பல்களை அங்கு அடர்ந்ததோர் காட்டின் ஓரமாக நிறுத்தித் தனது ராணுவவீரரைக் கீழிறக்கிருன். அவ்வீரர் யாவரும் தமக்குறும் ஆபத்தைப் பொருட்டெனமதியாமல் பூமியிற்படுத்து முழந்தாளிட்டு உள்ளங்கைகளை யூன்றிச் சுமார் அரைமைல் தூரம்வரையில் நிச்சப்தமாய்ச் சென்றனர். அவர்களில் ஆறுபேர் நீண்ட கத்திகளைத் தமது வாயிற் கௌவிக்கொண்டு முன்னதாக நகர்ந்துசென்றனர். அப்பொழுது சுமார் ஒருமணியாயிற்று. எங்கும் சந்தடியற்றுப் பயங்கரமாக விருந்தது. சிற்றொலியேனும் உண்டாகுமாத்திரத்தானே தக்ஷணமே அங்குள்ள அநேக பீரங்கிகளிலிருந்து வெடிகள் கிளம்பிவிடும்; உறங்கியிருக்கும் பெரிய சைனியம் சித்தமாய்விடும். இப்படிப் பிரதிகூல முண்டாகா வண்ணம் நமது கூர்க்கர் சற்றும் சந்தடி செய்யாமல் வெகு ஜாக்ரதையுடன் பாரா கொடுத்து நிற்கும் அவ்வறுவரையும் முடித்துவிட்டனர். பிறகு

முழந்தாளாய் நகர்ந்தாரும், மற்ற கூர்க்கர் உடனே நிமிர்ந்தெழுந்து யாவருமாகப் பீரங்கிகள் வைத்திருக்குமிடத்திற்குச் சென்று வெடிமருந்தைக் கொளுத்தி ஜெர்மனியாரின் சைனியத்திற்கு அதிக நாசத்தை உண்டாக்கினர். பிறகு அவர்கள் மறுபடியும் தமது கப்பல்களில் ஏறிக்கொண்டு க்ஷேமமாய்த் தம்மவர்களிடம் வந்து சேர்ந்தனர். மறுநாள் ஜெர்மனியார் மறைத்துவைத்திருந்த தமது பீரங்கிகளுடன் அவ்விடம் விட்டுப் பெயர்ந்துபோகவேண்டியதாயிற்று.

லாபாஸீ என்னுமிடத்திற்குச் சமீபமான பெரிய அகழ் யுத்தத்தில் நமது ஆங்கிலேயர் எதிரிகளை முறியடித்துவருகையில் ஜெர்மனியார் அவ்விடத்தைத் தாண்டிப் போக ஆரம்பித்தனர் அச்சமயத்தில் நமது இந்திய சைனியம் அந்த அகழிகளிற் குதித்து எதிராகப் போரிடும் ஜெர்மனியாரைத் துப்பாக்கி முனையீட்டிகளினாற் குத்தி இமிசைப்படுத்தி ஒருவர் பின்னொருவராகப் பின்வாங்காமல் அநேகவாயிரம் போர்வீரரை உயிர்மாய்த்து நமனுலகுக் கேற்றிவிட்டனர். இவ் வெற்றியினால் நம்மிந்தியர்க்குப் பெரும் புகழுண்டாயிற்று.

ப்ளாண்டர்ஸ் என்னுமிடத்தில் யுத்தம் நடந்தேறிவருகையில், பெல்ஜியத்தார்க்கும் ஜெர்மனியார்க்கும் ஓர் அகழின் ஓரமாக 45 மணிநேரம் வெகு மும்முரமான யுத்தம் நடந்தது. பெல்ஜியத்தார் களைத்து மிகு சோர்வடையும் சமயத்தில், இந்திய வீரர் அவ்வகழிகளிற் குதித்துப் பதுங்கியிருந்து, எதிரிகள் அகழிகளில் ஆட்களிருப்பதறியாமல் நெருங்குகையில் அவர்களை ஈட்டிகளினால் குத்திக் கொன்று சுமார் பத்தாயிரம் ஜெர்மனியாரை முறியடித்து நாசப்படுத்தினர்: இந்தியர்களின் சாமர்த்தியத்திற்கு இணையாக நிற்கமாட்டாத ஜெர்மனியார் முதுகிட்டோடும் சமயத்தில் அவர்களைத் துரத்திச் சென்று கட்டுக்கலைத்து வெகு சின்னாபின்னமாக்கினர். நம்மிந்திய வீரர்களை அப்போதப்போது சமர்க்கிழுக்கும் பல

ஜெர்மனியார் குண்டுகளிற் சுடப்பட்டும் ஈட்டிகளிற் குத்தப்பட்டும் நன்றாய்ப் புடைக்கப்பட்டும் அலங்கோலப்படுகின்றனர். இந்தியர்மேல் வந்துபடும் பீரங்கிக் குண்டுகளுக்கு அவர்கள் சற்றேனும் அஞ்சாதவர்களாய் அக்குண்டுகளைப் புஷ்பவருஷமென்றே கருதித் தளராத் தைரியத்துடன் செய்துவரும் யுத்தமானது மிகுதியும் வியக்கத் தக்கதா யுள்ளது.

ஒரு நாள் ஓர் அகழின் மத்தியில் இந்திய படையைச் சேர்ந்த கங்காசிங் கென்னும் ஹவில்தாரன் பதினைந்து வீரர்களுடன் ஜெர்மனியாரை எதிர்த்தான். அதைக் கண்ட ஜெர்மனி ராணுவாதிபன் கங்காசிங்கைத் தன் கைத்துப்பாக்கியினாற் சுட்டான். துப்பாக்கியின் குண்டு காங்காசிங்கினது உச்சியில் தாக்க, ஹவில்தாரன் அதிக கோபங்கொண்டு அந்த ஜெர்மனி ராணுவாதிபன்மேல் பெருவேங்கைப்புலி யெனப் பாய்ந்து அவன் கரதலுள்ள வாளைப் பிடுங்கிக்கொண்டு அதனாலேயே அவனை இரு துண்டாக்கி, அவனுக்குச் சகாயமாக வந்த பத்து ஜெர்மனியாரையும் துண்டதுண்டங்களாக்கி யெறிந்தான்: மற்றவரையும் முஷ்டியினாற் குத்தி மல்லயுத்தஞ்செய்து ஹதமாக்குகையில், சில ஜெர்மனி வீரர் ஓடிவந்து தம் துப்பாக்கிகளினால் ஹவில்தாரின் காலிலும கையிலும மார்பிலும் காயப்படுத்தினர். பீமசேனனை யொத்த கங்காசிங்க் மூர்ச்சையாய்ப் பூமியில் வீழ்ந்தான். அது கண்ட ஜெர்மனியார் ஹவில்தாரன இறந்துவிட்டதாக வெண்ணி அவனை அவ்விடமே விட்டுப் போயினர். கங்காசிங்க் மூர்ச்சை தெளிந்ததும் தன் படைகளுடன் வந்து சேர்ந்துவிட்டான். இவன் காங்க்ரா ஜில்லா திக்காதேசத்தைச் சேர்ந்தவன். இவனுடன் வந்த மற்றை யாவரும் மாண்டுபோயினர். இவனது புஜபல பராக்கிரமத்திற்கும் தைரியத்திற்கும் நமது சக்ரவர்த்தியாரவர்கள் மனமுவந்து வெகுவாகக் கொண்டாடி, ஆங்கிலேயருள் மிக்குயர்ந்த உத்தியோகஸ்தர்களுக் களிக்கும் விக்டோரியா

க்ராஸ் என்னும் கௌரவ பட்டத்தைக் கொடுத்து ஓர் பதகத்தையும் சன்மானித்தார்.

பிறகு கார்வால் பட்டாளத்தைச் சேர்ந்த தர்வான் சிங்க் என்பவனும், பலுசிஸ்தானத்துப் பட்டாளத்தைச் சேர்ந்த சிப்பாய் குதாதாத் என்பவனும் மிகச் சாமர்த்தியமாக யுத்தம் செய்து நமது துரைத்தனத்தாரிடமிருந்து கங்காசிங்கைப் போலவே வெகுமதிகள் பெற்றனர்.

இப்படி நமது இந்தியப்படைகள் அநேக விடங்களில் பற்பல அதிசயமான போர்த்தொழில்களைக் காட்டி யாவராலும் கொண்டாடப்படுகின்றன. இது கேட்க யாவரும் ஆனந்தமும் திருப்தியும் அடைகின்றனர். இதுவரையிலுமே யாதொரு சந்தேகத்திற்கு மிடமில்லாத நம்மிந்தியரின் சூரத்துவமும் ராஜானுஸரணையும் இப்போது இன்னும் பதின்மடங்கதிகமாய் ஜ்வலித்துப் பிரகாசிக்கின்றன.

---

## 18 INDIAN PRINCES FOR ACTIVE SERVICE

## யுத்தமுனைக்குச் சென்ற இந்திய அரசர்

பரம்பரையாய் யுத்தத்தில் அதிக பிரியமுள்ள இந்திய அரசர்களில் சிலர் நமது சக்ரவர்த்தியாரவர்களிடமுள்ள ராஜவிசுவாஸப் பெருக்கினால் தமதுயிரையும் சக்ரவர்த்தியார் விஷயத்தில் தத்தம்செய்யத் தயாராய்த் தமது படைகளில் சிலவற்றுடன் யுத்தமுனைக்குச் சென்றிருக்கின்றனர். அப்படிச் சென்றவர்களிற் சிலரைப் பற்றி நாம் சிறிது தெரிந்துகொள்வோம்:—

## iii. H. H. THE MAHARAJA OF IDAR

### ஐடார் மஹாராஜா

ஐடார் ராஜ்யம் பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த மாஹி-காந்தா என்னும ஜில்லாவிலுள்ளது. இது மிகவும் பிரசித்தி பெற்றது. இது 1,669 சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இதற்கு ஸ்ரீ டௌலத் சிங்க் என்பவர் தற்காலம் மகாராஜாவாயிருக்-கின்றார். இவர் ஜோட்பூர் மகாராஜாவின் தம்பியாகிய ஸர் ப்ர-தாப சிங்க் மகாராஜாவின் குமாரர். இவர் 1878ஹு மே மாதத்-தில் ஜோட்பூரில் ஜனனமாகி, 1911 ஹு ஜூலைமீ 21உ இந்த ஐடார ஸமஸ்தானத்தின் அரசராயினார். இவர் அஜ்மீர் காலேஜில் ஆங்கிலம் கற்று ஜோட்பூரில் ராணுவப் பயிற்சி யடைந்து அப்படைகளுக்கு அதிபராயினார். இவர் எட்வர்ட் சக்ரவர்த்தியவர்களின் பட்டாபிஷேகத்திற்காகத் தமது தகப்-பனாருடன் இங்கிலாநதுக்குச சென்று அப்பொழுது இளவரச-ராக விருநத நமது ஜார்ஜ் சக்ரவர்த்திக்கு எய்டிகாங்காக நிய-மிக்கப்பட்டார். இவர் தாம் மகாராஜாவானதும் நமது சக்ர-வர்த்தியவர்களின் பட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்கு இங்கி-லாந்து சென்று அங்கு அநேக மரியாதைகளைப் பெற்றார். இவர் காதியவார் ஸம்ஸ்தானத்தில் சில ராணுவ வுத்யோகஸ்-தருடைய உதவியைக கொண்டு தமது தேசத்தில் சில சைனி-யங்களைத் தயார்செய்தார். இநதச் சைனியங்களுக்குத் தலைவர் 'ஸர்தார்கள்' எனப்படுவர். இப்படிப்பட்ட 9 ஸர்தார்களுடனும் தமது சைனியங்களிற் சிலவற்றுடனும இவர் தற்கால யுத்த முனைக்குச் சென்றிருக்கின்றார்.

## iv. H. H. THE MAHARAJA OF JODHPUR

### ஜோட்பூர் மஹாராஜா

ஜோட்பூர் ஸம்ஸ்தானம் ராஜபுதனத்தி லுள்ளது. இது 34,963 சதுரமைல் விஸ்தீரண முள்ளது. ஜனத்தொகை 20,50,000. இதை இப்பொழுது ஆண்டுவருபவர் மஹாராஜா

ஸர் பிரதாப சிங் பஹதூர். இவர் தம் தமையனாரின் குமாரன் இறந்தகாலத்தில் அவரது புதல்வன் ஸர்தார் சிங்கென்பவன் பாலியனாயிருந்ததனால், இந்த ஸம்ஸ்தானத்தின் பரிபாலனத்தைத் தாம் ஏற்றுக்கொண்டார். இவர் மகா சூரர். பாலியமுதல் யுத்தவிஷயங்களில் அதிக பிரியமுள்ளவர். இப்போது இவருக்கு வயது 68: இவர் ஜோட்பூர் ராஜ்யத்தில் 1889-ம் வருஷத்தில் ராஜபுத்திர சுதேசகுடிகளைச் சேர்த்து ஓர் பெரும் படையைத் தயார்செய்திருக்கின்றார். இவர் 1878-ம் வருஷத்தில் ஆங்கிலேயப் படையுடன் காபூலுக்குச் சென்றதையும், 1887-ம் வருஷத்தில் இளவரசருக்கு எய்டிகாங்காக நியமிக்கப் பட்டதையும், 1889-ம் வருஷத்தில் தீரா சண்டைக்குச் சென்றதையும் ஆங்கிலேயர் கண்டு இவருக்குக் கர்னல் பட்டம் கொடுத்தனர். இவர் தம் நாட்டுப்படைகளுடன் 1900ஹு சீன தேசத்துச் சண்டையில் நமது ஆங்கிலேயருடன் கலந்து வெகு கியாதி பெற்றவர்.

இவர் தமது தமையனாரின் பேரனுடன் சில சைனியங்களைப் பின்னிட்டுக்கொண்டு ஐரோப்பாவில் யுத்தமுனைக்குச் சென்றிருக்கின்றார்.

## V. H. H. THE NAWAB OF JAORA

### ஜோரா நவாப்

ஜோராவென்பது மாளவதேசத்திலுள்ளது. இது 568 சதுரமைல் விஸ்தீரணமும், ஜனத்தொகை 82,500 ம் கொண்டது. இதற்கு மகமத் இப்டிகான் ஆலி கான் என்பவர் நவாப். இவர் 12-வது வயதில் பட்டத்திற்குவந்தார். இண்டோர் காலேஜில் 1899ஹு வரையில் ஆங்கிலம் கற்று, பிறகு 15 மாதம் ராணுவத்தில் பயின்றிருந்தார். இவர் 1905ஹு ஆங்கிலேய சைனியத்தில் முதலில் காப்டனாகிய அதிகாரத்தைப் பெற்றுட்

பிறகு மேஜர் உத்தியோகத்தை யடைந்தார். இவர் மகா சூர பாம்பரையில் உதித்தவர்.

## vi. H. H. THE MAHARAJA OF RUTLAM

### ரட்லம் மஹாராஜா

ரட்லம் என்பது மத்திய இந்தியாவிலிருக்கும் ஓர் சிறிய ராஜ்யம். இது 1,130 சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இதன் ஜனத்தொகை 85,000. இந்த ராஜ்யம் ஷாஜிஹான் சக்ரவர்த்தியின் காலத்தில் ஜோட்பூர் மகாராஜாவின் கொள்போன் (போனுடைய மகன்)ஆகிய ரத்னசிங்க் என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டது. ஸர் ஸஜ்ஜன்சிங்க் என்பவர் இதன் தற்காலத்து அரசர். இவர் இண்டோரில் ஆங்கிலம் கற்று, 1903-ம் வருஷத்தில் ராணுவத்திற் சேர்ந்து போர்க்களப் பயிற்சி யடைந்து ஆங்கிலேய சைனியங்களுக்குக் கௌரவ காப்டனாக நியமிக்கப்பட்டார். இவர் தமது சைனியங்களிற் சிலருடன் இப்போது யுத்த முனைக்குச் சென்றிருக்கின்றார்.

## vi. H. H. THE PRINCE OF BHOPAL

### போபால் ராஜகுமாரன்

போபால் ராஜ்யம் மத்திய இந்தியாவிலுள்ளது. இதன் விஸ்தீரணம் 6,902 சதுரமைல்.இதில் 9லக்ஷம் குடிகளிருக்கின்றனர்.இந்தஸம்ஸ்தானத்தின் அரசியாகிய ஜான்பேகம் ஸாஹெப் ராணியாரவர்களின் இரண்டாவது குமாரனாகிய கர்னல் உபயதுல்லாகான் இப்போதிய யுத்தத்திற்கென்று தன் சைனியங்களுடன் புறப்பட்டுச் சென்றான். வழியில் தேக அசௌக்கியத்தினால் மேலே செல்ல முடியாமற்போகவே, தனக்குச் சம்மதி யில்லாமலிருந்தும் நமது துரைத்தனத்தாரால் ஏடன் துறையில் இறக்கப்பட்டு இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பப்பட்டான். இவன் மகா சூரன். 1726-ம் வருஷத்தில் முதல்முதல் இந்த

ஸம்ஸ்தானத்தை ஸ்தாபித்தவராகிய டோஸ்ட் மகமத் கானு-டைய வம்சத்தைச் சேர்ந்தவன். இவன் 1905-ம் வருஷத்தில் இந்த ராஜ்யத்தின் சேனைகளுக்கு அதிபனாக நியமிக்கப்பட்டு இப்போது ராணுவத்தில் அநேக சீர்திருத்தங்களைச் செய்திருக்கின்றான். இவனிடம் மிகவும் சாமர்த்தியமுள்ள குதிரைப்பட்-டாளமும் காலாட்படையும் உண்டு.

## viii. H. H. THE MAHARAJA OF KISHENGARH

### கிஷன்கார் மஹாராஜா

கிஷன்கார் என்னும் ஸம்ஸ்தானம் ராஜபுதனத்திலிருக்-கின்றது. இதன் விஸ்தீரணம் 858 சதுரமைல். இதில் 87,000 குடிகளிருக்கின்றனர். இதன் அரசன்பெயர் மதனசிங்க். இவர் 1884-ம் வருஷம் பிறந்தார். 16-வது நூற்றாண்டில் ஜோட்பூர் அரசனாக விருந்த உதயசிங்க் மகாராஜாவின வம்சபாரம்பரை-யைச் சேர்ந்தவர் இவர்: ராஜபுத்திரத் தலைவராகிய உதயபுரத்து மகாராஜாவின் புதல்வியை மணஞ்செய்துகொண்டிருக்கின்றார். இவரிடம் சுமார் இரண்டாயிரம் ராணுவவீரரும் 65 பீரங்கிக-ளும் உண்டு. இவர் மிகவும் சௌரியவந்தர்.

## ix. H. H. THE NAWAB OF SACHIN

### ஸச்சின் நவாப்

ஸச்சின் என்பது பம்பாய் ராஜதானியில் உள்ளது. இது ஓர் சிறிய ராஜ்யம். இது 42 சதுரமைல் விஸ்தீரணமுள்-ளது. ஜனத்தொகை இருபதினாயிரம். இதற்கு ஓர் மகம்மதி-யர் நவாப்பாக விருக்கின்றார். இவர் பெயர் ஸித்திக் இப்ரஹிம் மகமத் யாகூப் கான். இவர் ராஜ்கோட் காலேஜிலும், அஜ்மீரி-லுள்ள மேயோ காலேஜிலும் ஆங்கிலம் கற்று, 'இம்பீரியல் காடெட் கோர்' என்னும் சைனியத்தில்சேர்ந்து நன்றாக ராணுவ சங்கதிகளை அறிந்துகொண்டு அதற்கு லெப்டினெண்டு மாயி-

ஞர். பிறகு 1909-ம் வருஷத்தில் இவருக்கு ஆங்கிலேயப் படையில் கௌரவ காப்டன் அதிகாரம் கொடுக்கப்பட்டது. இவர் பம்பாய்க் கவர்னருக்குக் கௌரவ எய்டிகாங்காக நியமிக்கப்பட்டிருக்கின்றார்.

இவர் மகா தைரியசாலி: யுத்தமுனைக்குச் சென்று சண்டை செய்ய விருப்பம் அதிகமாகக் கொண்டதனால், நமது வைஸ்ராயவர்கள் இவரது வேண்டுகோளுக் கிணங்க இவரை யுத்தமுனைக்கு அனுப்பியிருக்கின்றனர்.

## X. H. H. THE MAHARAJA OF COOCH BEHAR

### கூச் பேஹார் மஹாராஜா

கூச்பேஹார் என்பது வங்காளத்தின் வடபாகத்திலுள்ள ஓர் ஸம்ஸ்தானம். இது 1,307 சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இதன் ஜனத்தொகை 5,93,000. இதில் இந்துக்களும் மகம்மதியரும் குடியிருக்கின்றனர். இதன அரசன் பெயர் ராஜேந்த்ர நாராயண பப். இவர் 1882-ம் வருஷம் பிறந்தார். இவர் ஆங்கிலம் நன்றாகக் கற்றவர்: 'இம்பீரியல் கேடட் கோர்' என்னும் ராணுவப்படையில் சேர்ந்தவர். இவரிடம் ஓர் சிறிய பட்டாளம் உண்டு. இவருடைய பாட்டனார் இறந்துவிட்ட காலத்தில், இவருடைய தந்தை ஒரு வயதுக் குழந்தையாயிருந்தார். அப்பொழுது ஆங்கிலேயர் இந்த ராஜ்யத்தைப் பரிபாலித்துவந்து குழந்தையாக விருந்த ந்ருபேந்த்ர பப் என்னும் இவரது தந்தைக்குக் காசிமாநகரத்திலும் கல்கத்தாவிலும் இங்கிலாந்திலும் கல்வி கற்பித்துக்கொடுத்தார். இந்த ந்ருபேந்த்ரபப் யுக்த வயதடைவதற்கு முன்னமே 1863-65-ம் வருஷங்களில் நடந்த பூடான் யுத்தத்தில் ஆங்கிலேயருக்கு மிகவும் உதவியாக இருந்தார். இவர் 1883-ம் வருஷத்தில் பட்டத்திற்கு வந்தவுடனே நமது துரைத்தனத்தார் இவரது நடத்தைக்கு மகிழ்ந்து 1885-ம் வருஷத்தில் இவர்க்கு மகாராஜா

வென்னும் பட்டத்தை யளித்தனர்: ஆங்கிலேய சைனியத்தில் உயர்ந்த அதிகாரமும் கொடுத்தனர். இவர் இங்கிலாந்துக்குப் பன்முறை சென்று அங்கு அதிக பிரசித்தியடைந்து நமது சக்ரவர்த்திக்கு ஏடிகாங்காகவும் நியமிக்கப்பட்டார். இவர் 1911 ஞு செப்டம்பர் மாதம் 21-ம் தேதி லண்டன்மாநகரத்தில் மரணமடைந்தனர். உடனே இவரது குமாரரான ராஜேந்த்ர நாராயண பட்டத்திற்கு வந்தார். இவர் மிகவும் சூரர். இவருடைய தம்பியாரான ஹிதேந்த்ர நாராயண னென்பவர் யுத்தமுனைக்கு அனுப்பப்பட்டிருக்கின்றார். இந்த ராஜ்யம் 1773-ம் வருஷம் முதல் ஆங்கிலேய அதிகாரத்திற்கு உட்பட்டு ஆங்கிலேயருக்கு உற்ற துணையாக விருக்கின்றது.

## xi. H. H. THE MAHARAJA OF PANNA

### பன்னு மஹாராஜா

பன்னு என்பது மத்திய இந்தியாவிலுள்ள பண்டில்கண்ட் மாகாணத்திலுள்ளது. இதன் விஸ்தீரணம 2,492 சதுர மைல். இதில் இரண்டு லக்ஷம் (2,00,000) குடிகள் வசிக்கின்றனர். இந்த ஸம்ஸ்தானத்தில் வயிரக்கற்கள் அகப்படும் கனிகள் அநேகம் உண்டு.

இந்த ஸம்ஸ்தானத்தில் 18-வது நூற்றாண்டில் ப்ராணநாத ரென்னும் ஓர் மதாசாரியர் அதிக பிரசித்தி யடைந்திருந்தார். இவர் இந்நாட்டினர் யாவராலும் அதிகமாக மரியாதை செய்யப்பட்டவர். இவர் இந்துக்களுக்கும் மகம்மதியருக்கும் அதிக ஒற்றுமையுண்டாக்கவேண்டு மென்னும் எண்ணத்தினால், வேதங்களினின்றும் கொரானினின்றும் அதற்கு அநுகுணமான மேற்கோள்களை எடுத்துக்காட்டி மஹிதாரியல் என்னும் ஓர் பெரிய கிரந்தம் செய்திருக்கின்றனர். இந்தக் கிரந்தம் இந்நாட்டுக் கோயிலில் ஓர் பொன் பீடத்தில் வைக்கப்பட்டு இன்

றும் வெகு பக்தியுடன் பூஜைசெய்யப்பட்டுவருகின்றது. இவ-ரது மதக்கொள்கை வெகுவாகப் புகழப்படுகின்றது.

இந்த ராஜ்யம் 1811-ம்வருஷத்தில் ஆங்கிலேயருக்குச் சுவாதீன மாயிற்று. இதன் அரசன் பெயர் மஹேந்த்ர ஜாத்-வேந்த்ர சிங்க். இவர் 1893ஆ பிறந்தவர்; 1902ஆராஜ்யா-திகாரத்தை வகித்தார். இவர் அஜ்மீரில் மேயோ காலேஜில் ஆங்கிலம் கற்றார். இவரிடம் ஓர் சிறிய பட்டாளமும் சில பீரங்-கிகளும் உண்டு. இவருடைய தமயியான ஹிரசிங் கென்பவர் இப்போது ஐரோப்பாவில் சென்று யுத்தமுனையிலிருக்கின்றார்.

இவருடைய முன்னோரான நிருபத்சிங்க் என்பவர் நிகழ்ந்த மஹா சிப்பாய் கலகத்தில் ஆங்கிலேயருக்குச் கலிஞ்சார் கோட்-டையைக் காப்பாற்றிகொடுத்து அதிக உதவி செய்தார். அத-னால் நமது துரைத்தனத்தார் உவகது இவருக்கு 'மஹேந்த்ர' பட்டமும், ஸிமாரியா மாகாணத்துடன 20,000 ரூபாயும் பரிசா யளித்தனர்.

## xii. H. H THE NIZAM OF HYDERABAD

### ஹைதராபாத் நைஜாம்

ஹைதராபாத் என்னும் ராஜ்யமானது இந்தியாவின் மத்தியி லுள்ளது. இது 83,000 சதுரமைல் விஸ்தீரண முள்-ளது: அதாவது மைசூர் ஸம்ஸ்தானத்தைவிட மூன்று பங்கு அதிகம். இது இந்தியாவி லுள்ள எல்லா ஸம்ஸ்தானங்களி-லும் பெரியது. இதன் ஜனத்தொகை ஒருகோடியே முப்பது லக்ஷம். இதன் வருஷவரும்படி ஐந்துகோடி ரூபாய். இஃது ஒரு மொகலாய ராஜ்யம்.

இவ்விராஜ்யத்தில் பொன், வைரம், நிலக்கரி முதலியவை-கள் அகப்படக்கூடிய கனிகள் பலவிடங்களி லிருக்கின்றன. இந்நாட்டரசன் நைஜாம் என்னும் பட்டப்பெயருடன் விளங்-

குவன். இப்பொழுது மீர் உஸ்மான் ஆலி கான் என்பவர் நைஜாமாயிருக்கின்றார். இந்த ஸம்ஸ்தானம் மகம்மத்ஷா டில்லி சக்ரவர்த்தியாக விருக்கும் காலத்தில் அவரது மந்திரியான அஸப்ஜா என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டது. இது சில நாள் பிரெஞ்சுக்காரருக்கு உட்பட்டிருந்து, முடிவில் 1766-ம் வருஷத்தில் ஆங்கிலேயர் அதிகாரத்திற்குக் கீழ்ப்படிந்தது. இஃது அநேக அரசர்களுடன் பல தடவைகளில் யுத்தம் செய்து ஆங்கிலேயருக்குப் பன்முறை சகாயம் செய்தது. இப்பொழுது நைஜாமின் தந்தையான மீர் மஹபூப் ஆலி கான் என்பவர் இரண்டரை வருஷக் குழந்தையாக விருக்கும் போதே அவருடைய தந்தை மரணமடைந்ததனால், அவர் குழந்தைப் பருவ முதற்கொண்டே ஆங்கிலேயரால் கல்வி கற்பிக்கப்பட்டனர். அச்சமயத்தில் இந்த ராஜ்யம் ஸர் ஸாலர்ஜங்க் என்னும் மந்திரியால் ஆளப்பட்டிருந்தது. அவரது காலத்திலேதான் இந்த ராஜ்யம் மிக்க கியாதியுடன் அதிக விருத்தியடைந்தது. மைனராக விருந்த குழந்தை நைஜாம் வைஸ்ராயான ரிப்பன் பிரபுவின் காலத்தில் 1884 ௵ பிப்ரவரிமீ 5௳ பட்டத்திற்கு வந்தார். இவர் 1885-ம் வருஷத்தில் தமது படைகளை ஈஜிப்டுக்கு அனுப்பியும், 1887 ௵ ருஷியருக்கு விரோதமாக நமது கவர்ன்மெண்டாருக்கு உதவி புரிந்தும் சகாயம் செய்தார்.

இவர் ஆங்கிலேய ராஜப்பிரதிநிதிகளுக் கெல்லாம் மிகவும் உற்ற நண்பராயிருந்தார் ; யாவராலும் நன்குமதிக்கப்பட்டவர். இவருக்கு நமது துரைத்தனத்தார் பல தடவைகளில் பல கௌரவபட்டங்கள் கொடுத்திருக்கின்றனர். இவர் ஆங்கிலேயப் படையில் கௌரவ அதிகாரத்தை வகித்தவர். இவர் 27 வருஷம் ராஜ்ய பரிபாலனஞ்செய்து, 1911௵ ஆகஸ்டுமீ 29௳ கொடிய பாரிசவாயுவினால் மரணமடைய, இவரது அருமைப் புதல்வரான நவாப் மீர் உஸ்மான் ஆலி கான் பட்டத்திற்கு வந்தார்.

இவர் 1886௵ ஜனவரி௴ 21௳ பிறந்தவர். இவரை 1911௵ அக்டோபர்௴ 17-ம் தேதியில் சிம்மாசனத்தின்மீ தேற்றியவர் நமது ஹார்டிஞ்ஜ் பிரபுவே. இவர் நமது சக்ரவர்த்தியவர்கள் டில்லி தர்ப்பார் கூட்டியகாலத்தில் தமது ராஜவிசுவாஸத்தைக் காட்டிப் பணிந்தவர்களில் முதன்முதலானவர். இவர் ஆங்கிலம் நன்றாகக் கற்றுள்ளவர்: பரம தயாளத்வமும் சாந்தகுணமு முள்ளவர். இவரிடம் 10,000 போலீஸ் படைகளும், வருஷ மொன்றுக்கு எழுபதுலக்ஷம் ரூபாய் செலவு பிடிக்கும்படியான ராணுவமு மிருக்கின்றன. இவர் ஆங்கிலேயப்படையில் உயர்ந்த அதிகாரம் பெற்றவர். இச்சமயம் ஐரோப்பாவில் நடந்துவரும் பெரிய யுத்தத்திற்கு இவர் தமது படைகளில் சிலவற்றை ஷா மீர்ஜா பே என்பவரின் அதிகாரத்திற் குட்படுத்தி யுத்த முனைக்கு அனுப்பியிருக்கின்றனர்.

---

## 19. THE QUEEN AND THE PRINCE OF WALES

## மகாராணியாரும் இளவரசரும்

மாட்சிமைதங்கிய நமது மகாராணியாராகிய மேரீ சக்ரவர்த்தினியம்மாள் இப்பொழுது நடந்துவரும் யுத்தத்தை விலக்குவதற்காக வெகு பிரயாசை எடுத்துக்கொண்டும், அஃது முடியவில்லை. நாட்டின் நற்றொழில் மேற்கொண்ட மற்ற ஸ்திரீகளைப்போல் தாமும் அவர்களுடன்கலந்து, யுத்தத்தில் காயமடைந்து திரும்பிவருபவரைத் தாமே நேரிற்சென்று உபசரித்து அவர்களது காயங்களை ஆற்றுவதற்கான சிகிச்சைகளைச் செய்துவருகின்றனர்: யுத்தத்திற்குச் சென்றிருப்பவர்களுக்கு உடைமுதலிய உபகரணங்களைத் தாமும் தயார் செய்துவருகின்றனர்: அவ்வீரர்களின் பெண்டு பிள்ளைகளைத்

தாம் நேரிற் சென்று விசாரித்துத் தேற்றி அவர்களுக்கு வேண்டிய உதவிகள் புரிந்தும் வருகின்றனர்.

இளவரசரோ யுத்தத்தில் மரணமடையும் போர்வீரர்களின் குடும்பங்களுக்குக் கஷ்டம் தோன்றாவண்ணமாய்த் தகுந்த ஏற்பாடுகள் செய்ய வேண்டி, ஏராளமான பணம் தாமே கொடுத்-ததுமன்றி, மற்றவர்களிடத்தும் வசூல் செய்துவருகின்றனர். தாமும் யுத்தஞ்செய்ய விருப்பங்கொண்டவராய்த் தமது பட்-டாளங்களிற் சேர்ந்து யுத்தகளத்திற்குச் சென்றிருக்கின்றனர். இவர் ஆங்கிலேயப் படைகளுக்குத் தலைவரான ஜெனரல் ப்ரேன்ச் என்னும் துரைக்கு எய்டிகாங்காக நியமிக்கப்பட்டிருக்-கின்றார். அவ்வேலை மிகவும் ஆபத்தானதாயினும், இளவரசர் மிக்க மகிழ்ச்சியுடன் அதனை ஒப்புக்கொண்டு வெகு தைரியத்-துடன் பார்த்துவருகின்றார். தாம் யுத்தம் செய்யும் காலம் தவிர, மற்றைச் சமயங்களில் காயமடைந்திருப்பவர்களிடம் சென்று தாமே நேரில் தக்க சிகிச்சைகள்செய்து ஆகாராதிகளைக் கொடு-த்து மிக்க அன்புடன் அவர்களை விசாரித்துவருகின்றனர். தம் சைனியங்களாற் பிடிக்கப்பட்டிருக்கும் சத்துருக்களாகிய ஜெர்ம-னிப் போர்வீரர்களுக்கும் யாதொரு குறைவும் சங்கடமும் இல்-லாதபடி ஆச்சரியகரமான அன்புடனே விசாரணை செய்துவரு-கின்றனர். இவரது ஆதரணையைக் காணும் சத்துருக்களும் இவரை வெகுவாகப் புகழ்கின்றனர்.

---

## 20. INDIAN LOYALTY

## இந்தியரின் ராஜவிசுவாஸம்

நமது சக்ரவர்த்தியார்க்கும் ஜெர்மனியர்க்கும் யுத்தம் தொடங்கிவிட்டதெனத் தெரிந்தவுடனே, வடகோடி ஹிமாசல முதல் தென்கோடி கன்யாகுமரி பரியந்தம் வசிக்கும் ஹிந்துக்களும் மகம்மதியரும் மற்றெல்லா ஜாதியா-

ரும் ஏகோபித்து, அவரவர் தத்தம் ஊர்களிலும் பெரிய பட்டணங்களிலும் சபைகளைக் கூட்டி, நமது சக்ரவர்த்தியா-ரவர்கள் தற்சமயம் யுத்தத்திற் பிரவேசித்திருக்கும் காரணத்-தை நியாயமும் ஆவசியகமுமானதென்றே கருதி ஆமோதித்து, அவரது குடிகளாகிய தங்களா லியன்றவளவு ஸ்வேச்சையாய்ச் சகாயஞ்செய்தும், இந்த யுத்தத்தில் நமது சக்ரவர்த்தியார்க்கே ஜயமுண்டாக வேண்டுமென்று அநுதினமும் ஈச்வரப் பிரார்த்-தனைகள் செய்தும் வருகின்றனர்.

அவரவர் தம்மாற் கூடிய பொருட்சகாயம் செய்வது தவிர, தாமும் யுத்தகளத்திற்குச் சென்று போர்புரியச் சித்த-மாயிருப்பதாகவும், யுத்தரங்கத்தில் ராணுவாதிபதிகள் தமக்கு எந்த வேலைதான் இட்டபோதிலும் அதனை அவ்வதிகாரிகளின் உத்தரவின்படியே மாறுபேசாமல் மகிழ்ச்சியுடன் நடத்தச் சித்தமாயிருப்பதாகவும் நமது அரசாங்கத்தார்க்குத் தெரிவித்-திருக்கின்றனர். இந்தியாவில் ஏறக்குறைய 700 ஸ்வதேச ஸம்ஸ்தானங்கள் இருக்கின்றன. அவைகளின் அதிபதிகள் யாவரும் வேண்டுமிடத்துத் தமது ராஜ்யங்களிற் கிடைக்கும் வரும்படி முற்றும் யுத்த செலவுக்காகக் கொடுத்துவிடுவதாகத் தெரிவித்துத் தாமும் தமது சைனியங்களுடன் ஆங்கிலேய-ரோடு கலந்து யுத்தம் செய்வதாகவும் முன்வந்திருக்கின்றனர். அன்றியும், ஒவ்வொருவரும் யுத்தசெலவிற்காகத் தாமே இஷ்-டப்பட்டு லக்ஷக்கணக்காய்த் திரவியமும்கொடுத்திருப்பதுடன், யுத்தத்திற் காயமடையும் வீரர்களுக்கு வேண்டிய சௌகரி-யங்களைக் கருதி இங்கிருந்து ஏராளமாக ஆகாரம் உடை முத-லிய சாமான்களையும் அனுப்புகின்றனர்.

இந்தியாவிலுள்ள முக்கியமாகிய 27 ஸம்ஸ்தான மகா ராஜாக்களில் ஐதராபாத்து நைஜாமானவர் தமது சைனியங்க-ளிற் பலவற்றை யுத்தகளத்திற்கு அனுப்பியிருக்கின்றனர் : மேலும், அறுபதுலக்ஷம் (60,00,000) ரூபாயும் கொடுத்திருக்-

கின்றனர்: தாமும் நேரில் யுத்தகளத்திற்குச் சென்று சமரிடவும் சித்தமாயிருக்கின்றனர்.

மைசூர் மகாராஜாவும் தமது சைனியங்களை அனுப்பச் சித்தமாயிருக்கின்றனர்: ஐம்பதுலக்ஷம் ரூபாய் யுத்த செலவிற்காகக் கொடுத்திருக்கின்றனர்: அன்றியும், யுத்தவீரர்களின் குடும்பங்களுக்குத் தகுமான ஏற்பாடுகளைச் செய்யும்பொருட்டு ஏராளமான பொருட்சகாயமும் செய்திருக்கின்றனர்.

இப்படியே பரோடா மகாராஜாவும்,ஜயபூர் மகாராஜாவும், மற்று மநேக ராஜாக்களும் அநேக லக்ஷம் ரூபாய் கொடுத்திருக்கின்றனர்: சமயம் நேருமிடத்துத் தங்கள் சைனியங்களையும் அனுப்பச் சித்தமாயிருக்கின்றனர்.

க்வாலியர் மகாராஜா 1,000 குதிரைகளையும், பஞ்சாப் தேசத்துச் சிற்றரசர்களும் ஸர்தார்களும் சேர்ந்து அநேக ஒட்டகங்களையும்,ரீவாஸம்ஸ்தானத்து மகாராஜா தமது துருப்புக்களையும் கஜானாவையும் சொந்த நகைகளையும், ஹோல்கார் மகாராஜாவும் ஜாம்நகரத்து ராஜாவும் சென்னை ராஜதானியிலுள்ள ஜமீன்தார்கள் பலரும் சேர்ந்து அநேக ஆயிரம் குதிரைகளையும் கொடுக்கச் சித்தமாயிருக்கின்றனர்.

சித்ரால் தேசத்துத் தலைவனும், கைபர் கணவாயில் வசிக்கும் பூர்விக ஸ்வதேச ஜாதியாரும், நேபாள கவர்ன்மெண்டாரும் உதவிசெய்வதாய்த் தெரிவித்திருக்கின்றனர். முன் சொல்லியபடி யுத்தமுனைக்குச் சென்றிருக்கும் 12 ராஜாக்கள் தவிர, இன்னும பல அரசர்களும அவரவர் யுத்தசெலவிற்கு லக்ஷக்கணக்கான திரவியம் கொடுத்ததுமன்றி, தங்கள் சைனியங்களுடன தாமே நேராக யுத்தகளத்திற்குச் சென்றிருக்கின்றனர். வேறு சிலர் தமது சைனியங்களை யனுப்பியிருக்கின்றனர். வைத்திய சாஸ்திரங்களில் தேர்ந்த இந்தியர்களிற் பலர் யுத்தத்தில் காயமடைபவர்க்குச் சிகிச்சைகளைச் செய்யப்போவதாக முன்வந்திருக்கின்றனர். சாமானிய ஜனங்களிற் பலர் காலாட்

7

படைகளில் சேரச் சித்தமாயிருப்பதாய்த் தெரிவித்திருக்கின்றனர். அநேகமாயிரம் மாணுக்கர்கள் யுத்தசமயத்தில் ராணுவாதிகாரிகளுக்குச் சௌகரியமான வேலைகள் செய்யவும் காயமடைந்தார்க்குச் சமீபமாக இருந்து வேண்டிய சிச்ருஷைகள் இயற்றவும் சித்தமாகக் காத்திருக்கின்றனர். பெரிய தனிகர்களில் அநேகர் யுத்தத்தில் இந்திய ராணுவங்களின் ஆகாராதிகளுக்கு வேண்டிய செலவுகளிற் சிலபாகத்தைத் தாம் ஏற்றுக் கொள்வதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

வடஇந்தியாவிலிருக்கும் க்வாலியர் மகாராஜாவும் மற்றும் சில அரசர்களும் ஜமீன்தார்களும் ஒன்றுசேர்ந்து சொந்தமாக அநேகலக்ஷம் ரூபாய் செலவுசெய்து ஓர் ஆஸ்பத்திரிக்கப்பலைத் தகுந்த முஸ்தீபுகளுடன் தயார்செய்து அதற்கு லாயல்டி (ராஜவிசுவாஸம்) என்று பெயரிட்டு யுத்தகளத்திற்கு அனுப்புகின்றனர். சென்னையிலிருந்தும் மதராஸ் என்னும் பெயருடன் ஒரு ஆஸ்பத்திரிக்கப்பல் சென்றது. இதற்குச் சில அரசர்களும் ஏனையோரும் அரிசி முதலிய பண்டங்களும் மருந்துகள உடைகள் முதலிய மற்றைச் சாமான்களும் கொடுத்தனர்.

இந்தியப் பெண்களிற் பலர் ஒன்றுகூடிச் சபைகள்சேர்த்து யுத்தத்திற்குச் சென்றிருக்கும் படைவீரர்களுக்கு உடைகளைத் தயார்செய்துவருகின்றனர். சில பெண்கள் காயமடைபவர்க்கு வேண்டிய உபகரணங்களை ஏற்பாடு செய்கின்றனர். சிலர் யுத்த செலவுக்குப் பணம்கொடுத்து உதவிபுரிகின்றனர். பெரிய பட்டணங்களி லுள்ள ஸ்த்ரீகளிற் சிலர் விதம்விதமான துணிகளை வாங்கிச் சட்டைகள்செய்வதற்காகக் கத்திரித்துக்கொடுப்பதும், சிலர் அவற்றைத் தைத்துக்கொடுப்பதும், வேறு சிலர் அங்கிகளை முழுதும் தாமே தயார்செய்வதுமான பல தொழில்களில் வெகு ஊக்கங்கொண்டிருக்கின்றனர்.

கிராமங்கள் தோறும் பயிரிடும் குடிகள் அவரவர் சக்திக்கேற்றபடி சகாயம் செய்கின்றனர்: நமது துரைத்தனத்தார்க்கு

ஜயமுண்டாகவேண்டு மென்று ஆங்காங்குக் கோயில்களில் பிர பலமான பூஜைகளும் உத்ஸவங்களும் நடத்திவருகின்றனர்.

இந்தியாவிலிருக்கும் மகம்மதியர் தமது மதஸ்தினராகிய துருக்கிதேசத்தார் எதிர்க்கக்ஷியில் சேர்ந்தபோதிலும், தாங்கள் ஆங்கிலேய ராஜாங்கத்தாரை யொட்டியே நடக்கவேண்டுமென்னும் உறுதிப்பாட்டுடன் அவரவர் ஏராளமான பொருட்சகாயம் செய்திருக்கின்றனர்: துருக்கியின் தற்சமய நடத்தையை ஆமோதிக்காமல் தமது ஆங்கிலேய ராஜாங்கத்தாரின் ஜயத்தையே நாடுகின்றனர்: இரண்டு மூன்று மகம்மதிய நவாப்புக்கள் நமது இந்தியப்படைகளுடன் சேர்ந்து ஜெர்மனியருக்கு எதிரிகளாய்ப் போர்முனைக்குச் சென்றிருக்கின்றனர்.

இந்த யுத்தத்தில் நேரிடும் பலவகைச் செலவுகளுக்காக மகாராஜாக்களாவார் கொடுத்த தனறிப பொதுஜனங்களும் சிற்றரசர்களும் ஜமீன் ஜாகீர் மிட்டாதாரர்களும் சேர்ந்து எழுபத்தைந்துலக்ஷம் ரூபாயக்குமேல் கொடுத்திருக்கின்றனர். இன்னும் பிரதிதினமும் ஏராளமான தொகை வசூலாகிவருகின்றது.

இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மடாதிபரும் பொதுஜனங்களுடன் சேர்ந்து பொருளுதவி செய்கின்றனர்: தமது ஸ்வாதீனத்திலிருக்கும் ஆலயங்களிலும் மடங்களிலும் தந்தம் மதக் கொள்கைகளுக் கேற்றவாறு நமது ஜார்ஜ் சக்ரவர்த்தியின் ஜயத்தை நாடிப் பெரும் பூஜைகளைச் செய்கின்றனர்.

கண்ணறிதெய்வமாகிய நாட்டு இறைவனது க்ஷேமார்த்தமாய் இப்படி மனப்பூர்வமாக இடும் பூஜைகளைப் பஞ்சேந்த்ரிய அகோசரனை ஸர்வேச்வரன மனமுவந்தேற்று, ஜெர்மனியார் விஷயமாய் ஸர்வ ஸம்ஹார மூர்த்தியாகி ஸமஸ்த பகைவரையு மழித்து, நமது சக்ரவர்த்தியாரின் விஷயமாய்ப் பரம பக்த வாத்ஸல்யனுகிப் பரிபூர்ண கடாக்ஷத்துடன் காத்து ரக்ஷிப்பானாக!

## 21. H. E. LORD HARDINGE

## ஹார்டிஞ்ஜ் பிரபு

இப்பொழுது இந்தியாவுக்கு ராஜப்ரதிநிதியாக இருப்பவர் ஹார்டிஞ்ஜ் பிரபு. இவர் 1910ஆ நொவெம்பர்மீ 23உ இந்நாட்டின் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டார். இவர் மிகவும் தயாளு: ராஜதந்த்ரி : ஹிந்துக்களிடம் அதிக விசுவாஸமுள்ளவர். இவர் இந்த உத்தியோகத்திற்கு வந்து இந்தியாவிற்குச் செய்திருக்கின்ற நன்மைகள் பல உள. இவராலேதான் வங்காளத்து ஜனங்களின் மனவதிருப்தி நீங்கிற்று. இவரது பரிபாலனத்திலேதான் டில்லிமாநகரத்தில் லோகப்பிரசித்தி பெற்ற தர்பார் நடந்தது. இவரது ஏற்பாடுகளினாலேதான் வங்காளத்திற்குத் தனிக்கவர்னர் நியமிக்கப்பட்டது. இம்மகானது கருணையினாலேதான் தென்னாப்பிரிக்காவிலுள்ள ஹிந்துக்கள் நெடுநாளாய்ப் படும் துயர் ஒருவாறு யொழிந்தது.

இம்மகான் நமது சக்ரவர்த்தியாரவர்களின் ஏற்பாட்டின்படி கல்கத்தாவை மாற்றி டில்லியை இந்தியாவுக்குத் தலைநகராக்கிப் பரிவாராதி ஆடம்பரங்களுடன் நகரப்பிரவேசஞ்செய்யும் சமயத்தில், கயவராகிய சில ராஜத்ரோகிகள் இவரது உயிர்க்கு ஆபத்தை உண்டுபண்ணக் கருதி வெடிக் குண்டொன்றைப் போட்டனர். கருணைக்கடலாகிய கர்த்தனின் திருவருளால் இவர் இவ்வாபத்தினின்றும் தப்பித்துக்கொண்டனர். அச்சமயத்திலும் இவர்க்கு இந்துக்களின்மேலிருந்த விசுவாஸம் எத்துணையும் மாறுபடவில்லை.

இவர் தற்சமயம் நேரிட்டிருக்கும் யுத்தத்திற்குத் தமது புதல்வனை அனுப்பியிருந்தனர். இவரது பிரேரணையினாலேதான் நமது இந்திய சைனியம் ஐரோப்பாவிற்கு அனுப்பப்பட்டது. இவருடைய சிபார்சினாலேதான் நமது இந்திய

ராஜாக்களுக்கும் ஆங்கிலேயப் போர்க்களத்தில் உந்நத ராணு வாதிகாரங்களைப் பெற்றது.

இப்பொழுது ஐரோப்பாவிற்குச் சென்றிருக்கும் இந்திய சைனியங்களுக்குப் பாடியால மகாராஜா லெப்டினண்ட் கர்னலாகவும், ஐடார் மகாராஜா மேஜராகவும், பன்னாதேசதது ஹிர சிங்க் ராஜகுமாரனும ஜோட்பூர் மகாராஜாவும லெப்டினண்ட்களாகவும், ஐதராபாத் ராஜ்யத்தைச் சேர்ந்த ஷா மீர்ஜா பே என்பவர் காப்டனாகவும், குச்பேஹார் மகாராஜாவின் தமபியும் திகாரி தேசத்தின் ராஜகுமாரனும ஸைந்தார் ஜோதீந்த்ரசிங்கும் உதவி லெப்டினண்ட்களாகவும நியமிக்கப்பட்டனர். ஆங்கிலேயருக்கும் இந்துக்களுக்கும் முன்னைவிட இப்பொழுது அதிக நேசமும் கௌரவமும் உண்டாகியது இவ்வாலேதான்.

யுத்தத்திற்குச் சென்ற நமது இந்திய சைனியத்தின் சௌகரியத்திற்காக இவர் அதிக பணம் கொடுத்திருக்கின்றார்: இன்னும் மற்றவரிடத்தும் ஏராளமான பணம வசூல் செய்து வருகின்றனர்: யுத்தத்தில் மரணமடையும இந்தியப் போர்வீரரின் குடும்பஸம்ரக்ஷணை விஷயமாகவும் மிக்க பொருள் சேகரிக்கின்றனர்.

இவர் ஹிந்துக்களிடம் அதிக அபிமானமும் கௌரவமும் வைத்த பிரபுக்களில் ஓர் சிறந்தவர். இம்மகான் இன்னும் சில வருஷகாலம் இவ்விந்திய உத்தியோகத்திலிருந்தாரானால் இந்தியாவுக்குப் பல நன்மைகள் உண்டாகுமென இந்நாட்டினர் அநேகர் நமது ஜார்ஜ்சக்ரவர்த்தியார்க்கு மனுச்செய்திருக்கின்றனர்.

யுத்த முனைக்குச் சென்ற இவரது புதல்வன் வெகு சூரனென மதிக்கப்பட்டு நமது சக்ரவர்த்தியினால் சில கௌரவ பட்டங்களளிக்கப் பெற்றான்: ஆனால், யுத்தத்தில் மரணகாயமடைந்து யாவரும் ஆறாகக் கண்ணீர் சொரியப் பலவகை யுத்த வைபவங்களுடனே வீரசொர்க்கம் சேர்ந்தான். நமது வைஸ்ராயவர்கள் இத்தகைய வீரசிகாமணியாகிய புதல்வனை யிழந்த

தற்காக ஆங்கிலேய துரைத்தனத்தாரும் ஹிந்துக்கள் ஒவ்வொருவரும் மிகுதியும் விசனிக்கின்றனர்.—எல்லாம் வல்ல இறைவன் நமது பிரபுவை இவ்விசனத்தினின்றும் கரையேற்றிக் காப்பாருக!

---

## 22. THE THREE GOVERNORS

## மூன்று கவர்னர்கள்

### I. H. E. LORD PENTLAND

### பென்ட்லண்ட் பிரபு

இவர்தான் சென்னைக் கவர்னர். இவர் 1912௵ அக்டோபர் மாதம் 30-ம் தேதி இந்தச் சென்னை மாகாணத்தின் அதிகாரத்தை ஒப்புக்கொண்டார். இவர் இம்மாகாணத்துக் குடிகளின்மேல் மிகவும் அபிமானமுள்ளவர்: சுபாவத்திலே மிகவும் தயாளு: தெய்வபக்தியுள்ளவர்: சாந்தமும் பச்சாதாபமு முடையவர். இவர் இப்போது நடக்கும் யுத்தத்தில் காயமடையும் சைனியங்களுக்குச் சிகிச்சை செய்வதற்காக ஓர் ஆஸ்பத்திரிக்கப்பலை வெகு ஊக்கத்துடன் தயார்செய்தனுப்பினார். 'தண்டா' என்னும் ஓர் வர்த்தகக்கப்பலை விலைக்கு வாங்கித் தக்கபடி சீர்திருத்தி, அதற்கு 'மதராஸ்' என்று பெயர் வைத்து அதில் நூற்றுக்கணக்கான படுக்கைகளைத் தயார் செய்தனுப்பினார்.

ஐரோப்பாவில் யுத்தமாரம்பமானதும், இந்த மாகாணத்து வர்த்தகர்களில் பலர் அநுவசியமாய்ச் சாதாரண சாமான்களின் விலைகளை உயர்த்திவிட்டனர். இவர் அவர்களை நேரிற் கண்டு கண்டித்தும், பெரிய பட்டணங்களில் முக்கிய உத்தியோகஸ்தரை யேவி அங்குள்ள வர்த்தகர்களைக் கண்டிக்கச்செய்தும் குடிகளுக்குச் சகாயம் செய்தார். யுத்தத்தினால் தமக்குக்

கேடு சம்பவிக்குமெனப் பயப்படும் சில சாதாரணக் குடிக ளுக்கு அக்கவலை நீங்கும வண்ணமாய் மிக்க முயற்சி யெடுத் துக்கொண்டுள்ளார். இவர் ஹிந்துக்களிடம அதிக பிரீதியுள் ளவர்; பிரஜைகளுடன் கலந்துபேசி அவர்களுடைய வேண்டு கோள்களை யளிக்கு மெண்ணத்தினா: தம்மாற் கூடியவளவு இந்தியர்களுக்கு உபகாரமியற்ற வெண்ணியுள்ளவர்.

## ii. H. E. LORD CARMICHAEL

### கார்மிகேல் பிரபு

இவர் முன் இச் சென்னை ராஜதானிக்குக் கவர்னராக இருந்தவர்: தற்சமயம் வங்காளத்திற்குக் கவர்னராக விருக் கின்றனர். இவர் 1912௵ ஏப்ரல்மாதம் 1-ம தேதி வங்கா- ளத்துப் புதிய கவர்னா அதிகாரத்தைப் பெற்றார். இவர் பரம தயாளு: தருமவிஷயங்களில் அதிக ஊக்கமுள்ளவர். இவரிடம் எவர்க்கும் எளிதில நேரிற்கண்டு பேசக்கூடும். யாவரிடத்தும் சமமான அன்பு காட்டிச் சந்தோஷப்படுத்தும சுபாவமுள்ளவர் இவர்: சென்னைக் கவர்னராயிருந்த சொற்பகாலத்தில் நாட்டிற் குப் பல நன்மைகளைச் செய்தார். இவர் இந்தச் சென்னை ராஜதானியைச சீக்கிரத்தில் விட்டுப்போயினதற் குக் குடிகள் அதிக விசனப்படுகின்றனர்.

இவர் வங்காளத்தில் குடிகளுடன் சாதாரணமாகக் கலந்து யுத்த சங்கதிகளைக் குறித்துப் பேசிக குடிகளின பயத்தை ஆற் றினார். இவர் அந்நாட்டு வர்த்தகர்களுடன் கலந்து அவர்களது லாப நஷ்டங்களை ஆலோசித்து அக்கிரம விலைக ளில்லாமல் நல்ல சரக்குக்களைக் குடிகளுக்குக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

யுத்தத்திற் பிடிக்கும் பலவகைச் செலவிற்காக அம்மா- காணத்துத் தனிகரான குடிகளிடமிருந்தும், வர்த்தகர்களிட

மிருந்தும், ராஜாக்கள் ஜமீன்தார்களிடமிருந்தும் பொருள் சேகரித்தும் வருகின்றனர்.

இவரிடத்து அபிமானமற்ற இந்தியன் ஒருவனு மில்லை யென்று துணிவாய்ச் சொல்லலாம். இவர் என்றும் குடிகளுக்கு நன்மை செய்வதில் அதிக விருப்பமுள்ளவர்.

## iii. H. E. LORD WILLINGDON

வில்லிங்க்டன் பிரபு

இவர் பம்பாய் மாகாணத்துக் கவர்னர். இவர் 1913ஞ ஏப்ரல்மீ 5உ பம்பாய் மாகாணத்தின் பரிபாலனுதிகாரத்தை ஒப்புக்கொண்டார். இவர் குடிகளிடம் வெகு விசுவாஸமுள்ளவர்: தமது புத்திரனை இப்போது யுத்தத்திற்கு அனுப்பியிருக்கின்றனர். யுத்தத்திற்குச் செல்லும் போர்வீரர்களுக்கு வேண்டுமான சௌகரியங்களை ஏற்படுத்துவதற்காக ஏராளமான பணம் வசூல்செய்துவருகின்றனர்: ஐரோப்பிய யுத்தத்தினுல் ஜனங்களுக்குண்டான பயத்தைத் தக்க சூழ்ச்சிகளினுல் நிவர்த்திசெய்தனர்: சாதாரண சரக்குக்களின் அகவிலைகள் உயர்ந்திடாவண்ணம் கடின ஏற்பாடுகள் செய்து ஏழைக்குடிகளுக்கு உபகாரம் செய்திருக்கின்றனர். இவர் "லாயலடி" என்னும் ஆஸ்பத்திரிக் கப்பலைத் தயார்செய்தனுப்பியதில் அதிக முயற்சியெடுத்துக்கொண்டார்.

இவரது மகன் இப்போது யுத்தத்திற் காயமடைந்து தன் சைனியத்துடன் எதிரிகள் கையிற் சிக்கியிருக்கின்றுன்.

## 23. THE EMDEN'S PRANKS

## எம்டனின் சேஷ்டைகள்

ஸீனு தேசத்தில் கிறிஸ்துவமதத்தைப் பரவச்செய்ய வேண்டி ஜெர்மனி தேசத்திலிருந்து வந்திருந்த பாதிரிமார்க ளிருவரை 1897-ம் வருஷத்தில் பௌத்த சமயத்தில் விசுவாஸமுள்ள சில சீனதேசத்தினர் கொன்றுவிட்டனர். அதை யறிந்த ஜெர்மனிசக்ரவர்த்தி சைனு சக்ரவர்த்தியுடன் மனஸ்தாபப்பட்டுக் கியாசௌ லிங்க்டௌ என்னும் இரண்டு துறைமுகப் பட்டணங்களைத் துராகிருதமாய்த் தம வசப்படுத்திக்கொண்டனர்: ஆயினும், மறுவருஷத்தில் அந்தச் சக்ரவர்த்தியுடன் சமாதானம பேசிக் கியாசௌ என்னும் மாகாணத்தையும் அதைச் சேர்ந்த சில சிறிய தீவுகளையும் 99 வருஷங்களுக் கென்று வர்த்தகத்திற்காகக் குத்தகையாய் வாங்கிக்கொண்டு ஷை இரண்டு பட்டணங்களிலும் மற்றைத் தீவுகளிலும் அநேகம் கோட்டைகளைக் கட்டித் தம் நாட்டினர் சிலரைக் குடிபுகுத்தி, ஏராளமாக வர்த்தகம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர்: அன்றியும், அந்த இரண்டு பட்டணங்களிலும் சில படைகளையும யுத்தக்கப்பல்களையும் வர்த்தகபத்திரத்தின்பொருட்டு நிலைநிறுத்தியிருந்தனர். இப்படி வர்த்தக சகாயார்த்தமாய் நிறுத்தப்பட்டிருந்த யுத்தக் கப்பல்களில் சில ஐரோப்பாவில் யுத்தம் ஆரமபமாவதற்குமுன் ஸிங்க்டௌ நகரத்துத துறையிலிருந்தன.

அப்படி யிருந்தவைகளில் எம்டன் என்பது ஒன்று. இது 3,544 டன் சாமான்களைக் கொள்ளக் கூடியது. நிலக்கரி மட்டிலும் 850 டன் கொள்ளும். இதில் இரண்டு பெரிய யந்திர பீரங்கிகளும், நான்கு அங்குல வாயகலமுள்ள பத்து சாதாரண பீரங்கிகளும், இரண்டு நீர் மூழ்கிக் குழாய்களும் இருந்தன. இதன் நீளம் 364 அடி: அகலம் $44\frac{1}{4}$ அடி. இதிலு

மிதந்து செல்வதற்கு $15\frac{3}{4}$ அடி ஆழமுள்ள ஜலம் போதும். இது 1909-ம் வருஷத்தில் செய்யப்பட்டது: ஆழமில்லாத எந்தக் கடலிலும் கஷ்டமில்லாமல் போகக்கூடியது. இதற்கு மூன்று புகைக்கூண்டுகள் உண்டு. இதை யோட்டும் யந்திரம் பதினையாயிரம் (15,000) குதிரைப்பலமுள்ளது. இதில் 361 வேலையாட்களிருந்தனர். இதன் வேகம் மணிக்கு $28\frac{3}{4}$ மைல். இதற்குக் காப்டன் வான்முல்லர் எனபவன் முக்கிய அதிபதி இவன் வெகு தைரியமுள்ளவன்.

இந்தச் சிறிய யுத்தக்கப்பல் ஜெர்மனி சக்ரவர்த்தி யுத்தத்தைத் துவக்கிய 1914௵ ஜூலைமாதம் 31-ம் தேதி யிரவே ஸிங்டௌ துறையிலிருந்து தன் சக்ரவர்த்தியின் சகோதரி குமாரனை ப்ரான்ஸ் ஜோஸேப் என்னும் ராஜகுமாரனை ஏற்றிக்கொண்டு புறப்பட்டது. வழியில் வரும்போது ஆங்கிலேயர்க்கும் தமது நாட்டினர்க்கும் ஆகஸ்டு மாதம 4-ம தேதி யுத்தம ஆரம்பமாய்விட்டதாக எம்டனின் அதிபதி தெரிந்துகொண்டான்.

ஆதலின், எம்டன் வழியில் மத்தியஸ்த நாட்டினராகிய டச்சுக்காரர்களுக்குச் சொந்தமான ஜாவா தீவின் வடபுறத் துறைகளில் சிலநாள் தங்கி, அங்கிருந்து புறப்பட்டுப் பிறகு ஸண்டா ஜலசந்தியின் வழியாக ஸுமத்ரா தீவின் கீழ்ப்பாகங்களில் சில நாள் போக்கி, கடைசியில் வங்காளக்குடாக்கடலில் ஆங்கிலேயரது யுத்தக்கப்பல்கள் இல்லையெனத தெரிந்துகொண்டு, நிகொபார் தீவுகளைத் தாண்டி அநதமான் தீவுகளின் மூலமாய் வங்காளக்குடாவில் பிரவேசித்தது. இதற்குச் சகாயமாக ஆகாராதி சாமான்களை வைதது்க்கொள்வதற்காக மார்க்கமேனியா என்னும் ஓர் ஜெர்மனிய நிலக்கரிக்கப்பல் இதனைப் பின்தொடர்ந்து சென்றது.

எம்டன் வங்காளசமுத்திரத்தில் பிரவேசித்ததும், தன் கப்பலில் வைத்திருக்கும் கம்பிகளில்லாத மின்சார தந்தி யந்-

திரத்தின் உதவியினால் கடலோரமாயுள்ள பெரிய துறைகளின் சங்கதிகளையும், கடலில் பிரயாணம் செய்யும் வர்த்தகக் கப்பல்களின் விவரங்களையும், அப்போதப்போதிய யுத்தசமாசாரங்களையும் தெரிந்துகொண்டு, சென்ற 1914ஆ செப்டம்பர் மாதம் 10-ம் தேதி காலைக்ரீக்தேசத்து வர்த்தகக் கப்பலாகிய பான்டோபீரஸ் என்னும் கப்பலைப் பிடித்து, அதில் ஜெர்மனிக் கொடியை நாட்டி அதற்கு ஓர் ஜெர்மனிய மாலுமியை நியமித்து அதையும் தனக்குச் சகாயமாக வைத்துக்கொண்டது.

அன்றுமுதல் 14-ம் தேதி வரையில் எம்டன் ஜகந்நாதத்துக்குச் சமீபமாக ஆறு கப்பல்களைப் பிடித்தது. அவைகளில் கபிங்கா வென்னும் கப்பலைத் தவிர மற்றவைகளை நாசஞ்செய்து, அவைகளின் வேலைக்காரரைக் கபிங்காவில் ஏற்றிற்று கபிங்காவை ஹுக்லீ நதி முகத்வாரதிற்கு 75 மைல் தூரம் வரையில் அழைத்துச் சென்று, எம்டனின் அதிகாரி யாவருடனும் சிநேகமாய்க் கைகுலுக்கி, தான் ஆங்கிலேய சண்டைக்கப்பல்களினின்றும் தப்பிப்போக மார்க்கமில்லாம விருப்பதைக் குறித்துச் சற்று விசனித்து யாவரிடத் நும உபசாரணை வார்த்தையாடி, அக்கப்பலைக் கல்கத்தாவுக்குப் போய்ச் சேரும்படி அனுப்பிவிட்டான்.

கபிங்கா சென்ற இரண்டுமணி நேரத்திற்கெல்லாம் கல்கத்தா நோக்கிச் செல்லும் மதீஸன் என்னும் வர்த்தகக் கப்பலைப் பிடித்து நாசப்படுத்தி, அதிலிருந்த 13 உத்தியோகஸ்தரையும் 57 வேலைக்காரரையும் மார்க்கமேனியாவில் ஏற்றிக்கொண்டு எம்டனின் மாலுமி ரங்கூனுக்குப் பயணமாயினான்.

18-ம்தேதி சாயங்காலம் 7 மணிக்கு ரங்கூன் நதி முகத்துவாரத்திற்கு 25 மைல் சமீபமாகப் போகையில், எம்டன் மத்தியஸ்த நாடாகிய நார்வே தேசத்துக் கப்பலாகிய டோவர் என்பதைக் கண்டது; டோவரில் தான் பிடித்துவைத்திருந்த-

வர்களை ஏற்றி, அவர்களை ரங்கூன் கொண்டு சேர்க்கும்படி ஏற்பாடுசெய்து தானும் அக்கப்பலுடன் கொஞ்சதூரம வழிவிடச் சென்று திடீரென மறைந்துவிட்டது.

செப்டம்பர் மாதம் 18-ம்தேதி இரவு ரங்கூனுக்குச் சமீபமாகத் திரிந்திருந்து எம்டன் வங்காளக்குடாவில் மறுபடியும் பிரவேசித்து ஓர் ஆங்கிலேயக் கப்பலின் மாறுபெயர் கொண்டு, தன்னிடமுள்ள மின்சாரத் தந்தியந்திரத்தின் மூலமாய், "எம்டன் இக்கடலில் இல்லை. கப்பல்கள் நிர்ப்பயமாய்ப் பிரயாணம் செய்யலாம்" என்று ஆங்காங்குள்ள சில துறைகளுக்குப் பொய்த்தந்திகள் கொடுத்து, 22-ம் தேதி இரவு $9\frac{1}{4}$ மணிக்குத திடீரெனச் சென்னைக்கு வந்து சில பீரங்கிக் குண்டுகளைப் பிரயோகித்தது அக்குண்டுகளிற் சில துறைமுக ஆபீஸிலும, வேறு சில கரையோரமாயுள்ள மண்ணெணணெய் (கெரோஸீனெண்ணெய்)க் குளங்கள்பேரிலும், இனிச் சில கட்டடங்கள்பேரிலும, மற்றும சில சூளை வேப்பேரி முதலிய இடங்களிலும் விழுநதன.

சென்னையில் பீரங்கிக ளில்லையென நினைதத இக்கப்பல் தக்ஷணமே கரையிலிருநது நமது நாைத்தனத்தாரால் விடப்பட்ட பீரங்கிக்குண்டுகள தன்மேல் வெகு மும்முரமாய் வநது விழுவதைக் கண்டு மருண்டு உடனே தனது விளக்குக்களை அணைத்துவிட்டு ஒருவர்க்கும் தெரியாமல் தப்பித்துக்கொண்டோடி விட்டது: பிறகு தெற்கு நோக்கிச செல்கையில், சிகூமா என்னும் ஓர் ஜப்பானிய சண்டைக்கப்பல் தனைத் தேடிவருவதை யுணர்ந்து தனது வழியை மாற்றி ஹிந்துமஹா சமுத்திரம் சேர்ந்து கொளமபுக்கு மேற்காக 200 மைல் தூரத்தில் நின்று, 25-ம் தேதி பகல் $12\frac{1}{2}$ மணிக்குக் கிங்க் லட் என்னும் கப்பலைப் பிடித்து அதிலிருநத ஜனங்களை மார்க்கமேனியாவில் ஏற்றிக்கொண்டு அதனை நாசமாக்கிவிட்டது. பிறகு எம்டன்

டிமெரிக் என்னும் கப்பலைப் பிடித்து அதனுடைய ஜனங்களை-யும் மார்க்கமேனியாவில் ஏற்றி அதையும் நாசம் செய்தது.

தம்மாற் பிடிக்கப்பட்ட உத்தியோகஸ்தரிடமும் வேலைக்-காரரிடமும் எம்டனிலிருந்த ஜெர்மனியார் வெகு மரியாதை-யைக் காட்டினர். பிடிக்கப்பட்டிருக்கும் ஆங்கிலேயக் கப்பலி-னதிகாரிகளுக்குப் பொழுதுபோக்காக ஆடுவதற்குச் சீட்டுக்-கட்டுகளும், படிப்பதற்குச் சில புஸ்தகங்களும், பகலில் சிற்-றுண்டிக்குப் பிஸ்கோத் ஸோடா விஸ்கி முதலிய ஆகாரங்க-ளும் கொடுத்து ஆதரித்தனர்.

பிறகு 26, 27-ம் தேதிகளில் எம்டன் அராபிக்கடலி-லிருக்கும் லக்ஷத்தீவுகளுக்குச் சமீபமாகச் சென்று 4 கப்பல்-களைப் பிடித்து அவற்றில் 3 கப்பல்களை நாசப்படுத்தி, அங்-குள்ள வேலைக்காரரையும் உத்யோகஸ்தரையும் மார்க்கமேனி-யாவில் இதுவரையில் சேர்த்துவைத்திருந்தவர்களையும் கூட்டி க்ரிப்வேல் என்னும் நான்காவது கப்பலில் ஏற்றி, அவர்களிற் சிலரைமட்டிலும் தன்னிடமே கைதிகளாக நிறுத்திக்கொண்டு மற்றவர்களைக் கொளம்புக்கு அனுப்பிவிட்டு எம்டன் மறைந்து போயிற்று.

எம்டன் மறுபடியும் அக்டோபர் மாதம் 14-ம் தேதி முதல் 18-ம் தேதிக்குள் இலங்கைக்குச் சமீபமான மினிகாய் தீவுக்கு 120 மைல் தூரத்தில் நின்று ஏழு கப்பல்களைப் பிடி-த்து அவற்றிலுள்ள ஆகார சாமான்களைத் தனது கப்பலில் மாற்றிக்கொண்டது: பிறகு, இவ்வேழு கப்பல்களில் நான்கை-யும் ஒரு கவர்ன்மெண்டு தோணியையும் நாசஞ்செய்து, இரண்-டைத் தனக்குச் சகாயமாக வைத்துக்கொண்டு அவற்றுள்ள வேலைக்காரரையும் உத்தியோகஸ்தரையும் எக்பர்ட் என்னும் கப்பலிலேற்றிக் கொச்சித் துறைக்குக் கொஞ்ச தூரம் வரை-யில் சென்று தன் பரிவாரத்துடன் வழியனுப்பிவிட்டுத் திடீ-ரென மறைந்துவிட்டது.

பிறகு ஒருவாரத்திற்குள் இந்த எம்டன் தன் இயற்கை வர்ணம் கப்பலமைப்பு முதலானவைகளை மாற்றிக்கொண்டு நான்காவதாய்ப் புதியதோர் புகைச்சிமிழியை ஏற்படுத்திக்கொண்டு ருஷியக்கொடியுடன் ஒரு நாள் அந்திப்பொழுதில் பினாங்க் த்வீபத்து ஓரமாக நின்றிருந்த ஓர் ருஷிய யுத்தக்கப்பலை மயக்கித் தனது இரண்டு நீர்மூழ்கிக்கப்பல்களால் நாசப்படுத்திற்று: அதற்குச் சகாயமாக வந்த பிரான்ஸ் தேசத்தின் ஓர் சிறிய யுத்தக்கப்பலையும் உடைத்தது.

இப்படி எம்டன் செய்துவரும் சேஷ்டைகளினால் வங்காளக் குடாவிற் செல்லும் வர்த்தகக் கப்பல்களுக்குச் சிறிது பயம் உண்டாயிற்று. இந்தியாவிலும் சிலோனிலும் பர்மாவிலும் கப்பல்வர்த்தகம் சரியாக நடவாமல் தடைப்பட்டது. வர்த்தகச்சரக்குகள் வெவ்வேறு நாடுகளுக்குப் போக முடியாமல் பெரும்பாலும் ஆங்காங்கே நின்றிட்டன. எம்டன் சென்னையில் செய்த பாணவேடிக்கையில் சில குண்டுகள் சமுத்திரக்கரையோரமாயுள்ள சிலகட்டடங்களின்மேலும் மற்றும் சில இடங்களிலும் விழுந்தன: ஆனால் நஷ்டம் அதிகமாகவில்லை.

மறுநாள் காலையில் சமுத்திரக்கரையோரமான தெருக்களிலிருந்த வெடிக்குண்டுகளிலிருந்து வீழ்ந்த இரும்பாணிகளையும் கத்திகளையும் இருப்புத்துண்டுகளையும் ஜனங்கள் கண்டு வியப்புற்றனர். இரண்டொரு இடங்களில் வெடியினால் உடையாத குண்டுகளும் காணப்பட்டன.

இதனால் நாட்டில் ஒருவகைக் குழப்ப முண்டாக, நீலகிரிக்குச் சென்றிருந்த நமது கவர்னர் உடனே சென்னைக்கு வந்து சேர்ந்தார்: குடிகளில் பலரை நேரிற் கண்டு பயத்திற்குக் காரணம் யாதொன்று மின்மையைத் தெளிவுறுத்தினர். அகவிலைகளை அநாவசியமாய் அதிகரித்த வர்த்தகர்களைக் கவர்ன்மெண்டார் கண்டித்தனர்: எம்டனைவிடப் பலத்திலும் வேகத்திலும் பீரங்கித்தொகையிலும் அதிகமான “சிகூமா”

"யார்மத்" என்னும் யுத்தக்கப்பல்களை எம்டனைத் தேடிப் பிடிக்க அனுப்பினர்.

இவ்வித ஏற்பாடுகளினால் வர்த்தகம் நாளுக்குநாள் எப்போதும்போல் விருத்தியாகிக் குடிகளுள் கொடுக்கல்வாங்கலும் முன் நிலைக்கு வந்தது.

எம்டனுக்குச் சகாயமாக அதன் பின்னே தொடர்ந்துகொண்டிருந்த இரண்டு கப்பல்களில் மார்க்கொமேனியா என்பதை நமது கவர்ன்மெண்டார் நாசஞ்செய்து, போன்டொபீரஸ் என்னும் மற்ற கப்பலைப் பிடித்துக்கொண்டனர். கீழ்த் துறைமுகங்களை நன்றாய் அறிந்தவனாய் எம்டனுக்கு வழிகாட்டிவந்த மேயர் என்பவனும் யுத்தக் கைதியாக்கப்பட்டான். அங்குமிங்குமாகத் திரிந்தலைந்து ஒரு வாரம் வரையில அராபிக்கடலில் சஞ்சரித்து, இந்த எம்டன் சென்ற நொவெம்பர்மீ 9உ சுமத்ரா தீவுக்குச் சமீபமாய்க் கோகோ தீவுகளில் பிரதானமான கீலிங்க் தீவில் தந்தியந்திர முக்கியஸ்தானமாக வைக்கப்பட்டிருந்த தந்திக் கம்பிகளை நாசம செய்யக் கருதிற்று. அதனை யுணர்ந்த கீலிங்க் தந்தியந்திரஸ்தானத்து அதிகாரி தனக்குச் சகாயத்தை நாடித் தந்தி யனுப்பினன். அச்சமயம் ஸிட்னி என்னும் ஆஸ்ட்ரேலிய யுத்தக்கப்பலொன்று 60 மைல் தூரத்திலிருந்தது. கீலிங்க் அதிகாரி அனுப்பிய தந்தியைத்தெரிந்துகொண்டு, ஸிட்னி வெகு வேகமாய் எம்டனைத் தேடி ஓடிவந்தது. இதன் வேகம் மணிக்கு 29 நாட் (அதாவது மைல் 33¾ம் கஜம் 176ம்), இரண்டிற்கும் 8,000 கஜதூரத்தில் சண்டை நடக்க, முடிவில் எம்டன் ஸிட்னியின் பெரிய பீரங்கிகளின் பலத்தைத் தாங்க மாட்டாமல் கீலிங்க் தீவுக்கு 15 மைல் தூரத்தில் கரையோடிச் செல்லவே, நிலத்திற் பதிந்து அசையமாட்டாமல் நின்றுவிட்டது. பிறகு சற்று நேரத்திற் கெல்லாம் ஸிட்னியினின்றும் வீழ்ந்த குண்டுகள் பட்டு நெருப்புப் பற்றி எம்டன் சாமபலாய் எரிந்துவிட்டது.

எம்டனிலிருந்த வேலைக்காரரில் 200 பேர் மாண்டனர்: 30 பேர் காயமடைந்தனர்: மற்றவர் யாவரும் யுத்தக்கைதிகளாக நம்மவரால் பிடிக்கப்பட்டனர். நமது காருண்ய சவர்ன்மெண்டார் அதிலிருந்த ராஜகுமாரனுக்கும் அக்கப்பலினதிகாரிக்கும் சில உத்தியோகஸ்தருக்கும் தத்தம் கத்திகளைத் தம்மிடமே வைத்துக்கொள்ளும்படி உத்தரவளித்து அவர்களை யுத்தக் கைதிகளாக்கி மரியாதையுடன் காத்துவருகின்றனர்.

---

## 24. INDIA'S SAFETY

## இந்தியாவின் பத்திரம்

உலகத்திலுள்ள எல்லா நாடுகளைக்காட்டிலும் நீர்வளத்திலும் நிலவளத்திலும் நாகரிகத்திலும் தெய்வபக்தியிலும் ராஜவிசுவாஸத்திலும் முதன்மையான தெனப் பெயர் பெற்ற இவ்விந்தியா தேசம் ஆங்கிலேய அரசாட்சிக்கு உட்பட்டது முதல் மிகவும அபிவிருத்தி யடைந்திருக்கின்றது. இதற்கு முன் நாடெங்கும் பயங்கரமாய் ஆங்காங்குப் பலவிடங்களில் யுத்தங்கள் அடிக்கடி நடந்துவந்தன. அதனால் குடிகள் எப்போதும் திகிலடைந்து தங்கள் சொத்துக்களையும் உயிரையும் காப்பாற்றிக்கொள்வதில் வெகு கவலையோடிருந்தனர்.

இப்பொழுதோ நாட்டில் அமைதியும் சந்தோஷமும் அதிகமாக உண்டாயிருக்கின்றன. வியவசாயமும் வர்த்தகமும் வருஷாவருஷம் அபிவிருத்தியாகின்றன. கல்வியும் கைத்தொழிலும் அதிகரிக்கின்றன. குடிகள் நிர்ப்பயமாய் வாழ்கின்றனர்.

இவ்வளவு சுகமாக வசிக்கும் நமது இந்தியக் குடிகள் தற்சமயம் ஐரோப்பாவில் நடக்கும் பெரிய யுத்தத்திற்குப் பயப்-

படவேண்டிய ஆவசியகமேயில்லை. உலகில் மற்றெல்லா ராஜ்யங்களைக்காட்டிலும் நமது ஆங்கிலேயராஜ்யமே மிகவும் சிரேஷ்டமானது. நமது ஆங்கிலேயர் மிக்க பராக்கிரமசாலிகள். முன் சொன்னவாறு இவர்களுக்கு ஐந்து கண்டங்களிலும் நாடுகளிருப்பதே ஆங்கிலேய அரசின் சிரேஷ்டத்தைக் குறிக்கின்றது. பிரம்ம சிருஷ்டிக்கே திலகம் போன்ற நமது இந்தியா ஆங்கிலேயரிட மிருக்கின்ற தன்றோ? ஆங்கிலேயர் நமது நாட்டைத் தமது கண்ணெனப் பாதுகாக்கின்றனர். இந்தியா ஆங்கிலேயரை விட்டு என்றேனும் விலகுமென்பது நடவாத காரியமே.

இதுவரையிலுமே ஆங்கிலேயரின் கப்பற்பலம் மற்ற ராஜாங்கத்தாரதைக் காட்டிலும் மிகச் சிறந்தது. இப்போது பிரெஞ்சுக்காரரும் இவர்களோடு கூட்டுறவு கொண்டமையால், மற்ற எந்த அரசாங்கத்தாரும் கப்பற்படைவலிமையில் இவர்களுக்கு ஈடாகமாட்டார்கள். இந்த யுத்தத்தினால் ஜெர்மனியார் அநேக யுத்தக்கப்பல்களை இழந்துவிட்டனர். ஆஸ்ட்ரியாவின் கப்பல் ஒன்றேனும் ஏட்ரியாடிக் கடலையும் எட்டிப் பார்க்க முடியவில்லை. ஆதலின், நமது பகைவர் இந்நாட்டிற் பிரவேசிப்பது அதிக கஷ்டம். மேலும், ஹேக் மகா சபையின் தீர்மான ஏற்பாட்டின்படி இந்தியாவில் பம்பாய்த் துறையில் தவிர மற்ற விடங்களில் கப்பற்சண்டை நடக்கக் கூடாது. பம்பாயிலேயோ போதுமான கப்பற்சைனியம் தயாராக அமைந்திருக்கின்றது. கீழ்க்கடல்களில் ஆங்கிலேயர்களுக்குச் சகாயமாக ஜப்பான் தேசம் உடன்படிக்கையினால் கட்டுப்பட்டிருக்கின்றது. சீனதேசத்திலும் ஆங்கிலேய அதிகாரத்திற்குச் செல்வாக்கு உண்டு.

இந்தியாவுக்கு வடமேற்காயுள்ள ஆப்கனிஸ்தானம் பலுசிஸ்தானம் என்னும் நாடுகளின் அரசர்கள் ஆங்கிலேயரின் இஷ்டப்படி நடக்க ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பது மன்றி, அந்தந்த நாடுகளில் சில முக்கிய விடங்களில் ஆங்கிலேயரது

ராணுவங்கள் இந்தியாவின் ஸம்ரக்ஷணார்த்தம் நிறுத்தப்பட்டிருக்கின்றன. கைபர் கணவாயிலும் போலன் கணவாயிலும் ஆங்கிலேயரது பெரிய சைனியங்கள் சித்தமாயிருக்கின்றன. தெற்கே நமக்குச் சொந்தமான சிலோனிலும் ஏராளமான பட்டாளம் உண்டு.

இப்படி இந்தியாவைச் சுற்றுமுள்ள நாடுகளினால் யாதொரு தீங்கும் உண்டாக முடியாது. இந்தியாவின் உட்பிரதேசங்களிலோ லென்றாலோ, ஆங்காங்குப் பலவிடங்களில் ஆங்கிலேயரது படைகள் ஏராளமாக நிலைத்திருக்கின்றன. இந்தியாவிலுள்ள அரசர் பலரில் 69 பேர் நமது துரைத்தனத்தாரால் அவரவர் அந்தஸ்துக் கேற்றபடி மரியாதைக்குண்டுகள் பெறுகின்றனர். இவர்களிற் பலரிடம் ஆங்கிலேயரால் தயாராக்கப்பட்ட அநேக ஆயிரம் ராணுவவீரரும் குதிரைப்பட்டாளமும் இருப்பது தவிர, சக்ரவர்த்தியாரின் சௌகரியத்திற்கென்று ஏராளமான சேனைகள் சித்தமாயிருக்கின்றன.

அராபிக்கடலிலும் மத்தியதரைக்கடலிலும் ஆங்கிலேயரது யுத்தக்கப்பல்களில் அநேகம் இரவும் பகலும் பாரா கொடுக்கின்றன. இவ்வளவு பந்தோபஸ்தாகவிருக்கும் இந்நாட்டிற்குள் நமது துரைத்தனத்தாரின் விரோதிகள் இலேசில் பிரவேசிக்க முடியுமோ? ஐரோப்பாவில் நடக்கும் யுத்தத்தினால் இதற்குச் சிறிதேனும் அபாயமென்பதே யில்லை.

கடலில் ஒண்டியாகச் சிக்கி உயிர்க்குப் பயந்து திருடனைப்போல் பதுங்கித் திரிந்து நாசமடைந்த எம்டனைப்போன்ற சத்துருபக்ஷமான எந்தக்கப்பலினாலும் இந்தியாவுக்கு அபாயம் நேருதற் கிடமில்லை. ஏதோ இரண்டொரு ஜெர்மனியக் கப்பல்கள் சிற்சில சமயங்களில் சிற்சில விடங்களில் சில்லரை சேஷ்டைகளைப் பதுங்கிப்பதுங்கிச் செய்து ஆங்கிலேயவரசுக்குத் தீங்கிழைக்கக் கருதியது நாய்க்குட்டியானது சிங்கத்தினிடம் வாலைக் குழைத்து விளையாடுவது போன்றதே.

## 25. ENGLAND'S WORK IN INDIA

## இந்தியாவில் ஆங்கிலேயரின் வேலை

நமது காருண்ய துரைத்தனத்தார் இந்தியாவைச் சுவாதீனப்படுத்திக்கொள்வதற்கு முன், இங்கு வசித்திருந்த நம் முன்னோர்கள் அநுபவித்த கஷ்டங்களும் அப்பொழுது நமது தேசமிருந்த விதமும் இன்னும் பெரியோர்களால் கதைகளாகச் சொல்லப்படுவதை நாம் கேட்கின்றோமே!

முற்காலத்தில் ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப் போகவேண்டுமாயின் நல்ல பாதைகள் கிடையா. மேடுபள்ளமாய் அடவிகளின் மத்தியில் கொடிவழிகள் யாவும் துஷ்டமிருகங்களினாலும் பழிபாவங்களுக்கஞ்சாத கள்வர்களினாலும் நிறைந்திருந்தன. வெளியூர்க்குச் சென்றவர் மறுபடியும் திரும்பி வீடு வந்து சேர்வரோவென்னும் கவலையோடு வீட்டிலுள்ள யாவரும் வெகு ஆவலாய்ப் பார்த்திருப்பர். சிற்சில பட்டணங்களின் சமீபத்தில் மட்டிலும் சில பெரிய சாலைகளிருந்தன. இப்பொழுதோ நமது ஆங்கிலேய அரசாட்சி துவக்கிய பிறகு, கொடிய மிருகங்கள் கூத்தாடிய வனங்கள் யாவும் பலங்களையுதவும் புலங்களாகவும் விசாலமான சாலைகளாகவும் நிர்ப்பயமாய்ப் பிரயாணிகள் போகவரச் சௌகரியமாய்ச் செய்யப்பட்டுப் போலீஸ் முதலிய பந்தோபஸ்துகளுடன் வெகு ஜாக்ரதையாய்க் காக்கப்பட்டுவருகின்றன.

நமது துரைத்தனத்தார் கொள்ளையடித்தலே ஜீவனமாகக் கொண்ட கிராதகர்களை அடக்கிக் கிருஷி செய்ய ஏவியிருக்கின்றனர். பூர்வம் தூரதேசத்துப் பந்துக்கள் ஒருவர்க்கொருவர் பார்த்துக்கொள்வதாவது க்ஷேம ஸமாசாரம் தெரிந்துகொள்வதாவது வெகுகடினம். இப்பொழுதோ ஒரு காலணாவினால் காசிமுதல் கன்னியாகுமரிவரையிலுமுள்ள அநேக ஆயிரமைல் தூரத்திலுள்ள ஜனங்களின் க்ஷேம ஸமாசாரங்களை இரண்டு மூன்று

தினங்களிலேயே தெரிந்துகொள்ளும்படி தபாலாபீசுகளும், மணியளவில் விஷயம் தெரிந்துகொள்ளும்படி தந்தி ஆபீசுகளும், நிமிஷவளவில் நேரிற் பேசிக்கொள்ளும்படி டெலிபோன் ஆபீசுகளும் ஆங்காங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. த்வீபாந்த்ரங்களில் வசிக்கும் ஜனங்களைக் காணவும், வர்த்தகச்சரக்குக்களை ஏற்றுமதி இறக்குமதிசெய்யவும் நீராவியந்திரக்கப்பல்களும், உள்நாட்டிற் சலபமாய்ச் சொற்பதொகைக்கு ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப்போகவும், வர்த்தகச்சரக்குக்களைக் கொள்வனை விற்பனை செய்யவும் சௌகரியமாக இருப்புப்பாதைகளும் ஏற்படுத்தியிருக்கின்றனர்.

பெரியநதிகளில் உண்டாகும் பிரவாகம் வீணாய்க் கடலிற் போய்க் கலப்பதைத் தவிர்த்து ஆங்காங்கு அணைகளைக் கட்டி வாய்க்கால்களைவெட்டி ஜலத்தைத்திருப்பி நாட்டில்விட்டு ஏரி குளங்களை நிரப்பிப் புன்செய் நிலங்களை நன்செய் நிலங்க ளாக்கியிருக்கின்றனர். அதனால் குடிகள் அதிக பலனை யடைந்து, நாட்டு வர்த்தகம் அபிவிருத்தியாகிச் செல்வமும் நாகரிகமும் அதிகரித்தன. நமது புராணங்களில சொல்லப்பட்ட த்வாதச வருஷ க்ஷாமங்களெல்லாம் இவ்வித சௌகரியங்களினால் தவிர்ந்துவிட்டன. பஞ்சமுண்டான நாட்டிற்கு மற்ற தேசங்களிலிருந்து அன்ன ஆகாராதிகள் எளிதில் அனுப்பப்படுவதனால் நாட்டிற் பஞ்சததின் கொடுமை தோன்றுவதில்லை. ஆனால், அப்போதப்போது அகவிலைகள்மட்டிலும சிறிது உயர்ந்திருக்குமே யொழிய, எந்த வஸ்துவாயினும் முதலே யகப்படாமல் ஜனங்கள் அல்லற்படுத லில்லை. முன் பாழாய்க் கிடந்த பாலைவனங்கள் யாவும் இப்பொழுது பயிர் நிறைநதிருக்கும் புலங்களாயின. அதனால் விளைவு பெருகிக் குடிகள் தமக்கு வேண்டிய பாகத்தைமட்டிலும் நிறுத்திக்கொண்டு மிகுந்ததை வெளியூர்களுக்கும் அனுப்புகின்றனர். முற்காலம் இவ்வளவு சௌகரியங்க ளமையாததனாலே அந்தந்தத் தேசத்து லாபநஷ்டங்-

கள் அந்தந்தத் தேசத்துடனே தங்கியிருந்தன. தற்காலம் நாடு முழுதும் லாபநஷ்டங்கள் சமமாகி ஜனங்கள் கஷ்டமின்றிச் சுகமாக வாழ்ந்துவருகின்றனர்.

நரபலி, சிசுஹத்தி, ஸஹகமநம் (உடன்கட்டையேறுதல்) முதலிய கொடிய வழக்கங்கள் யாவும் நிவர்த்திக்கப்பட்டன. லக்ஷாதிகாரிக்கும் பிக்ஷாதிகாரிகளுக்கும் சமமாகவே நியாயம் கிடைக்கும்படியாகச் சட்டங்கள் நன்கேற்பட்டு ஆங்காங்கு நியாயஸ்தலங்களும் நியாயாதிபதிகளும் ஸ்தாபிக்கப்பட்டுத் தருமம் தழைத்தோங்கப் பரிபாலிக்கப்படுகின்றது.

நாணயமாகவும் விலைசுலபமாகவும் வஸ்திரங்களை நெய்ய-வும், சர்க்கரை எண்ணெய் அரிசி முதலியவைகளைத் தயார்செய்ய-வும், இரும்பு முதலிய லோஹங்களை உருக்கி விதம்விதமாக வார்ப்பட சாமான்களைப் பண்ணவும், இன்னும் பற்பல கைத்-தொழில்கட்கு வேண்டிய அநேக உபகரணங்களாய் யந்திரங்கள் தயாராய்க் கிடைக்கின்றன.

வெகு காலமாய் ஓலைகளில் எழுதிவைத்திருந்த அரிய கிரந்தங்கள நேர்த்தியாயும் யாவரும் எளிதில் வாசிக்கக்கூடி-யனவாயும் நன்றாய்ப் பளபளப்பாய்த் தயார்செய்யப்பட்ட காகி-தங்களில் சித்திரவிசித்திரமாக யந்திரங்களினால் வெகு சுலப-மாக அச்சிடப்படுகின்றன. ஜனமகாராஜன காலத்திலிருந்ததா-கச் சொல்லப்பட்ட மின்சாரமானது இப்பொழுது யாவருமறிய அநேகவித நன்மைகளுக்கு ஆதாரமாக விருக்கின்றது. வைசூரி கொள்ளைநோய் முதலிய கொடியவியாதிகளுக்குத் தகுந்த மருந்-துகள் தயாராக்கப்பட்டு ஆங்காங்குத் தரும ஆஸ்பத்திரிகள் ஜனோபகாரமாக ஏற்பட்டிருக்கின்றன. கல்வி மிகுதியும் அபி-விருத்தியாகும்படியாய் ஆங்காங்குப் பாடசாலைகள் ஸ்தாபிக்-கப்பட்டிருக்கின்றன. அவரவர் தத்தம் ஆசாரகொள்கைகளுக்கு யாதொரு பழுதும் நேராவண்ணமே நமது தேசத்தை ஆங்கி-

லேயர் ஆண்டுவருவது யாவர்க்கும் தெற்றெனத் தெரிந்திருக்கின்றதல்லவா ?

இவர்களது ஆளுகையில் அடிமைத்தனமென்பது நீங்கிற்று. அவ்வவர் சுதந்திரங்களை நிலைநாட்டிப் பேசலாம். நமது இந்தியர்கள் சுயஅரசாட்சியின் சூக்ஷ்மங்களைக் கற்று அரசுக்கு உதவியாயிருத்தற்பொருட்டு முதலில் பெரியபட்டணங்களின் பரிபாலனதிகாரம் நாட்டுஜனங்களுக்கே கொடுத்தும், அவர்களில் மேம்பாடடைந்தாரை ராஜாங்க சட்டநிரூபண சபைகளில் அங்கத்தினராகச் சேர்த்தும், சிலரை ராஜாங்க நிருவாக சபையிலும் அதிகாரமளித்தும், நமது கவர்ன்மெண்டார் நமக்கு ராஜாங்க பரிபாலன விஷயங்களில் ஊக்கத்தை உண்டாக்கியிருப்பது யாவரும் நன்ற யறிந்திருக்கும் விஷயமே யல்லவா ?

இம்மாதிரியாகச் சுகங்களைக் குடிகளுக் களித்து அன்புடன் ஆதரிக்கும் ஆங்கிலேய ராஜ்யம் நீடூழிவாழுமாறு கருணைக் கடலாகிய ஜகதீச்வரன் அனுக்ரகிப்பாராக !

---

## 26. OUR DUTY

### நமது கடமை

மன்னுயிர்க்குத் தன்னுயிர்க்குப்போல் எல்லாவித சௌகரிய சுகங்களையும் தந்து புரக்கும் செங்கோலரசனிடத்து இவ்விதமான யுத்த முதலிய கஷ்டங்கள் நேர்ந்தபோது குடிகளாகிய நாம் நடக்கவேண்டிய முறை யாதென்று சற்றுக் கவனிப்போம்:—

எண்ணுதற்கரியவாய் நான்முகன் படைத்த நானாவித ஜீவராசிகளுள் ஐயறிவும் பெற்று மானிடனாய்ப் பிறத்தல் வரம்பின்றி முன்ஜன்மத் தியற்றிய நலவினைப்பயனே யாகும். மானிடராய்ப் பிறநதோரிலும், மெய், வாய், கண், மூக்கு, செவி

யெனும் பஞ்சேந்த்ரியங்களின் சௌகரியங்களை முற்றும் நுகர்-
தற் கேற்றவனுய்க் கூன், குருடு, செவிடு, பேடு, முடம், உன்-
மத்தம், மூகம முதலிய குறைகளில்லாதவனுதல் மற்றும்புண்-
ணிய விசேஷமாம். ஸகல சராசர ப்ரஹ்மாண்டங்களையும் காத்-
தற்ருெழில் மேற்கொண்ட மஹாவிஷ்ணுவுக்கு நிகராய்த் தன்-
ளுணைக் குட்பட்ட குடிஜனங்களைத் தினையளவும் துன்ப
மணுகாவண்ணம் காத்தற்குக் கர்த்தாவாகிய இறைவனை
ப்ரத்யக்ஷ தெய்வமெனப் போற்றற்குத் தடை யாதேனு முள-
தோ ?—இதற்கு மாருய்க் கருதுதல் மடைமையே யாகும்.—
'கோன் உயரக் குடி உயரும்' என்பதற் கிணங்க, குடிகளின்
ஏற்றம் தம்மைப் புரக்கும் மன்னனு லுண்டாகியதே.—

மன்னனில்லாத மண்ணுனது மணவாளனெழிந்த மங்-
கைபோலவும், குருவையெதிர்த்த சீடன்போலவும், தானமற்ற
தனம்போலவும், திங்கள் பிரகாசியாத இரவுபோலவும், கற்பு
நீத்த கமலைபோலவும், கயவரிடத் துக் கல்விபோலவும், நன்னீர்
வற்றிய நதிபோலவும், காசுக்குதவாத காணியாளன்போலவும்,
மக்கட்பெருத மனைபோலவும, பக்தியொழிந்த பூஜைபோலவும்,
குணம்குன்றிய குருபோலவும் சீர்குலைந்து சிதைவடையும்.—

'குலமகட்குத் தெய்வம கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க்கு
அடிகளே தெய்வம் அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை'

என்னும் சாஸ்திரத்திற் கேற்ப, மனைவிக்குக் கொழுந-
னும், புதல்வர்க்கு ஈன்ருரும், நன்னெறி நிற்போர்க்குக் குரவ-
ரும் தெய்வமாவார். இவர்கள் அனைவர்க்கும் ஒருங்கே நாட்டு
மன்னனே தெய்வ மாவான். ஆகவே, தீயா ரொறுத்து நல்லார்
புரத்தலால் நெடுமாலெனவும், வேண்டுமிடத்துப் பொருள்
சொரிந்து போஷித்தலாற் புனல்வேந்தனெனவும், அருள்கூர்-

ந்து அன்புடனுதரித்தலால் அன்னையெனவும், உன்மார்க்கங் கடிந்து நன்மார்க்கமோட்டலால் நற்பிதாவெனவும் கருதி, யாவரும் அரசனைப் போற்றுதல் முறைமையே யாகும்.

இவ்விதமாகத் தெய்வத்தன்மை படைத்தவனும் தெய்-வமே யெனக் கொண்டாடற் குரியவனுமாகிய நமது ஜார்ஜ் சக்ரவர்த்திக்கு இவ் யைரோப்பிய யுத்தத்தினல் தற்காலம் உண்டாயிருக்கும் சிறிது கஷ்டத்தை நம்மில் ஒவ்வொருவனும் தனக் குற்றதோர் பெருங் கஷ்டமென்றே கருதி இயன்றவளவு துணை புரிவது தீர்க்கடமை யாகும். அப்படிக் கின்றி,—

> ‘ கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மகட்கு
> உண்டோ உணர்ச்சி? மற்றில்லாகும—மண்டெரிதான்
> வாய்மடுபினும் மாசுணம கண் துயில்வ
> போாப பெருமூச் செறிந்து ’

என்பதற் கிணங்க, காட்டுத்தீயானது மிகுந்து வளர்ந்து எதிர்ப்பட்டவற்றை யெல்லாய சாமபராக்கித் தன்னையே வளைத்-துக்கொண்டபோதும், உற்ற ஆபத்தினை மதியாமற் பெருமூச்சு விட்டு உறங்கிக்கொண்டிருக்கும் பெருமபாமபானது அவ்வெங்-தழல்வாய்ப்பட்டு வெண்ணீராகி நாசமடைவதுபோல, தனது பொருளுக்கும் நிலைக்கும் உயிருக்குமே ஆதாரமாகிய நாட்டு அரசனுக்கு யாதேனும் ஆபதொன்று அணுகு மாயின், அதன் வலிமை குன்றுமாறும அதனாலுண்டாகும தீமைகள் நீங்குமாறும் தன்னாற் கூடிய துணை, எத்துணைய தாயினும், செய்யாமல் தனக்கென் னென்று உன்மத்தனாயிருப்பதுடன் அரசிறையைக் குறித்து அற்பமாகவும் நிந்தனையாகவும் பேசித் தன்னைத் தொடர்ந்த மற்ற மதியீனர்களையும் தன்னினமாக்கி யல்லற்படுத்தும் கீழ்மகன், தனது அகாரியங்களினால் தன் நாட்டை நலியச்செய்து சுக சௌக்கியங்களையெல்லாம் இழந்து இறுதியில் தானும் நாசமே யடைவதுடன், தன்னைச் சேர்ந்த-

வரையும் நசிக்கச்செய்வான். ஆதலால், நாம் யாவரும் இத்த-கைய சமயத்தில் நமது அரசிறைறையையே யனுசரித்து உற்ற துன்பம் விலகுமாறு ஒழுகுதலே கடனாகும்.

யாவராயினும் எக்காலத்தும் ராஜாபிமானம் மேற்கொண்-டிருத்தல் சால்புடையதாகும். ராஜாபிமானிகள் மிகுதியும் பொருந்தியிருக்கும் நாட்டிற்கு என்றும் அழிவு உண்டாகாது. ராஜத்ரோஹியினும் மிக்க பாவி உலகினிற் கிடையாது. இவ்வுண்மை எந்த மதத்தினராலும் ஆமோதிக்கப்பட்டுள்ளது.—

‘ புரந்திடு மாலேயென்னப போந்திடும் மன்னவன்பால்
நிரந்தரம அன்புளானே நிலந்தனிற் புக ழின் மெய்தும
கரந்திடும் விரோதியானேன் காய்தரு துனப மெய்திப
பரந்திடு நரகத்துறறுப பாடுற வருந்துவானல் ’

என்னும் நூற்கிணங்க, ஹிந்துவேத முதலாக அநேக மதோத்தாரண சட்டசாஸ்திரங்களில் ராஜனை அவமதித்து மாறாக நடக்கும் ராஜத்ரோஹியானவன் இம்மையில் எவ்விதத்-திலும் நன்மை பெறானாய் மறுமையில் கடுநரகில் வீழ்ந்து கடைத்தேறாமல் கேடுறுவா னென்றே வற்புறுத்தியிருக்கின்-றது. செங்கோலிறைவனால் தேசம் செழித்துப் பிரஜைகளின் இன்னுயிரும், உயிர்க்கு ஊன்றுகோலாகும் செல்வமும், ஒன்-றற்கொன்று மாறுபட்டிருக்கும் அநேக மதாசாரக்கொள்கை-களும், தோட்டி முதல் தொண்டமான் வரையிலுமுள்ள ஒவ்-வொருவனுடைய ஸ்வாதந்த்ரியமும், நாட்டுக் கல்வி நாகரிகம் வர்த்தகம் முதலியனவும் நிலைதளராது அபிவிருத்தியாகி, நாடும் சீர்பெறுகின்றது. ராஜாங்கத்தார்க்கும் குடிகட்கும் ஒற்றுமையின்றி ஆங்காங்குக் குழப்பமும் கலகங்களும் நிரா-கரிப்பும் உண்டாகு மாயின், நாடானது பற்றலர்பாற் பட்டுக் குடிகள் அல்லற்படுவார்கள். ஆதலால், தமது தற்கால அர-சனால் விளைந்துள்ள நன்மைகளைக் கருதாதவர்களாய் விரோதி-

யாகிய வேறொரு அரசனை உயர்வாகக் கருதித் தம்மரசை அவமதிப்போர் இம்மையில் நிலைகெட்டழிவதுடன் மறுமையி-லும் கும்பீபாக மென்னும் கடு நரகத்தில் வீழ்ந்து கஷ்டப் படுவாரே.—

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'

என்று சாஸ்திரம் முறையிடுகின்றது. எவ்வித நலத்-தைக் கெடுத்தவனுக்கும் கடைத்தேறுதற்கு மார்க்க முண்டாம்; தனக்கு ஒருவன் செய்த நன்றியை மறந்து அவனுக்-குத் தீங்கிழைத்தோன் எந்த விதத்திலும் கடைத்தேறுதற்கு மார்க்கமில்லையாம்.—ஆகையால், நாம் என்றும் நமது அரசாங்-கத்தார்க்கு நன்றியுள்ளவர்களாக இருந்து அரசை யொத்து நடத்தல் நமது க்ஷேமத்திற்கே உயர்ந்த ஸாதனமாகும்.—குடி-களாகிய யாவரும் அரசனுக்கு அடங்கிப் பொதுநன்மைக்காக ஊழியம் செய்யவும், அரசனுடைய க்ஷேமத்தையே கருதி நடக்கவும், அவனாலே ரக்ஷிக்கப்படவும் சிக்ஷிக்கப்படவும் கட-மைப்பட்டிருக்கின்றோ மென்பதையும், நாட்டு ஒவ்வொரு பொருளும் அரசனதே யென்பதையும், யாவரேனும் அரசனை மீறி நடக்கத் தகா தென்பதையும் நன்கறிந்து நடக்கவேண்டி-யது மிகவும் ஆவசியக மாகின்றது.

இச் சமயத்தில் நாம் போதுமான கல்வியறி வில்லாத சாதாரண ஜனங்களுக்கு நமது ராஜாங்கத்தாரிணிடம் நம்பிக்-கையும் கௌரவமும் விருத்தியாகும்படி அவரது ஆதிபத்தியம் சேனைபலம் முதலிய ஏற்றங்களை எடுத்து விவரமாக விளங்கச்-சொல்லி, ஜனங்கள் கொண்டுள்ள ஸம்சயங்களைப் போக்கடிக்க வேண்டும். ராஜாங்கத்து விஷயங்களின் உள்அபிப்பிராய-மும் ஸூக்ஷ்மமும் இச்சமயம் பலரால் பலவிதமாகக் கருதப்படு-தல் இயல்பே யானாலும், சாதாரண ஜனங்களுக்கு ராஜாங்கத்-

தினிடத்து யாதொரு அபிமானக்குறைவும் சந்தேகமும் உண்டாகாவண்ணம் அதனதன் பலாபலன்களை எடுத்துக் காட்ட வேண்டியது கற்றோரின் கடமை யாகும்.

தற்சமயம் நடந்துவரும் யுத்தத்தில் உண்மையான சங்கதிகளை நமது ராஜாங்கத்தார் தெரியப்படுத்துவதில்லை யென்று நினைப்பது மூடத்தனம். யுத்தகளத்திலிருப்பவர் தாம் எதிரிகளுடன் யுத்தஞ்செய்து அவர்களை நாசப்படுத்துவதற்கான முயற்சிகளிலிருப்பா ராதலால், சமாசாரங்களைச் சிறிது தவக்கப்பட்டே வெளியிடவேண்டிவரும். அன்றியும், தாம் செய்யக் கருதியிருக்கும் சூழ்ச்சிகளை முன்னதாக வெளியிட்டால் பகைவர் அவ்வழிகளை யறிந்துகொண்டு தப்பித்துக்கொண்டு போகவாவது அல்லது பிரதிகூலமாக இயற்றவாவது முடியும். ஆதலால், காரியசித்தி பெறும்வரையில் இத்தகையப் பெரிய விஷயங்களை மர்மமாய் வெளியிடாமற் காப்பது ஓர் ராஜதந்திரமாகும். அதனை யறியாமல் அரசை வீணாய்ப் பழித்தல் மதியீனமே. நமது ராஜாங்கத்தார் தம்மாற் கூடிய சீக்கிரத்தில் சரியான சமாசாரங்களையே பிரசுரித்துவருகின்றனரே யொழிய மற்றில்லை. ஆதாரத்துடன் விஷயங்கள் நடந்துள்ளபடி உண்மையாய் வெளியாதற்குச் சிறிது காலதாமத மாகும். அதனால் சமாசாரங்கள் வெளிவரவில்லையே யென்று கதறிக் கருத்தழிதலாகாது. யுத்தத்தில் ஜயாபஜயங்கள் மாறிமாறியுண்டாதல் இயல்பேயாதலால், ஒரு நாள் சற்று அதிகமாக அபஜயம் நேர்ந்தமாத்திரத்தானே ஜனங்கள் அதைரியப்பட லாகுமோ? நமது படைகளின் சாமர்த்தியத்தினால் பலவிடங்களில் உண்டாகும் ஜயங்களைக் கேள்விப்படும்போது நாம் சந்தோஷமடைவதை விட்டு, அந்தச் சங்கதிகளிற் பல உண்மையல்ல வென்றும் நமது அரசாங்கத்தார் எதிரியின் சாமர்த்தியத்தை வெளிப்படுத்தாமல் மறைக்கின்றனரென்றும் நினைத்து, ராஜாங்கத்தாரிடம் அதிருப்தியும் அவநம்பிக்கையும் கொள்ள லாகாது.

ஜப்பானியரைப் போன்று நமது துரைத்தனத்தாரும் சங்கதி யொன்றேனும் நமக்குத் தெரியப்படுத்தாவிட்டால் நாம் என்னதான் செய்யக் கூடும்?—ஒரு சங்கதியும் தெரியாதவர்களாகவே யிருப்போமல்லவா?—அப்படிக்கின்றி, நமது ராஜாங்கத்தார் தமது குடிகளுக்கு யுத்த சமாசாரங்கள உள்ளபடி தெரிய வேண்டுமென்னும் எண்ணத்தினு லல்லவா யுத்தகளத்துச் சங்கதிகளை வெளியிட்டுவருகின்றனர்?

இதற்குமுன் ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்கும் நடந்த யுத்தத்தில் பிரெஞ்சு ராஜாங்கத்தார் தம்குடிகளின் அபிப்பிராயத்திற் கிணங்கத் தமது படைகளின் அமைப்பும் அவை செய்துவரும் விசேஷ காரியங்கள் யாவும் விசதமாகப் பத்திரிகைகள் மூலமாய்த் தெரியப்படுத்தினர். அதனுல் ஜெர்மனியார் எளிதில் வென்றுவிட்டதாகத் தெரிகின்றது. யுத்த சங்கதிகள் வெகு இரகசியமாக நடத்தப்பட்டமையால், ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் நடந்த யுத்தத்திலும் பால்கன்சண்டையிலும் எதிரிகள் ஒருவர்க்கொருவர் செய்யும் சூழ்ச்சிகளை யறியாதவர்களாய் மிகுதியும் கஷ்டப்பட்டனராம்.

ஆகையினுல், நாம் தற்சமயம் நடந்துவரும் இப்பெரிய யுத்தத்தின் விஷயங்கள் எல்லாவற்றையும் உடனே தெரிந்துகொள்ள ஆவலுடையவர்களா யிருந்தபோதிலும், நமது ஜயத்தை நாடியே, யுத்தம் முடியும்வரையிலும்அவசரப்படாமல் அவ்வப்போது வெளியிடப்படும் சங்கதிகளை மட்டிலும் அறிந்துகொண்டு மற்றைச் சங்கதிகளைத் தாமே வெளியாகும்போது அறிந்துகொள்ளலாமெனச் சாவதானமாகக் காத்திருக்கவேண்டும். யுத்த சங்கதிகள் முற்றும் வெளியாவதில்லையே யென மனக்குறை கொள்ளாமல் வெளிவந்த சங்கதிகளுக்காகத் திருப்தியடைந்து, நமது ராஜாங்கத்தாரின் ஜயத்திற்கு வேண்டிய உபாயங்களைத் தேடவேண்டியது மிகவும் ஆவசியகம். இப்படி

# சிவஞானபோதம் பொழிப்புரை



பல்கலைப்புலவர்
திரு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள்
எம்.ஏ., எம்.எல்.





நெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமி
நெல்வேலி சென்

கழக வெளியீடு ௩௱௪

மெய்கண்டதேவர்

அருளிய

# சிவஞானபோதம்

## பொழிப்புரை



பேராசிரியர்

கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

எம். ஏ., எம். எல்.



:: திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்

திருநெல்வேலி :: சென்னை.

# பதிப்புரை

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்அருள் மேவுநாள் எந்நாளோ" தாயுமானவர்.

செந்நெறியாம் சிவன் நெறிக்கு இருகண்போல் திகழ்வன திருமுறை பன்னிரண்டும், மெய்கண்ட நூல் பதினான்கும் ஆகும். திருமுறையைப் புகழ்நூல் (தோத்திரம்) எனவும், மெய்கண்ட நூலைப் பொருள்நூல் (சாத்திரம்) எனவும் வழங்குப.

மெய்கண்டார் ஏறத்தாழ எழுநூற்றைம்பது ஆண்டுகட்குமுன் அருள் தோற்றம் எய்திய வேளாண் செல்வர். வேளாண் மரபினர் உடற்பால உயிரும் உடன் ஓம்பிப் பல்லுயிரும் பேணும் பண்பினர். அதனால், பிள்ளை (கடவுட் பிள்ளை) எனச் சிறப்புப்பெயருடன் வழங்கப்பெறுவர்.

இந்நூற்கண் முப்பொருள் உண்மையும் அப்பொருள்கள் ஒன்றோடொன்று இயைந்து இயங்கும் தன்மையும் யாவரும் உளங்கொண்டு உய்யும் வண்ணம் மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டுக்களுடன் அருளிச்செய்யப்பெற்றுள்ளன.

இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. இப் பன்னிரண்டு சூத்திரங்களும் முறையே திருமுறை பன்னிரண்டுக்கும் இலக்கணம் போன்று திகழ்வன. சூத்திரம், கருத்துரை, மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு என்னும் ஐந்தும் மெய்கண்டாராலேயே அருளிச் செய்யப்பெற்றன. எடுத்துக்காட்டு எண்பத்தொரு வெண்பாக்களால் அருளிச் செய்யப்பெற்றது.

இந்நூற்கு மாதவச் சிவஞானமுனிவர் பல்லாற்றானும் பரந்துபட்டதோர் பேருரை வரைந்தருளினர். அவ்வுரை 'சிவஞானபாடியம்' என வழங்கும். அவற்றின் முழுப் பிழிவாக எளிய இனிய மொழிப்புரையாகப் பேராசிரியர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம். எல். அவர்களால் இந்நூல் யாக்கப்பெற்றுள்ளது.

செந்நெறிச் செல்வரும் செந்தமிழ்ப் பெருமக்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் மெய்ப்பொருள் உண்மை தேறித் தமிழ்ப் பெருநெறி யுடையவராக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# சிவஞானபோதம்
## - பொழிப்புரை -



பேராசிரியர்,
கா. சுப்பிரமணிய பிள்ளை,
எம்.ஏ, எம்.எல்.

# பொருளடக்கம்

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப் பாயிரம்

## நேரிசை யாசிரியப்பா

மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளின் கண்டுகண் இருள்தீர்ந்து
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவம்நனி வன்பகை கடந்த
தவர்அடி புனைந்த தலைமை யோனே.

# சிவஞானபோதப் பொழிப்புரை

## மங்கல வாழ்த்து

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

உரை:—*அருள் வடிவாகிய கல்லாலமர நிழலின்கண் எழுந்தருளியிருந்து, தம் மாணவர்க்கு மலைவு தீர்த் தருளிய முதலாசிரியர், மேன்மேலருள் செய்தற் பொருட்டு, சுயம்பு மூர்த்தியாகிய பிள்ளையாருடைய அறி வாற்றல், செயலாற்றல் என்ற இரண்டு திருவடிகளை மெய் யன்பர் தலைமேற்கொள்ளுவர்.*

குறிப்பு:—*கல்லாலமர நிழலின்கண் திருநந்திதேவர் முதலியோர்க்கு ஞானம் உபதேசித்தமை வெளிப்படை. 'அருளிய' என்பதற்கு அவர் அருளாற் பிறந்த என்பாரு முளர். இங்கே, அருளிய=அருள்செய்ய. பொல்லார்= பொள்ளார், உளி முதலியவற்றாற் போழ்ந்து செய்யப் படாதவர். திருவெண்ணெய்நல்லூரிலே, விநாயகப்பெரு மான் சுயம்புமூர்த்தியாயுள்ளார். புனைதல்=மேற்கொண்டு தமது அறிவு செயல் அவற்றுள் அடங்கப்பெற்று நிற்றல்.*

---

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்உணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
உணராார் உணராார் உடங்(கு) இயைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

உரை :—(உடைமைப் பொருளாகிய) தம்மியல்பினை உணர்ந்து தம்மை உடையனாகிய தலைவனை உணர்ந்தவர்கள், தமக்கு உடைமையாக எம்மை உடையவர்களாதலின், எம்மை (அன்பாற் பாராட்டுவாரன்றி) இகழமாட்டார். தம்மை உணராதவர்கள் தலைவனையும் உணராதவர்களே. அவர்கள் ஒருங்கு சேர்ந்து தம்முள் ஒற்றுமைப்பட மாட்டாராகலான், அவர்களது புறங்கூற்று மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம்.

குறிப்பு :—கேளாம்=உடன்பட்டுக்கொள்ள மாட்டோம்.

---

## முதற் சூத்திரம்

அவன் அவள் அது வெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்(து) உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாக வுடைத்து, இவ்வுலகம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

முதற்சூத்திரப் பொருள் —அவன், அவள், அது என்று பகுக்கப்படும் உலகத் தொகுதி, (தோன்றுதல், நிலைபெறுதல், ஒடுங்குதல் ஆகிய) மூன்று தொழிலுடைமையால், அது ஒருவனாற்றோற்றுவிக்கப்பட்டு, நிலைபெறுவதேயாம். அது தான் ஒடுங்குதற்குக் காரணமான கடவுளாலேயே தோன்றுவது. ஆணவமலம் தீர்ந்து ஒடுங்காமையால், அது (ஒடுங்கியதோடு நில்லாது மீளவும்) உண்டாவது. அதற்கு (ஒடுக்கமாய் முடிவைச் செய்யும்) அந்தமாகிய கடவுளே ஆதியுமாகின்றான் எனத் தருக்க நூலறிந்தோர் கூறுவர்.

**கருத்துப் பொருள் :**—ஒடுங்குதற்குக் காரணமாயுள்ள முதற்கடவுளையே இவ்வுலகம் தனது தலைவனாக வுடையது.

குறிப்பு :—அவை = தொகுதி ; திதி = காக்கப்படுவது. ஒடுங்கி = ஒடுக்குங்கடவுள், ஒடுங்கியினால் உளதாம் என்பது. மலத்தால் = ஆணவமலம் உண்மையால், 'மலத்து' என்பதை 'ஒடுங்கி' யென்பதனோடு இயைத்து உயிர்களின் கருமமலம் பக்குவப்படுதற்பொருட்டு ஒடுங்கி (மீண்டும்) உளதாம் என்றுரைப்பதுமுண்டு. 'மலத்து' என்பதற்கு **மாயா மலத்து** எனப் பொருள் கொண்டு, மாயையின் ஒடுங்கி அதனின்று மீளவும் உளதாம் என்பாருமுளர்.

கருத்துக் குறிப்பு:—சங்கார காரணன் என்று மாத்திரங் கூறாது, சங்கார காரணனாயுள்ள முதலே என்றது, உலகத்தின் பல பகுதிகளைத் தனித்தனியே சங்காரஞ் செய்வார் பல கடவுளர் இருத்தலின், எல்லாவற்றையும் ஒடுக்குபவனே முதல்வன் என்பார் அவ்வாறு கூறினர்.

## முதற்சூத்திர முதல் அதிகரணம்

**ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து.**

பொருள் :—(முதற்கண்) நிலைபேறுடையதாய், ஆண், பெண், இரண்டுமல்லாதது என்ற அவயவப் பகுப்புடையதாய்ச் சுட்டி யறியப்படும் உலகம் தோற்றம், நிலை, முடிவு என்பவற்றையுடையது.

குறிப்பு:—அவயவப்பகுப்பு என்பது கலப்புப் பொருளிற்சேர்ந்துள்ள தனிப்பொருட் பிரிவுகள். உலகமானது, நிலம், கடல், மலை முதலிய அவயவப் பகுப்புக்களையுடையது. மண்ணின் ஒரு துண்டு, அதன் அவயவப்பகுப் பாகாது. ஒரு பொற்கட்டியில் வெட்டிய சிறுதுண்டை

அதன் அவயவப்பகுப்பு என்பதில்லை. சுட்டப்படாத பொருளைப்பற்றி யாதுங் கூறமுடியாது. சுட்டியறியப்படும் பொருளே, முத்தொழிலுடையது.

**ஏது.—தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.**

பொருள் :—நிலை பெறுவதாய்க் காணப்படும் உலகின் கண்ணே, படைப்பும், முடிவும் உடன் நிகழ்தலின்.

குறிப்பு :—நிலைபெற்றிருக்கும் உலகத்திலேயே ஒரு பொருள் தோன்றியழிதல் அவை உடன் நிகழ்தலெனை அறிக. நிலைபெறுவதற்கு முதலில் தோற்றம் வேண்டும். ஒடுங்கிஞலன்றித் தோற்றம் நிகழாமையின் ஒடுக்கமும் வேண்டும். ஆதலால், நிலைபேறு, 'ஈறு முதலுந் துணையாகி நிகழும்' என்றார்.

உதாரணம் :

**பூதாதி யீறு முதலுந் துணையாகப்**<br>
**பேதாய் திதியாகும் பெற்றிமையின்—ஓதாரோ**<br>
**ஒன்(று) ஒன்றிற் றோன்றி உளதாய் இறக்கண்டும்**<br>
**அன்றுஎன்றும் உண்டென்ன ஆய்ந்து.**

பொருள் :—பேதையே அல்லது பெண்ணே! பூதம் ஆதியாகவுள்ள உலகிற்கு, படைப்பும் முடிவும் துணைக் காரணமாகக்கொண்டே நிலைபேறு நிகழும். ஆதலின், ஒருவகைப்பொருள் ஒரு காலத்தில் ஒருங்கு தோன்றி நிலைபெற்று ஒருங்கே அழிவடையப் பார்த்திருந்தும், உலகிற்கும் எப்பொழுதாவது முற்றும் ஒடுங்கும் நிலைமை உண்டாமெனை ஆய்ந்தறிந்து அறிஞர் ஓதமாட்டாரா? (ஓதுவார் எனை அறிக.)

குறிப்பு:—இற = அழிய. பெற்றிமை = தன்மை. அன்று = முடிவுக்காலம். உலகிற்கு என்றும் அன்று உண்டென்ன ஆய்ந்து ஓதாரோ எனை முடிக்க.

## இரண்டாம் அதிகரணம்

இனி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது.

பொருள்—உலகம் ஒடுங்குவதற்குக் காரணமான சங்காரக் கடவுளினாலல்லாமல் அதற்குத் தோற்றம் இல்லை. சங்காரம்=சங்காரக் கடவுள்.

ஏது.—இல்லதற்குத் தோற்றம் இன்மையின்.

பொருள்:—இல்லாததொன்று எக்காலத்தும் தோன்றுவது இல்லை யாகலின்.

இலயித்த தன்னில் இலயித்த(து)ஆ(ம்) மலத்தால்
இலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்த(து)
அத்தியில் என்னில் அழியா தவைஅழிவ(து)
அத்தியும் ஆதியும்ஆம் அங்கு.

பொருள்:—எதன்கண் ஒடுங்கியதோ அதன்கணின்று ஒடுங்கியபொருள் மலம் (பரிபாகப்படுவது) காரணமாக, (மீள) உண்டாம். அஃது ஒடுங்கிய முறையே தோன்றவும் வேண்டும். உலகம் ஒடுங்கியது திதிக்கடவுளாகிய வாசுதேவனில் என்றுரைப்பின், (அக்கடவுள் வைகுந் தத்துவத்திற்கு) மேற்பட்ட தத்துவங்கள் அவனால் ஒடுங்காதவை. அவையும் ஒடுங்குவதுண்டு. அப்படி ஒடுங்குங்கால், அத்திதிககடவுளும், உலகப் படைப்பிற்குக் காரணமாய ஆதியெனப்படும் பிரமனும் அத்தத்துவங்களோடு ஒடுங்குவர்.

குறிப்பு:—இலயித்தது=ஒடுங்கியது. ஆம்=உண்டாம். அத்திதி=அப்பெற்றித்தாய திதிக்கடவுள். அழியாதவை=ஒடுங்காதவை. அழிவது=ஒடுங்குதல். ஆதி=பிரமா. அங்கு=ஒடுங்கும் அவ்விடத்தே.

ஏது.—உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்.

பொருள்:—நிலைபெற்ற பொருளுக்குச் (செயல் நிகழவேண்டுமாயின்) செய்வோரில்லாது செயற்றொழில் நிகழாமையால்.

குறிப்பு:—மண் முதலியவற்றிற்குக் குயவனையின்றி வனைதல் முதலிய செயல் நிகழாமையறிக.

> வித்துண்டா மூல(ம்) முளைத்தவா தாரகமாம்
> அத்தன்றாள் நிற்றல் அவர்வினையால்—வித்தகமாம்
> வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
> கூட்டானே மண்போற் றளிர்ந்து.

உரைநடை:—மண்(போற்) குளிர்ந்து என்பதை முதற்கண் கொள்க.

உரை:—நிலங்குளிர்ந்த விடத்து, வித்துண்டாக அதன் கணின்று முளை முளைத்ததுபோல, (மாயையும்) தனக்கு ஆதாரமாகிய இறைவனது சத்திவழி நின்று உருப்பட, அதன்கணின்று உயிர்களின் வினைக்கேற்ப உலக முதலியன தோற்றமெய்தும். குளவியா லிடப்பட்ட புழு, குளவியாதல் போல, வேண்டுவார் வேண்டிய உருவைக் கொடுத்து இறைவன் செய்வினைப்பயனைக் கூட்டுவானல்லவா?

குறிப்பு:—தாரகம் = ஆதாரம். தாள் = சத்தி, திருவடி, முயற்சி. நிற்றல் = நிற்றலால், நிற்பதாகிய மாயை யெனவுங் கூறுப. வித்தகமாம் = உருவடையும். வேட்டுவன் = குளவி. குளவி, ஒரு புழுவைத் தன் கூட்டில் வைத்துக் கொட்ட, அப்புழு, குளவி வடிவடைதல் என்பது கருத்து. கூட்டானே = கூட்டுவான். 'மண்போல்' என்பதிற் 'போல்' அசை.

> நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்
> தாக்காது நின்றுளத்திற் கண்டிறைவன்—ஆக்காதே
> கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
> கண்டவனி லிற்(று) இன்றங் கட்டு.

உரைநடை:—இறைவன் அன்றே காலத்திற்றாக்காதே நின்று ஆக்காதே கண்டும் நோக்காது நோக்கி (நொடியாது)

கொடித்தும் இன்றாங்கட்டு உளத்திற் கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக் கண்டவனில் இற்று.

உரை:—கடவுள் அநாதியாகவே (காணச் செயலுக் குரிய) காலதத்துவம்போலத் தொடக்குறாது நின்று, காணத்தாற் படையாது எண்ணியவாறே படைத்தும், அவ்வாறே காவாது காத்தும், அழியாது அழித்தும், கட்டுப்படாதிருத்தல், நனவுள்ளபோது ஒருவன் தன் உள்ளத்தில் தான் கண்ட கனவையெண்ணுங்கால், அதனிற் றொடக்குறாதிருத்தலைப்போலு மித்தன்மைத்து.

குறிப்பு :—அன்றே = அநாதியே, காலத்தில் = காலத் தைப்போல, கண்டு = படைத்து, நோக்கி = காத்து, கொடித்து = ஒடுக்கி, இன்றாம் = இல்லாததாகிய, கட்டு = கட்டில்லாமை, கண்டவனில் = கண்டவனைப்போல, இற்று = இத்தன்மைத்து.

## மூன்றும் அதிகரணம்

இனி, சங்காரமே முதலென்றது.

பொருள்:—மேற்கூறிய காரணத்தால், சங்காரக் கட வுளே உலகிற்கு முதல்வன் என்றவாறு.

வ-து :—சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

பொருள் :—பொருள்களைச் சுட்டியறியும் இயல்பின வாகிய உயிர்த்தொகுதி, சுட்டியறியாது அறியுமியல்பொடு நின்ற சங்காரக் கடவுள் கட்டளைப்படி, நிற்றலன்றித் தம் வயமாய் நில்லாமையான்.

குறிப்பு :—சுட்டுணர்வு என்றமையால், பிரபஞ்சம் உயிர்த் தொகுதிகளைக் குறித்துநின்றது. சுதந்திரம் = தம் வயமுடைமை.

ஒன்றலா ஒன்றல் உளதாகி நின்றவா(று)
ஒன்றலா ஒன்றில்அவை யீறகல்—ஒன்றலா
ஈறே முதல்அதனின் ஈறலா ஒன்றுபல
வாறே தொடும்பாதம் அங்கு.

பொருள் —(உயிர் உலகம் என்பவற்றுள்) ஒன்றுமாகாத ஒரு பரம்பொருளால், உயிர்கள உடம்பொடு தோன்றி நின்று, அந்த ஒன்றலா ஒரு பொருளாலேயே ஒடுங்குதலால், ஒன்றுமல்லாத முடிவான பொருளே வினை முதல் ஆகும். அதனைப்போல அழிவில்லாததாகிய உயிர் தானும் பலவாற்றானும், வீட்டிலேயும் அப்பரம்பொருளுக்கு அடிமையாவதே.

குறிப்பு :—ஒன்றலாவொன்று, ஒன்றலாவீறு என்பன இறைவனை யுணர்த்துப. அவை - உயிர்த்தொகுதி அங்கு = அங்கும்; முத்தியிலும்.

---

## இரண்டாஞ் சூத்திரம்

அவையே தானே ஆய்இரு வினையில்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்க மின்றி நிற்கும் அன்றே.

கருத்து.—புணருற்பவம் வருமாறுணர்த்துதல் நுதலிற்று

பொருள் :—இறைவன் கலப்பினால் உயிர்களேயாயும், தன்னியல்பால் தானேயாயும், உயிர்களுடன் நின்று அறிவித்தலால், உடனுமாய் நின்று, கட்டளை யென்ற தனது ஞானசத்தியால இருவினைப் பயனுக்கேற்ப இறத்தல் பிறத்தல்களை உயிர்கள் மேற்கொள்ளும்படி, அந்த ஞான சத்தியோடு பிரிவில்லாது நிற்பன்.

**கருத்து** :—மறுபிறவி வரும்வகை யுணர்த்துதல் கருதப்பட்டது.

**குறிப்பு** :—அவை =உயிர்கள், அவையேயாய்த் தானே யாய் அவையே தானேயாய் எனப் பிரித்திசைக்க. இருவினை - நல்வினை தீவினை என்பன. போக்கு=இறத்தல். வரவு=பிறத்தல். புரிதல்=மேற்கொள்ளுதல்.

**கருத்துக் குறிப்பு** :—மறுபிறவியெனவே, அதற்கு முற்பட்ட இறப்புங் கூறப்பட்டதாம். இறப்புப் பிறப் பெனவே, இருவினைப்பயனுகர்ச்சி யனைத்துங் கூறப்பட்ட வாறு காண்க.

## முதல் அதிகரணம்

**ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றனேயாய் நிற்கு மென்றது.**

இவ்வதிகரணத்துள் உயிர்கள் எல்லாவற்றோடும் அத்துவிதமாய் முதல்வன் கலந்து நிற்பன் என்பது கூறப் பட்டது.

ஏது.—அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏக மென்று சுட்டுவதுண்மையின், அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு.

**பொருள்** :—இறைவன் உலகத்தோடு அத்துவிதமாய் இருக்கிறன் என்று சொன்ன வளவிலேயே அச்சொல் இரண்டில்லாமை யென்று பொருள்பட்டு ஒருமையை யுணர்த்துமென்றால், ஒருமையைச் சுட்டி அறிவதாகிய பொருள் வேறாக இருத்தலால், அத்துவிதமென்ற சொல் (ஏகத்துவத்தை யுணர்த்தாமல்) இரண்டு பொருள்களின் அந்நியம் இன்மையை உணர்த்துவதாயிற்று.

**குறிப்பு** :—எண்ணுப் பெயர்மேல் வந்த அகரம் அன் மையை யுணர்த்துமாதலின், அத்துவிதம், இரண்டல்லாத

என்றே பொருள்படும். நாத்தி = நாஸ்தி, இன்மை. அந்நி யம் = வேறுபாடு. ஆயிட்டு = ஆகலான்.

> கட்டும் உறுப்புங் காரணமுங் கொண்டுள்ளம்
> இட்டதொரு பேரழைக்க என்னென்றுங் த)—ஒட்டி
> அவ னுளம்ஆ கில்லான் உளம்அவனு மாட்டா(து)
> அவன்உளமாய் அல்லனுமாய் அங்கு.

பொருள் :—(நரம்பு முதலியவற்றாற் கட்டிய) உடம்பும் ஐம்பொறி முதலிய கருவிகளும் உடைய உயிர்க்கு இட்ட பெயரால் அழைத்தவுடன், அது ஏன் என்று பதில் விடுக்கும். அதற்குக் காரணம் உயிர் உடம்பிலே பேதமில்லாமற் கலந்திருப்பதே. அதுபோல, இறைவன் உயிர்களோடு வேற்றுமை தோன்றாதவாறு கலந்திருப்பன். ஆயினும், அவன் உயிராகமாட்டான் ; உயிர்களும் அவனாக மாட்டா. ஆயினும், அவன் உயிராகியும், உயிரின் வேறாகியும் இருப் பன். உயிர் அப்படி நில்லாது.

குறிப்பு :—உறுப்பு, உடம்பிற்கு ஆகுபெயர். உள் ளம் = உயிர். ஆங்கு ஒட்டி = உயிரிற் பொருந்தியவன். 'ஒட்டி' பெயராகவுங் கொள்ளப்படும் ; வினையெச்சமாகவுங் கொள்ளப்படும். அவன் = இறைவன்.

> ஒன்(று) என்ற தோன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
> ஒன்(று)என்ற நீபாசத தோடுளைகாண்—ஒன்றின்றால்
> அக்கரங்க ளின்றாம் அகரவுயி ரின்றேல்
> இக்கிரமத் தென்னு மிருக்கு.

உரை :—உபநிடத முதலியவற்றுள் ஒன்று என்றது ஒரு பொருளைக் குறித்தேயாம். அதன் கருத்து, கடவுள் ஒருவரேயென்பது. இதனை யறியாமல் ஒன்றென்று சொல்லுகின்ற நீ பாசத்தோடிருக்கின்றாய். ஆதலால் நீ பதியாகமாட்டாய். கடவுளையன்றி ஒன்றில்லை யென்றது, அகரவுயிரின் தொடர்பில்லாமல், பிற எழுத்துக்கள்

தோன்றுதல் இல்லையென்றாற்போல, இந்த முறைபற்றியே ஞான நூலானது, பிரமமில்லையாயின், ஒரு பொருளும் இல்லை யென்றது.

குறிப்பு :—அகரவுயி ரென்பதற்கு நாதமென்பாரு முளர்.

பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம்—அண்ணல்தாள்
அத்துவித மாதல் அருமறைக ளொன்றென்னா(து)
அத்துவித மென்றறையும் ஆங்கு.

உரை :—பண்ணில் ஓசை யடங்குவது போலவும், பழத்திலே சிறப்பாகக் கருதப்படுஞ் சுவை அடங்குவது போலவும், உலகெங்கும் வியாபகமாயிருக்கிற இறைவனது திருவருள் உயிர்களில் இரண்டறக் கலந்து நிற்பதால், அரிய மறைகள் ஒன்றென்று சொல்லாது அத்துவிதம் என்றியம்புவன.

குறிப்பு :—குணகுணி சம்பந்தம் போல் அத்துவிதக் கலப்பைக் கூறுவதால், அண்ணலுக்குஞ் சத்திக்கு முண்டான சம்பந்தங்கூறும் இவ்வெண்பா என்பாருமுளர். உடலுயிக் கலந்தமைக்கே அவை உவமையாயின

அரக்கொடு சேர்த்தி யணைத்தஅக் கற்போல்
உருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று.

உரை :—சிவப்பு மெழுகோடு சேர்த்து அணைக்கப் பட்ட கற்பொடியானது உருகி யொருங்கு சேர்ந்து நின்றாற்போல, இறைவன் உயிர்களினின்று பிரிவிலனாக நிற்றலால், அவனே உலகமாய்த் தோற்றுவன். இம்முத்திக் காலத்தே, இறைவன் எனது அறிவின்கண் மன்னியபடி

யால், அவன் உலகமாதல் போல, அவனோடு கலந்து நானும் உலகமாயினேன் என்றியம்புவேன்.

குறிப்பு:—சிவச்சார்பு பற்றி, யானே உலகெலாம் ஆயினேன் என வாமதேவ முனிவர் முதலியோர் கூறினரென வுணர்க என்றது.

## இரண்டாம் அதிகரணம்

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வருமென்றது.

பொருள்:—மேற்கூறியபடி, இறைவன் கலந்து நிற்கப் பெறும் உயிர்களுக்குப் பல பிறவிகளில் ஈட்டப்பட்ட புண்ணிய பாவங்கள், இறைவனது கட்டளைப்படியே உயிர்களின் நுகர்ச்சிக் குரியனவாம்.

ஏது.—ஒரு நகரியைக் காப்பான் பாடி காவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்.

பொருள்:—ஓர் ஊரைக் காவல் செய்யும் அரசன் அவனது அதிகாரத்தை ஊர்காப்பாளரென்னும் அதிகாரிகளிடம் வைத்து அவர் வாயிலாக அதிகாரம் நடாத்துதல் போல, முதல்வனும் தனது கட்டளையை இருவினையிலே வைத்து அவற்றாற் பயன் நுகர்வித்தல் நிகழும் என அறிக.

> உள்ளதே தோற்ற உயிரணையும் அவ்வுடலின்
> உள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
> செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
> செய்வன் செயல்அணையா சென்று.

உரை:—சஞ்சிதமாய் உள்ளதாகிய வினையே உடம்பைத் தோற்றுவிக்க, அந்த உடம்பில் உயிர் பொருந்தி வினைப்பயனை யனுபவிக்கும். முன்வினைப் பயனை அனுபவிக்கு முறையிலேயே வரும் பிறவிக்குரிய வினை ஏற்படும். கருணையாளனாகிய கடவுள், முயற்சியின் பயனை விளைக்கும்

நிலம்போல வினைசெய்வார்க்கு அவர் வினைப்பயனைக் கூட்டு விப்பன். வினைப்பயன் தானே சென்று செய்தவனை யடையாது.

குறிப்பு:—உள்ளது=சஞ்சிதம். தோற்ற மென்பதன் முன், உடம்பு என்பது தொக்குநின்றது. அடைவே= மேலைக்குரிய வினை.

> அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாஞ்சென்றங்(கு)
> அவ்வினையைக் காந்த பசாசம்போல்—அவ்வினையைப்
> பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
> ஆர்தாம் அறிந்தணைப்பா ராங்கு.

உரைநடை :—காந்தபசாசம்போல் அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் அவ்வினைஞர் அவ்வினையைச் செய்வதனில் அவ்வினையைச் சென்று நுகராரேல், ஆர் தாம் ஆங்கு அறிந்து அணைப்பார்.

உரை :—காந்தத்திற்கு நேராக இரும்பைப் பிடித்துக் காந்தத்தை அது பற்றச் செய்தல்போல, உயிர்களுக்குத் தவறாமல் வினைப்பயன்களை நுகர்விக்கும் முதல்வனால், வினைசெய்வோர் வினைசெய்தற்குரிய உடம்பினைப் போய்ப் பொருந்தி வினைப்பயனை நுகர்வாரல்லராயின், மலத்திற் கிடக்குங் கட்டுக்காலத்தில், வேறே எவர் வினைப்பயன்களை அறிந்து உயிர்களுக்குச் சேர்ப்பிப்பார்?

குறிப்பு:—அவ்வினை = முற்செய்யுளிற் பேசப்பட்ட வினை. ஆங்கு=கட்டுற்றிருக்குங் காலத்தே, உயிர்தாமே வினைப்பயன்களை யறியா; வினை சடம் ஆதலான், முதல் வனே வினைப்பயனை ஊட்டுவிப்பன் என்றவாறு.

> நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
> சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
> மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
> அலர்சோகஞ் செய்கமலத் தாம்.

உரைநடை:—பொன்வாள் செய் வள்ளலாம் கமலத்து அலர் சோகம் ஆம்.

உரை :—பொன்னொளியைச் செய்கின்ற சூரியனால், தாமரையினிடத்தே விரிதலும் குவிதலு முண்டாம். (அது போல, முதல்வனால் மும்மலங்கள் தத்தஞ் செயல்களைச் செய்வன.) நெல்லினுக்கு உமியும் செம்பிலே களிம்பும், ஆராயுமிடத்து அவை இடையே புதிதாய்ச் சேர்ந்தன வல்ல. பழமையாக அவற்றுடன் உள்ளனவே. அதுபோல மாயையும, ஆணவமும், வினையும் அநாதியே உள்ளன.

குறிப்பு:—வல்லி = கொடி, சத்தி, மாயை. மலம் = ஆணவம். அன்று = அநாதியே; பொன்வாள் செய்வள்ளல் = சூரியன். சோகம் = வாட்டம், குவிதல்.

## மூன்றும் அதிகரணம்

**இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.**

மேற் கூறப்படுவதாவது:—இருவினைப் பயனை நுகர்தற்குரிய உயிர்கள் இறந்தபின் மீட்டும் பிறந்து, இவ்வாறே பிறப்பு இறப்புடையனவாம்.

ஏது.—தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதல் இன்மையான்.

பொருள் :—பிறத்தலும் இறத்தலும் தொடர்ச்சியாய் உள்ள பொருட்கல்லது பிறபொருட்கில்லாமையால்.

> கண்ட நனவைக் கனவுணர்வில் தான்மறந்து
> விண்படர்ந் தத்தூடு வினையினால்—கண்செவிகெட்(டு)
> உள்ளதே தோற்ற உளம்அணுவாய்ச் சென்றுமனந்
> தள்ள விழுங்கருவில் தான்.

உரைநடை :—கண்செவி கெட்டு உள்ளதே தோற்ற உளம் அத்தூடு விண்படர்ந்து மனந்தள்ளக் கண்ட நன

வைக் கனவுணர்வில் தான் மறந்து அணுவாய்ச் சென்று கருவில் விழும்தான்.

உரை:—கண்செவி முதலியன வுடைய பருவுடம்பு அழிய முன் உள்ளதாகிய நுண்ணுடம்பு, பூதசார வுடம்பாகப் பரிணமிக்க, உயிர் அதனோடு விண், நிரய முதலிய இடங்கட்குச் சென்று, வினைப்பயன்களை நுகர்ந்து, பின்னர் நனவினைக் கனவில் மறந்தாற்போல அறிவு மறந்து, எடுத்த உடம்புகளைவிட்டு, நுண்ணுடம்போடு மாத்திரஞ் சென்று, மன முன்பற்றிய இடத்தே தள்ளக் கருவிலே போய்ப் பதியும்.

குறிப்பு:—கண்செவி = உடம்பு, உள்ளதே = படைப்புக் காலந்தொட்டு முடிவு காலம்வரை உள்ள உடம்பு, தோற்ற = செல்லும் இடத்திற்குரிய உடம்பாய்த் தோன்ற, உளம் = உயிர்; அணுவாய் = சூக்கும உடம்புடன் மாத்திரம். முன் இறக்குங் காலத்தே மனம் எங்கே பற்றியதோ, அங்கே வந்து பிறத்தலின் 'மனந்தள்ள' என்றார்.

> அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
> பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
> குடாகாய ஆகாயக் கூத்தாட்டா மென்ப(து)
> அடாதுள்ளம் போமா றது.

உரை:—பாம்பு தோலுரித்துப் புதிய தோல் போர்த்தலும, நனவு நீங்கிக் கனவுக்குரிய உடம்பிற் சேர்தலும், வேறுடலில் யோகிகள் புகுந்து மீளுதலும் ஆகிய உவமைகளே, (உயிர் தூலவுடம்பை விட்டுப் போதலுக்குப்) பெரிதும் வழங்குதலின், குடத்திலுள்ள ஆகாயம், வெளியாகாயத்தோடு கலப்பதுபோன்ற தொரு கூத்தாட்டம் அது என்பது பொருந்தாது. அவ்வுவமை, சூக்கும உடம்பு நீங்கிப் போகும் விதத்திற்கே உரியதாகும்

குறிப்பு:—பரவின் =மிக்கு வழங்குதலின், அடாது= பொருந்தாது. உள்ளம்=சூக்கும வுடம்பு. போமாறு= போம் ஆற்றிற்கு அது=அவ்வுவமை.

நான்காம் அதிகரணம்

இனி, நீக்கமின்றி நிற்குமாறு உணர்த்துகின்றது.

உரை:—முதல்வன் தனது ஞானசக்தியோடு பிரிவில்லாது நிற்பன்.

குறிப்பு:—சமவாயம் என்னும் வடமொழிச் சொற்றொடர், 'நீக்கமின்றி நிற்றல்' எனப் பொருள்படும். சமவேதம், தாதான்மியம் என்பன அக்கருத்தே உடையன. ஒரு பொருளே குணகுணியாக அல்லது அவயவ முடையதும் அவயவமுமாகப் பேசப்பட்டு நிற்பது.

ஏது.—அவன் ஏகாநேகமிரண்டு மின்றிச் சருவ வியாபியாய் நிற்றலான்.

உரை:—ஒன்று, வேறு என்ற இருதன்மையுமில்லாமல் பொதுவாய் எங்கனும் வியாபியாய் நிற்றலால்.

குறிப்பு:—ஏகம்=ஒன்று. அநேகம்=வேறு.

எங்குமுளன் என்றளவை யொன்றன்று இரண்டேனில்
எங்கு முளன்அன் று) எவற்றேவனும்—அங்கண்
அவையவன் அன்றில்லைப் பொனஞ்ஞேளிபோல் ஈசன்
அவையுடைமை யாளாம்றாம் அங்கு.

உரை:—எங்கும் இருக்கிறான் என்ற பிரமாணத்தாலே இறைவன் (ஓரிடத்தில் மாத்திரமுள்ள) ஒரு பொருள் அல்லன். இருபொருளாய் இறைவன் உள்ளான் என்னில், (எவற்றினுங் கலந்து) எங்கும் உள்ளான் என்பது இல்லையாகும். எவ்விடங்களினுமுள்ள எப்பொருளும் அவ்விடத்து அவைகளெல்லாம் இறைவனை யன்றித் தோன்றி நிலைபெறா. ஆதலால் முதல்வன் கதிரவனும் ஒளியும்

போலச் சிவமுஞ் சத்தியுமாய் வியாபித்திருப்பன். பொருள்களெல்லாம் அவனதுடைமை; உயிராகிய நாம் அவன்மாட்டு அடிமையாவோம்.

குறிப்பு :—என்ற அளவை, என்றளவை யெனத் தொக்கு நின்றது. அளவை=பிரமாணத்தாலறிந்த உண்மை எவற்றும்=எவ்விடங்களிலும். எவனும்=எப் பொருளும். ஈசன் பொன்னொளிபோல் உளன் என்பது கருத்து. பொன்=சூரியன். பொன்னு மொளியும்போற் சிவமுஞ் சத்தியுமாயுளன். அவை=பொருள்களாகிய பாசங்கள். நாம்=உயிராகிய நாம். ஆள்=அடிமை. அங்கு=அவன்மாட்டு.

---

## மூன்றாம் சூத்திரம்

உளது இலது என்றலின் எனது உடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலிற் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

கருத்து :—ஆன்மப பிரகாசம உணர்த்துதல் நுதலிற்று.

உரைநடை :—உளது என்றதை ஆன்மா என்பதனோடு முடிக்க.

உரை :—நான் இதுவல்ல, அதுவல்ல என்று கூறுவ தொன்று உண்டாகலானும், எனது உடல் என உடலைக் கூறுவதொன்று உண்டாகலானும், ஐம்பொறியினையும் அவற்றின் நீக்கத்தையும் அறியும் அறிவுடைய தொன்று இருத்தலானும், துயின்றபோது, உணவு, செயல், இல்லாத தொன்று இருத்தலானும், ஒன்றை உணரச் செய்யுங்காலை, உணர்வதொன்றிருத்தலானும், மாயையாகிய கருவி

யாகிய உடம்பினுள், உயிரென்பது உடம்பின் வேறு யுள்ளது.

கருத்து :—உயிருண்மையும் விளக்கமும் உணர்த்துதல் கருதியது.

## முதல் அதிகரணம்

**உண்டு இலதென்றலின் ஆன்மா உளதென்றது.**

உரை :—இதன்கண், இல்லையென்று சொல்லுதலால், அங்ஙனம் சொல்லுவதாகிய உயிர் உண்டென்றது.

**ஏது.—எவற்றினையும் அன்றென்றென விட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின் அதுவே அப்பான்மாவாம் என்றது.**

உரை :—உடல், பொறி, மனம் முதலிய எல்லாவற்றையும், இஃது ஆன்மாவல்ல என்று கழித்து, ஒன்றும் ஆன்மாவல்லாமையால், ஆன்மாவென்பது சூனியமென்று சொல்லிக்கொண்டு நிற்பதாகிய அறிவு இருத்தலின், அவ்வறிவே ஆன்மாவாமென்றுணர்க.

**அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்**
**நின்றென் றுளதுவே நீஅனைத்தும்—நின்(று) இன்று**
**தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை**
**தற்பரமு மல்லை தனி.**

உரை :—உடல், பொறி முதலிய கருவிகளனைத்தையும் இது நான் அன்று எனக் கழித்தவிடத்தே நுண்ணிய ஐந்தெழுத்து வடிவாய் அறியுமறிவொன்று நிலை பெற்றுளது. அதுவே நீ யென அறிக (மலத்தாற் பிணிப்புண்ட) இந்நிலையிலே, உன்னொடு சார்ந்து நின்று எல்லாப் பொருளையும் கண்ணாடிபோலக் காட்டுவதாகிய மாயை நீயல்ல. (அறிவில்லாத மாயை நீயாகமாட்டாய்.) மாயையாலறியும அறிவிற்கு அப்பாற்பட்ட மேலான சிவமும் நீ ஆகமாட்டாய். நீ மாயைக்கும் சிவத்துக்கும் வேறாகிய தனிப்பொருள்.

குறிப்பு :—ஐந்தெழுத்தென்பது - நுண்ணிய மந்திர வடிவமேயன்றி, உயிராகாது. மாயை, பொருளை விளக்குவ தன்றித் தான் ஒன்றையும் அறியாது. இறைவன் மாயையாற் பொருள்களை அறிவானல்லன். ஆதலால், மாயையும் சிவமும் உயிராகமாட்டா வென்றவாறு.

## இரண்டாம் அதிகரணம்

இனி, எனதுடல் என்றலின் ஆன்மா உளது என்றது.

உரை :—உடம்பைத் தானாகக் கூறாது, என்னுடையது என்று அதனை உடைமைப் பொருளாகக் கூறும் வழக்க மிருத்தலின், அங்ஙனம் கூறும் உயிர் ஒன்று உளது என்றவாறு.

ஏது—என் பதி, என் மனை என்றற்போல, என் கை, என் கால் என நிற்பதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உரை:—எனது ஊர், எனது வீடு என்று சொல்வது போல, உடம்பின் பகுதிகளாகிய கை, கால் முதலியவற் றையும் என்னுடையனவெனக் கருதி நிற்பதாகிய ஒன் றிருத்தலின், அதுவே அவ்வுயிர் என்றது.

குறிப்பு:—தலை மாத்திரமாய் நிற்கும் இராகுவை, இராகுவினது தலை யென்றபோது ஒற்றுமைப் பொருள் கொள்ளுவதுபோல, எனதுயிரென்ற இடத்துங்கொள்க. உடம்பு முதலியவற்றோடு கூடிநின்ற காலை, உடம்பையும் உயிரையும் பகுத்துத் தன்னுடையன வென்று கூறுதல் உடம்பெடுத்த உயிர்க்கியல்பே. உடம்பெடாவிடின், உயிர் தன்னை அவ்வாறு கூற முடியாது.

**எனதுஎன்ற மாட்டின் எனதலா தென்று(து)**
**உனதலா துன்கைகால் யாக்கை—என(து) என்றும்**
**என்னறிவ தென்றும் உரைத்துநீ நிற்றிகாண்**
**உன்னில் அவைவேறும் உணர்.**

உரை:—எனது என்று சொல்லுகின்ற இயற்கைபற்; உன்னுடைய உடம்பின் பகுதிபோலல்லாத பதி, மனை முதலியவற்றை என் பகுதியல்லவென்று கூறுது (உயிரென மயங்கிறாய்) அதுபோல, கை, கால், உடம்பு, பாச அறிவு முதலியவற்றை என்னுடையனவென்று கூறிக்கொண்டு நீ நிற்கின்றாய். ஆய்ந்து பார்க்கின், அவையும் உனக்கு வேறானவை யென்றுணர்க.

## மூன்றாம் அதிகரணம்

இனி, ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளதென்றது.

உரை:—(ஒவ்வொரு பொறிபோல ஒவ்வொன்றை யுணராது, பொறி வாயிலாக) ஐம்புலன்களையும் அறிவ தொன்றிருத்தலின், அதுவே உயிர் என்பது.

எது—ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின, இவ்வைந்தினாலும் ஐம் பயனும் அறிவதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உரை:—ஐம்பொறிகளாலறியப்படுவனவாகிய ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றமென்ற ஐம்பூத நுட்பங்களுள், ஒருபொறி யறிந்ததைப் பிறிதொருபொறி அறியமாட்டாமையின், ஐம்பொறியையுங் கருவியாகக்கொண்டு ஐந்து பயனையும் அறியவல்லது ஒன்றிருத்தலின், அதுவே மேற் கூறிய உயிர் என்பதாம.

குறிப்பு:—காது கேட்பதைக் கண் கேளாது. கண் பார்ப்பதைக் காது பாராது. உயிரானது காதாற் கேட்டும் கண்ணாற்கண்டும் பயன் பெறுகின்றது என்பது கருத்து.

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடல்மன்னி
அன்றும் புலனாயவ் வஞ்சேழுந்தை—யொன்றறிதல்
உள்ளதே யாகில் அதுநீ தனித்தனி கண்(டு)
உள்ளல்அவை ஒன்றல்லை யோர்.

உரை :—உடலிலே நிலைபெற்று, தம்முள் ஒன்று அறிவதை மற்றொன்றறியாத நிலையை யுடையனவாய்த் தம்முள் மாறுபட்ட, ஒலி முதலிய ஐம்புலன்களை ஐந்தெழுத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்தறிகின்ற ஐம்பொறிகளை, இப் பொறி காணும்; இப்பொறி கேட்குமென அறிவதொன்று இருப்பதாலால் அது நீயென அறிக. (ஐம்பொறிகளாகிய) ஆவைகள் தனித்தனி தமக்குரியவற்றை யறிவதன்றி அறிகின்றேனென் றுணரமாட்டா. ஆகலின், நீ அவற்றினோ டொன்றாகமாட்டாய், (நீ அவற்றின் வேறே) என்றாராய்ந் தறிக.

குறிப்பு :—பொறிகள் தம்மை யறியமாட்டா. உயிர் பொறிகளை யறியும். அன்றம் = மாறுபடும். அஞ்செழுத் தாற் செலுத்தப்பட்ட பொறிகள், அஞ்செழுத் தெனப் பட்டன.

## நான்காம் அதிகரணம்

இனி, ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளதென்றது.

உரை:—ஐம்புலனும் ஒடுங்கிய விடத்துள்ள கனவில் நிகழ்ந்தவற்றை அறிவதொன் றிருத்தலின், அஃதாகிய ஆன்மா உண்டென்பது.

குறிப்பு:—ஒடுங்கிய இடத்து நிகழ்ந்ததற்கு 'ஒடுக்கம்' என்பது ஆகுபெயர்.

ஏது—நனவின்கட் கனவு கண்டாமென்றும் கனவு கண்டில மென்றும் நிற்ப துளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உரை:—விழித்திருக்கும்போது, தூங்கும்போது கனவு கண்டாற் கண்டேனென்றும், காணாவிடத்து அதனைக் காணவில்லை யென்றும் அறிந்து நிற்பது ஒன்றிருத்தலின், அதுவே அவ்வுயிரா மென்றது.

குறிப்பு:—கனவில் அறிவது நுண்ணுடம்பாயினும், கனவொழிந்த காலை, நனவையுங் கனவையும் அறிவது உயிரெனவோர்க என்றவாறு.

> அவ்வுடலின் நின்(று) உயிர்ப்ப ஐம்பொறிகள் தாம்கிடப்பச்
> செவ்விதின் அவ்வுடலிற் சென்றடங்கி—அவ்வுடலின்
> வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
> மாறலுடல் நீஅல்லை மற்று.

உரை:—பருவுடம்பிலே நின்று இயங்குதலையுடைய அந்த ஐம்பொறிகள் ஒடுங்கிக்கிடப்ப, அவ்வுடலின் அடங்கி வருத்தமில்லாது செவ்வையாக வேறுபோய், அத்தூல வுடம்பினைப் போன்ற மற்றோருடம்பெடுத்து, வேறு வகையாகக் கண்டுங் கேட்டும் உண்டும் உற்றும் உயிர்த்தும் விளையாடி, கனவு முடிந்தவுடன், மீளப் பருவுடம்பினை மாறி மேற்செல்லுதலால், கனவிற்குரிய சூக்கும உடம்பு நீ ஆகமாட்டாய்.

குறிப்பு:—அவ்வுடல் = பருவுடம்பு. உயிர்ப்பு = இயக்கம். அ, ஐம்பொறி = தூல வுடம்பிற்குரிய பொறிகள். செவ்விதின = வருத்தமின்றி. 'சென்றடங்கி' யென்பதை 'அடங்கிச் சென்று' என மாறுக. மாறல் = மாறலால், மாறி மேற் செல்லுதலால். உடல் = சூக்கும உடம்பு.

## ஐந்தாம் அதிகரணம்

**இனிக் கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உள தென்றது.**

உரை:—மேல், துயின்றால், பிராணவாயு சரித்தும், உணவு, தொழில் முதலியன இல்லாதிருத்தலின், (பிராணனுக்கு வேறாக) உயிர் உண்டென்பது.

**ஏது—ஒடுங்கின இடத்து, இன்பதுன்பஞ் சீவனம் பிரகிருதிக் கின்மையின், ஒடுங்காத விடத்து இன்ப துன்பஞ் சீவியா நிற்பதுள தாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

உரை:—துயிலுமிடத்தே, புலன்களாலேற்படும் இன்ப துன்பமும் அனுபவமும் இயக்கமும் உடம்பின்கண்ணே இல்லாமையாலும், துயிலாத காலத்தே, அவை நிகழ்தலாலே, அந்நிகழ்ச்சிக் கேதுவாய தெதுவோ அதுவே அவ்வுயிரென்றது.

குறிப்பு.—உண்டி = பொறிவாயிலாக, இன்ப துன்ப அனுபவம் வினையா நிற்பது=இயங்குவது. பிரகிருதி=உடம்பு. பிரகிருதிக்கு=பிரகிருதியின்கண், உருபு மயக்கம். பிரகிருதி யென்பது இயற்கை யெனப் பொருள்படும். அது பிராணவாயுவைக் குறிக்குமென்பாரு முளர். துயிலினும் விழிப்பினும் ஒரு தன்மைத்தாயது, பிரகிருதியாகிய உடம்பு என அறிக.

> கண்டறியும் இவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே
> உண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியும்
> உள்ளம்வே றுண்டா யொடுங்காது) உடலந்தணில்
> உள்ளதாம் உண்டிவினை யூன்.

உரை :—பொருள்களைப் பார்த்தறிதற்கு நிலைக்களமாகிய இவ்வுடலின்கண்ணே, பொருள்களைக் காட்டுவனவாகிய கருவிகள் தொழிற்படாது ஒடுங்கியபோது, உடம்பிலே, நுகர்ச்சியுஞ் செயலும் இல்லாதிருக்கவும், பிராணவாயு இயங்குதலால், (கருவிகளாற்) பார்த்தறியும் உயிர் பிராணவாயுவுக்கு வேறாக உண்டு (அவ்வுயிர்) ஒடுங்காமல் உடலிற் பொருந்தியிருப்பின், ஊனுலாய உடம்பு, நுகர்ச்சியும் இயக்கமும் உடையதாம். இதனை ஆய்ந்தறிக.

குறிப்பு :—காட்டு=கருவி, 'காணாதே ஒடுங்க' என மாறுக. காணாதே=தொழிற்படாமல். உள்ளம்=உயிர், 'உண்டாய்' என்பதிலுள்ள 'ஆய்' என்பதை இறுதியிற் கொள்க. ஊன்=உடம்பு 'ஊன் உண்டிவினை உள்ளதாம்' என மாறுக.

## ஆறும் அதிகரணம்

இனி, உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது என்றது.

உரை:—(கடவுள் கருவிகள் வாயிலாகப் பொருள்களை) அறிவிக்க அறிதலின், (கடவுளுக்கு வேறாக) உயிர் உண்டென்றது.

ஏது :—அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உரை :—முதல்வன் மறந்து மறந்து அறிதலில்லாமல் அறிந்த முறையே அறியுமியல்பினன் என்று அருள் நூல்கள் அறிவிக்க, அறிந்து ஆசாரியன் அறிவுறுத்தும் உபதேச மொழியைப் பெற்றுடையதாய் நிற்பது ஒன்று இருத்தலின், அதுவே அவ்வுயிர் என்றது.

குறிப்பு :—உபதேசி = உபதேச முடையவன்.

அறிந்தும் அறிவதே யாயும் அறியா(து)
அறிந்ததையும் விட்டங் கடங்கி—அறிந்த(து)
எதுஅறியும் அன்றதும் மெய்கண்டான் ஒன்றின்
அதுஅதுதான் என்னும் அகம்.

உரை :—(பொருள்களை ஐம்பொறிகளாலும் ஒருங்கே அறியாது) ஒன்றையே ஒரு காலத்து அறிந்தும், அறியப் படுவதாயும், முன் அறிந்ததனை மறந்து அறியாதும், அறிந்ததை இடைவிடாமல் அறியுமாற்றலின்றி, விட்டு விட்டு ஐந்து அவத்தைப்பட்டு அடங்கி, மீள அறிந்தும் வருவதெது? அது பேரறிவுமாகாது. உண்மையுணர்ந்தான் மனவொருமைப்பட்டு ஆராயின், எப்பொருளை அறிகின்றதோ அதன் வயப்பட்டு நின்று அதனைத் தானெனக் கருதுந்தன்மையுடையது உயிரென விளங்கும்.

குறிப்பு :—அங்கு = உணர்த்துந் தானமாகிய புருவ நடுவில். அகம் = உயிர். மெய்கண்டான் என்ற தனது

பெயரைக் குறிப்பாக அமைத்தனர் போலும்! ஒவ்வொன்றுயறிதல், புதிதாக அறிதல், அறிந்ததை அறியாது விடுதல், இடைப்பட்டறிதல், அவத்தைப்பட்டறிதல் என்பன. சார்ந்ததன் வண்ணமாதல், உபிரினியல்பு இவைகளில்லாத முதல்வன் உயிரின் வேறு என்றவாறு.

## ஏழாம் அதிகரணம்

இனி, மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா உளது என்றது.

உரை :—மாயா காரியங்களாலாய சூத்திரப்பாவை போன்ற உடம்பினுள் உயிர் உள்ளது.

குறிப்பு :—மாயா காரியங்களின் சமூகமாகிய உடம்பு உயிராகாது. அச்சமூகத்திற்கு வேருக உயிர் உண்டு என்றவாறு.

ஏது:—அவை தாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.

உரை :—மாயா காரியங்களாய அவைகள் தத்தமக்குரிய வேறு வேறு பெயருடைமையால், (அவை உயிரல்ல).

கலையாதி மண்ணந்தங் காணில் அவைமாயை
நிலையாவாம் தீபமே போல—அலையாமல்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடில்அது தனுவாம்
தான்அத்தின் வேறதாம் தான்.

உரை :—ஆராயுமிடத்து, கலை முதல் நிலம் ஈருகவுள்ள தத்துவங்களெல்லாம், மாயையினலாயவையாகலின், நிலையாதனவாகும. அவை தொக்கபோது விளங்கும் ஞானத்தினியல்பை அசையாமல் கருத்தொடுங்கி முதலில் அதன் றன்மையறிந்து பின் அவற்றின் பயனை ஆராயின், கண்ணுக்கு விளக்குப்போல அவைகள் உயிர்க்குப் பொருள்களை விளக்கும் தூல சாரண பரமாகிய உடம்பாகும். உயிர்தான் அவ்வுடம்பின் வேருவதே.

# இலக்கணவியல்

## நான்காஞ் சூத்திரம்

அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்றுஅவை
சந்தித்தது ஆன்மாச் சகசமலத்து உணராது
அமைச்சு அரசு ஏய்ப்ப நின்றுஅஞ்சு அவத்தைத்தே.

கருத்து :—இதுவுமது.

உரை :—ஆன்மா, அகக்கருவிகளாய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அவைகளில் ஒன்று அல்ல; அரசனுக்கு அமைச்சன்போல அவற்றைத் துணையாகக் கொண்டுளது ஆன்மா தன்னோடு எப்போதும உள்ள ஆணவ மலத்தினாற் பொருள்களைத் தானே அறியமாட்டா. அவற்றின் துணைகொண்டு அறிந்து ஐந்துவகையான உணர் வெல்லைகளை யுடையது ஆன்மா.

குறிப்பு :—சகசமலத் துணரா, ஆன்மா அந்தக்கரண மவற்றில் ஒன்று அன்று. அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்தது. (அவற்றோடு) நின்று ஐந்து அவத்தைதது என உரைநடை கொள்க. அவத்தை=உணர்வின் எல்லை. ஏய்ப்ப=போல.

### முதல் அதிகரணம்

ஈண்டு இவ்வான்மா அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களில் ஒன்று அன்று என்றது.

உரை :—வெளிப்படை.

குறிப்பு :—கலை, அராகம், வித்தை முதலிய தத்து வங்களை ஒப்புக்கொள்ளுவார், ஆன்மா இல்லையென்பதில்லை யாகலின், மனம், புத்தி முதலிய அந்தக்கரணங்களையே ஆசிரியர் விதந்தனர்.

ஏது:—அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

உரை :—அந்தக்கரணங்கள் அவற்றிற்குக் கீழுள்ள பொறிகளை நோக்க மிகுதியாக அறியுந்தன்மையுடையன வெனினும், உயிர்க்கு அறிதற் கருவிகளாய்ச் சடமா யிருத்தலின்.

குறிப்பு :—பிரகாசம் = அறிவுள்ளது. அப்பிரகாசம் = சடம், அறிவில்லாதது.

மனமாதி யால்உணர்தல் மன்னு புலன்கள்
மனமாதி மன்புலனின் அல்லன்—மனமேல்
உதித்தோன்றை உள்ளம் உணர்தல் அதனின்
உதிக்கும் கடற்றிரையை ஒத்து.

உரை :—மனமுதலியவற்றால் உணரப்படுபவை,பொறி கள் முதற்கண் உணரும் புறத்தே நிலைத்த பொருள்கள். உள்ளத்தால் உணரப்படுவது - மனத்துக்கு மேலுள்ள புத்தி தத்துவத்திற்றோன்றிய தொன்றே. அது கடலலை போலவந்து தோன்றும். மனமுதலியவை, புலனுக்கு வேறாயினாற்போல, ஆன்மாவும், மனமுதலியவற்றிற்கு வேறாவன்.

குறிப்பு:—மனமாதியால் உணர்தல் மன்னு புலன்கள், உள்ளம் உணர்தல் மனமேல் உதித்தொன்றை, கடல் திரையை ஒத்து உதிக்கும். அதனின், மனமாதி மன்புல னின் (ஆன்மா) அல்லன் என உரைநடை கொள்க. உணர் தல் = உணரப்படுபவை. அதனின் = அதனால். புலனின் = புலன்போல. அல்லன் = வேறாவன். கடல் அலைபோலத் தோன்றுதலாவது, பொறியுணர்வு முதலிலே தோன்றி, அதன் பின்னர் மனவுணர்வு தோன்றி, அது போய்ப் புத் தியைஅடைய, அங்கே இன்பதுன்ப மயக்க வுணர்ச்சி தோன்றுதல்.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய் ஆய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறும்
அவ்வேறும் போதுபோல் ஆங்கு.

உரை நடை:—உள்ளம் ஆங்குச் சித்தமாய்ச் சிந்தித்து மனமாகிப் பந்தித்து ஆங்காரமாய்த் தெளியாது புந்தியாய் ஆய்ந்து துணிந்து வெவ்வேறு தானே இவ்வேறும். அது போது அவ்வேறும் போல்.

உரை:—(புருடதத்துவமாய்) நின்ற உயிர், மனவுணர் வாற் பொருள்களைக் காணுமிடத்துச் சித்தத்தைச் சேர்ந்து நின்று இஃது யாது என நினைந்தும், மனத்தைச் சேர்ந்து நின்று பற்றியும், பின்னர் ஆங்காரத்தைச் சார்ந்து நின்று இஃது இன்னதென அறிவேனென்றெழுந்தும், தெளிவு பிறவாது புத்தியினாலே இன்னதென்று தீர்மானித்தும் வெவ்வேறு வகையில் அறிதலால், இந்த நால்வகை அந்தக் கரணங்களுக்கும் வேறுவன் புருடன். (அஃது எதுபோலு மெனின்) கதிரவன் முதலியவற்றோடு கூடி, நாள், நாழிகை முதலிய பாகுபாடு செய்தற்கேதுவாய காலதத்துவம், கதிரவன் முதலிய பொருள்களின் வேறுதல் போல என்க.

குறிப்பு:—போது = காலம். 'சிந்தித்தாய்' என்பதன் இறுதியிலுள்ள ஆய் என்பதைச் 'சித்தம்' என்பதனோடு கூட்டுக. ஐம்பொறிகளுக்குப்போலவே, அந்தக்கரணங்கள் ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு தொழில்கள் உள்ளன. அந்தக்கரணங்களோடு கூடிநின்று அத்தொழில்களைத் துஞ் செய்வது உயிர். ஒரோவொன்றே செய்வது அந்தக் கரணம் என அறிக.

அகார உகாரம் அகங்காரம் புத்தி
மகார(ம்) மனம்சித்தம் விந்துப்— பகாதிவற்றை
நாதம் உளவடிவாம் நாடிற் பிரணவமாம்
போதம் கடற்றிரையே போன்று.

**உரை நடை:**—அகாரம் அகங்காரமாகிய அந்தக்கரணத்தைச் செலுத்தும். உகாரம் புத்தியைச் செலுத்தும். மகாரம் மனத்தைச் செலுத்தும். விந்து சித்தத்தைச் செலுத்தும். நாதம் புருடனாகிய உயிரைச் செலுத்தும். இவ்வெழுத்துக்களைப் பிரிப்பின்றிப் பார்த்தகாலை, அவை பிரணவமாகிய ஓங்காரமாம். இவற்றால், கடலில் அலையெழுந்து வீழ்ந்து மீண்டெழுதல் போல, அறிவு நிகழும். (நினைப்பு மறப்பு மாறிமாறி வரும் என்பது கருத்து.)

குறிப்பு:—'அகார உகாரம அகங்காரம், புத்தி' யென்றது நிரல் நிறை. உளம் = புருட தத்துவமாய் நின்ற உயிர் 'போன்று' என்பது, மூன்றும் அடியில் 'ஆம்' என்பதனோடு முடிவது.

> எண்ணிலவு ஓங்காரத்து ஈசர் சதாசிவமாம்
> நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
> பகர் அயன்மா லோடு பரமன் அதி தெய்வம்
> அகர உக ர(ம்) மகரத் தாம்.

**உரை:**—எண்ணத்திலே நிலவும் ஓங்காரத்திலே, பொருந்திய விந்துவுக்கும் நாதத்துக்கும் அதிதெய்வத்தை ஆராயின், மகேசுரனும் சதாசிவனுமாவர். அகரம், உகரம், மகரத்திற்கு அதிதெய்வங்கள். முறையே, (சுத்தவித்தையிலுள்ள) பிரமன், மால், உருத்திரன் என்பவர்களாவர்.

குறிப்பு:—இயக்குகிற கடவுளர், சுத்ததத்துவங்களிலுள்ளவர்கள் ஆதலின், இங்கே கூறப்பட்ட அயன், மால், பரமன் சுத்தவித்தையிலுள்ளாரென்பது குறிக்கப்பட்டது.

## இரண்டாம் அதிகரணம்

**இனி, இவ்வான்மாச் சகச மலத்தினால் உணர்வின்று என்றது.**

**உரை:—மேலே, இச்சூத்திரத்தே பேசப்படும் உயிரானது தன்னோடு எப்போதுங் கூடியுள்ள ஆணவமலத்**

தினால், (கருவிகளின் துணையின்றிப் பொருள்களை அறியும்) அறிவில்லாததாகும்.

குறிப்பு:—சகசம்=இயல்பு போல உடனாய் உள்ளது. மாயை, கன்மங்கள், இடையில் உளவாகிய மலங்கள்.

ஏது.—அது தான் ஞானதிரோதகமாய் மறைந்துக்கோடு நிற்றலால்.

உரை:—அந்த ஆணவ மலமானது, அறிவுக்கொரு மறைவாய், அஃது இல்லை யென்னும்படி மறைத்துக் கொண்டு நிற்பதாகலின்.

குறிப்பு:—திரோதகம்=மறைவு.

மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணுதேல்
ஆயாதாம் ஒன்றை அதுஅதுவாய்—வியாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்(து) ஒன்றுங் காட்டம்போல்
தன்னைமலம் அன்றணைதல் தான்.

உரை:—உயிரானது மாயையினலாகிய உடம்பாகிய விளக்கினைக்கொண்டு பாராதாயின், ஒரு பொருளையும் அறியாது. மாயையின் வேறாகிய ஆணவமலம் உயிர் தன்னை அநாதியே சார்ந்திருத்தல், அதன் வண்ணமாய்ச் சார்ந்திருந்து தனக்குக் கேடில்லாத நெருப்பினைத் தனக்குள் மறைத்து ஒன்றாய் நிற்கும் விறகுபோலா மென்ப.

குறிப்பு:—விளக்கா=விளக்கு ஆக. உள்ளம்=உயிர். அதுவதுவாய் என்பதை, ஆயாதா மென்பதனோடும் வியாத என்பதனோடுங் கூட்டலாம். அதுவதுவாதல்= தான் வேறெனத் தெரியாது நிற்றல். வன்னி=நெருப்பு. காட்டம்=விறகு. ஒன்றாய்=அத்துவிதமாய்.

## மூன்றாம் அதிகரணம்

இனி, இவ்வான்மா, சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கும் என்றது.

உரை:—மேலே, உயிரானது, நனவு, கனவு, துயில், பேருறக்கம், உயிர்ப் படக்கம் என்ற ஐந்து உணர்வெல்லை களையுடையதாயிருப்பது என்றவாறு.

ஏது:—அதுதான் மல சொருபத்தின் மறைந்து அருப சொருபி யாய் நிற்றலான்.

உரை:—அவ்வுயிர்தான் ஆணவ மலவடிவின் மறைந்து நின்ற நிலையிலே, தத்துவங்களோடு கூடிய காலை, அருவ மாகிய தத்துவ வடிவினையே நிற்பதாதலின்

குறிப்பு:—இப்படித் தத்துவ வடிவாய் நிற்றல், ஆணவ மல நீக்கம்வரை யாதலின், 'மல சொருபத்தின் மறைந்து' என்றார். (மலம் நீங்கியபின், சிவத்தின் மறைந்து நிற்கு மென்பது கருத்து).

ஒன்றணையா மூலத்(து) உயிரணையு(ம்) நாபியினில்
சென்றணையும் சித்தம் இதயத்து—மன்றவே
ஐயைந்தாம் நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

உரை நடை:—நன்னுதலில், வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்து ஆம்: கண்டத்தில், வாக்காதி மெய் யாதி விட்டகன்று வேறு (ஆய) ஐயைந்தாம். இதயத்திற் சித்தம் சென்று அணையும். நாபியினில் உயிர் அணையும். அணையா மூலத்து ஒன்று.

உரை:—(நனவிடமாகிய) நெற்றியில் மெய், வாய், கண், மூக்கு, செவி யென்ற அறிவுப் பொறியைந்தும் சொல்லு தல், செல்லுதல், இடுதல், கழித்தல், மகிழ்த லென்ற வினைப்பொறி யைந்தும் ஆகிய பத்தையும் தெளிவாகப் பொருந்திய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும். (கனவிடமாகிய) கழுத்தினில், அப்பத்தினையும் நீங்கி வேறாகிய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும். (துயி லிடமாகிய) இதயத்திலே சித்தம் தொழிற்படும். (துரியத்

தானமாகிய) உந்தியிலே பிராணவாயு மாத்திரந் தொழிற்படும். கருவிகள் அணையாத மூலாதாரத்தில் புருடன் ஒன்றே நிலைபெறும்.

குறிப்பு :—துயிலில், சித்தத்தோடு பிராணனும் புருடனும் தொழிற்படும் துரியத்தில், பிராணனும் புருடனுமாத்திரம் உள்ளன என அறிக. இதுபற்றி, [illegible] பொறிகள் பத்திற்கும் உரிய விடயங்கள் பத்தும், வாயுக்கள் பத்தும், அந்தக் கரணங்கள் நான்கும், புருடன் ஒன்றுமாம்.

இலாடத்தே சாக்கிரத்தை யயின்றிய உள்ளம்
இலாடத்தே [illegible] ரத்தை யயின்றும் —இலாடத்தே
அவ்வவ இந்திரியத்து அந்துறைகள் கண்டதுவே
அவ்வவற்றின் நீங்கலது ஆங்கு.

உரை :—நெற்றியிலே நனவுநிலையுற்ற உயிரானது நனவிலேயே ஐந்து அவத்தையையும் அடையும். அவையாவன: ஐம்பொறிகளுள் ஒவ்வொரு பொறியாலுணரக்கூடிய விடயங்களை அறிந்து அவ்வப்போதே அவ்வவற்றின் நீங்குதல், இதுபோலச் சகராவத்தைபும ஐவகைப்படும்.

குறிப்பு :—நனவில் நனவு நனவிற் கனவு முதலிய ஐந்து நிலைகளைச் சொல்லிக் குறித்தார். துறைகள் = விடயங்கள். அதுவே = அப்போதே அது = சுத்தாவத்தை. ஆங்கு = அவ்வாறு (ஐவகைப்படும்)

## ஐந்தாம் சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய கண்மூக்(கு)
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

கருத்து :—இவ்வான்மாக்களிடத்துத் தமது முதல் உபகாரமுணர்த்துதல் நுதலிற்று.

**உரை:**—மேலே கூறிய உயிராலே, மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறிகளும் தத்தம் விடயங்களை அளவிட்டறிந்தாலும் (தம்மையுந் தம்மைச் செலுத்தும் உயிரையும்) அறியமாட்டா. அப்பொறிகள்போல, உயிர்களும் தம்மையும் தமது அறிவிற்கு விளக்கந் தருபவனாகிய தனி முதல்வனது திருவருட் சத்தியையும் அறியமாட்டா. உயிர்கள் முதல்வனால் அறிதல், காந்தத்தின்முன் வைத்த இரும்புபோல முதல்வன் சந்நிதிமாத்திரையில் நிகழும். (ஆதலால் முதல்வன் விகாரப்படான்).

**குறிப்பு:**—தாம் = தம்மை. உணர்வின் தமி = அறிவுக்கு (விளக்கமாய) தனிமுதல். 'அருள்' என்பது அறியா என்பதோடு முடிகின்றது. அருள் = மறைப்புச் சத்தி.

**கருத்து:**—கட்டு நிலையில் இறைவன் உயிர்க்குச் செய்யும் உதவியை உணர்த்துதல் கருதியது.

## முதலதிகரணம்

ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணரும் என்றது.

**உரை:**—இதனுள் ஐம்பொறிகள் உயிராற் பொருள்களை யறியும்.

ஏது:—அவற்றினுன் ஆன்மா ஒற்றித்துக் காணின் அல்லது அவை ஒன்றையும் விடயியா வாகலான்.

**உரை:**—அவற்றினோடு உயிர் ஒற்றுமைப்பட்டு அறிந்தாலன்றி, அவை ஒருபொருளையும் உணரமாட்டா வாகலின்.

ஐம்பொறியை ஆண்டங்(கு) அரசாய் உளம்நிற்ப
ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்—ஐம்பொறியிற்
காணுதேற் காணுது காணும்உளம் காணுதேல்
காணுகண் கேளா செவி.

**உரை:**—அரசன் செங்கோல்மண்டபத்தி லிருந்து ஏவலாளரைக் காரியங்களிற் செலுத்தி ஆளுதல்போல, உயி

ரானது ஐம்பொறிகளைச் செலுத்தி ஆண்டு நெறியிலே நிற்பதாகலின், ஐம்பொறிகள் உயிரை அறியமாட்டா; ஐம்பொறி வாயிலாகப் பொருள்களை அறிந்தாலன்றித் தானாக உயிர் பொருள்களை யறியாது: உயிர் ஒற்றுமைப் பட்டாலல்லாமல், கண் பாராது; காது கேளாது. (ஆதலால் ஐம்பொறிகளும் உயிரும் தம்முள் இன்றியமையா.)

குறிப்பு:—கனவில், பொறிகளின் உதவியை உயிர் வேண்டுவதில்லை.

## இரண்டாம் அதிகரணம்

இனி, இதுவுந் தமது முதலாலே உணரும் என்றது.

உரை:—மேல், உயிரும், தமது தலைவனாகிய கடவுளினாலே பொருள்களை அறியும்.

ஏது:—இவ்வான்மாத் தன்னாலே உணரும் இந்திரியங்களைப் போலத் தானுந் தன்னையுணராது நிற்றலான்.

உரை:—தன்னாலே பொருள்களை அறியும் இந்திரியங்கள், தம்மையும் தன்னையும் அறியாமைபோல, உயிரும் தன்னையும் தனது முதல்வனையும் அறியாமல் நிற்றலால்.

குறிப்பு:—தன்னை = தன்னை, என்றும், தன் + ஐ = தனது தலைவன் என்றும் இருபொருள்படும்.

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகம் சேட்டித்த(து)
என்னு மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு உளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணான் சிவன்அசத்தை இன்று.

உரை:—மாறா நிலைப்பொருளாகிய சிவபெருமான் திருமுன்பே உலகம் தொழிற்படுகின்றதென்ற மறைப் பொருளை மறந்தவனே! மறைகள் இயம்பிய முதல்வன் தனக்குக் கண்போலப் பொருள்களை விளக்கி நிற்ப, உயிரானது தனது வினைக்கீடாகப் பொருள்களை அறிந் தனுபவிக்கும். அப்படி இறைவன்கண்ணாக நின்ற

பொழுதும், சுட்டுப் பொருளாகிய அசத்துப்பொருள்களை உயிர்போல அநுபவியான்.

குறிப்பு:—மன்னுசிவன் = பேரின்ப நிலையருளும் இறைவன். உலகம் = உயிர்கள். சொன்னசிவன் = முற்றுணர்வுடைய முதல்வன். சிவன் = தூய தன்மையன். எண்ணான் = கருதி நாடமாட்டான். பொறிகள் உயிரின் பொருட்டறியும்: உயிர், தன் பொருட்டேயறியும் இறைவன் பொருட்டன்று என்பது கருத்து. சத்தி = சத்தி சங்கற்பம்.

வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காத
வெய்யோனை ஆதாரமீன் போல—மெய்யயறிந்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

உரை:—கதிரவனுடைய ஒளியிலே அடங்கித் தோன்றாது நிற்பனவாய், அவனுடைய ஒளியை இன்றியமையாத நட்சத்திரங்கள்போல மெய்ப்பொருளாகிய இறைவனுதவியால், உயிர் கண்டுங் கேட்டும் உண்டும் மோந்தும் தொட்டு முணரப்படும் ஐம்பொறிக்கு விடயமாய பொருள்களைத் தெரிந்து (வேறாதலும் ஒன்றாதலுமின்றி) இறைவனோடு உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக.

அருளுண்டாம் ஈசற் கதுசத்தி யன்றே
அருளும் அவனன்றி யில்லை—அருளின்றி
அவனன்றே யில்லை அருட்கண்ணார் கண்ணுக்(கு)
இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.

உரை:—ஈசன்பால் உயிர்களை உய்விக்கும் இரக்கம் உண்டு. அஃது அவனது சத்தியாகும். அச்சத்தி அவனையின்றியமையாது; அவனும் அச்சத்தியை யின்றியமையான். சத்தியுஞ் சிவமும், குணமுங் குணியும்போல, ஞானக்கண்ணுடையார் அறிவுக்குக் கதிரவனும் ஒளியும் போலப் பொருந்தி நிற்குமென அறிக.

## ஆறாம் சூத்திரம்

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிறன் அல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே.

கருத்து:—சத்தும் அசத்தும் வரைசெய்துணர்த்துதல் நுதலிற்று.

உரை:—இறைவன் அறியப்படு மியல்பின னெனின (உலகப் பொருள் போல) நிலையிலாப் பொருளாவான். அவன் எவ்வாற்றானும் அறியப்படாதவனெனின், அவன் சூனியமாவன். ஆதலின் இரண்டு தன்மையுமின்றி உயிரறிவாலறியப்படாமையும், பதியறிவால் அறியப்படுதலுமாகிய இரண்டு வகையானும் இறைவன் சித்தாகிய சத்தாய் உள்ளவனெனக் கூறுவர் மெய்யில் நிலைபெற்று உயர்ந்தோர்.

குறிப்பு:—உரு = இயல்பு. அசத்து = நிலையிலாப் பொருள். உணராது = உணராதது, உணரப்படாதது. சிவசத்து = சித்தாகிய சத்து.

கருத்து:—நிலைப்பொருள் இது, நிலையாத பொருளிது என அறிவித்தல் கருதியது.

### முதல் அதிகரணம்

சுண்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்து என்றது.

உரை:—இவ்வுலகில், தருக்க அறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருள் நிலையாத் தன்மையுடையது.

ஏது.—அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

உரை:—அவைதாம உள்ளதென்றறியு மறிவைப் பயப்பிப்பதாய் இருந்தே மறைந்து இல்லையென்ற அறிவைப் பயப்பிப்பதாய் நிற்பனவாகலான்.

குறிப்பு:—பிரகாசம் = உபலத்தி, உள்ளதென்ற அறிவு. அப்பிரகாசம் = அநுபலத்தி, இல்லையென்ற அறிவு.

அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த வெல்லாம்
அசத்தாத(ம்) மெய்கண்டான் ஆயின்—அசத்தலாய்
நீரி லெழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேநும்
ஒரின்அவை இன்றாமா(று) ஒப்பு.

உரை:—அசத்தின் தன்மையறியாதவனே! நீ கேட்பாயாக. சத்தினியல்பு உணர்ந்தவன் ஆராயுமிடத்து (மாயா கருவியின் உதவியால்) அறியப்பட்டனவெல்லாம் நிலையா தனவாகும். நிலையாப் பொருளல்லாதவனே, நிலையாமைக்கு உவமைகளாவன இவையென்று இப்போது ஆராயுங்கால், நீரிலே எழுதிய எழுத்தும், நிகழும்போதே மறைகின்ற கனவும், கானலும் என்னுமிவை என்றவாறு.

குறிப்பு:—'மெய்கண்டான்' என்ற குறிப்பு ஆசிரியர் திருப்பெயரை உணர்த்துமாறறிக. அசத்தலாய் = அசத்து + அலாய் = அசத்து அல்லாதவனே. அசற்காரியவாதி யல்லாத அறிவுடையவனே என்று முனிவர் பொருளுரைத்தார். நீரிலெழுத்து முதலியன நிலையாமைக்கு உதாரணங்களாமன்றி, இல்பொருளுக்கு உவமையாகா வென அறிக.

## இரண்டாம் அதிகரணம்

இனி, இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீத கோசாமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணர்தற் பாற்று.

உரை:—மேலே கூறுவதாவது, முற்கூறிய பிரகாசம், அப்பிரகாசமென்ற இரண்டு இயல்புமின்றி, சொல்லையும் மனத்தையுங் கடந்ததாய், அஃதாவது பாசஞானத்தையும் பசுஞானத்தையுங் கடந்ததாய் (பதிஞானத்தால்) நேரே யறிந்தனுபவிக்கற்பாலதாய் நிற்கும் அப் பரம்பொருள்

நிலைப்பொருளாயுள்ள சிவமென்று (பெரியோரால்) அறியப்படுந் தன்மைத்து என்றவாறு.

ஏது.—பிரகாசத்திற்குப் பிரகாசிக்கவேண்டுவது இன்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மையானும்.

உரை:—(மனம் வாக்குகளால்) அறியப்படும் பொருள், இறைஞானத்தால் அறியபட வேண்டுவதில்லை யாக லானும், ஒருவாற்றானும் அறியப்படாத தொன்றிற்கு எக் காலத்தும் விளக்கம் இல்லாமையானும்.

குறிப்பு:—இறைவன், கருவிகளா லறியப்படும் பொரு ளில்லை ஒருவாற்றானும் அறியப்படாத பொருளு மில்லை யென்பது கருத்து.

> எண்ணிய சத்தன்று அசத்தன்றும் என்றலிலான்
> கண்ணி உளதென்றல் மெய்கண்டான்—எண்ணி
> அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்
> அறிவறியா மெய்சிவன்றாள் ஆம்.

உரை:—பரம்பொருள், கருதப்பட்ட சத்துப் பொருளும் அசத்துப் பொருளும் அன்று என்னில், சத்தும் அசத்து மாகாதபொருள், யாது காரணம்பற்றி உண்டென் றறிவது. (கூறுக). சத்தி னியல்புணர்ந்தோன் ஆராய்ந் தறிய, கருவிகளின் உதவியால் அறியப்பட்டதும் ஒரு வாற்றானும் அறியப்படாத சூனியமும் ஆகிய இரண்டும் அசத்தேயாதலால், சுட்டறிவினால் அறியப்படாத சத் தென்ற மெய்பொருள், (உயிர் அத்துவிதமாய் நின் றறியத்தக்க) சிவனது திருவருளேயாம்.

குறிப்பு:—என்கண்ணி = எதனைப்பற்றி. தான் = அருள்சத்தி,—திருவடியென்றதும் இதுவே.

> உணர்ப அசத்தாதல் ஒன்றுணரா(து) ஒன்றை
> உணருநீ தான்உணராய் ஆயின்—உணரும்உனில்
> தான்இரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்
> தான்இரண்டாய்க் காணான் தமி.

உரை:—அறியப்படுபவைகளெல்லாம் நிலையாப் பொருள் ஆதலின், அறிவில்லாத அவற்றுள் ஒன்றும் ஒரு முதல்வனை அறியமாட்டாது. அப்பொருள்களை அறியும் நீ தானும் முதல்வனை அறியமாட்டாய். நீ ஆராய்ந்து பார்ப்பின், அப்பொருள்களைப்போல அவனை அறியக் கூடுமாயின், அவன் உன்னில் வேறாவன். உண்மை யுணர்ந் தோன், இறையருளில் அடங்கிநின்ற இறையறிவோடு கூடிய தன்னறிவால் அறிதலான் அத் தனிமுதற்பொருளை அதனின் வேறாகநின்று அறிவானல்லன்.

குறிப்பு:—ஒன்றை = ஒரு பரம்பொருளை. தமி = தனி முதல்வன். இரண்டாம் = வேறாம்.

> பாவகமேல் தான்அசத்தாம் பாவநா தீதமேனிற்
> பாவகமாம் அன்றென்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்
> பாவித்தல் தானென்னில் பாவகமாந் தன்னருளால்
> பாவிப் பதுபரம்இல் பாழ்.

உரை :—மன முதலிய கருவிகளோடு பாவிக்கப்படுவ தானால், அது (சுட்டி யறியப்படும்) அசத்தாகும். அப் பாவனையைக் கடந்ததென்றால், (கருவிகள் நீங்கிய வழிப்) பாவனை யென்பது பெயர் மாத்திரமன்றி உண்மையில் இல்லையாம். இருவகையாகவு மன்றி, சொல்லவொண்ணாததா கப் பாவிக்கப்படுவதென்னில், அது சூனியமாம். (கிடை யாதபொருளைக் கிடைத்ததாகப் பாவிப்பது போலப்) பாவனை செய்தலென்னின், அது போலிப்பாவனையாம். ஆதலால் இறையருள்வழி நின்று நினைக்கப்படுவது பரம் பொருள். அது சூனியமன்று.

குறிப்பு :—யோகியர் கூறும் பாவனையால் இறைவனை அறிதல் கூடாதென்றவாறு. இரண்டாமடி முதலிற் பாவ கம் என்றது பயனில்லை யென்ற பொருளில் வந்தது

மூன்றாமடியிற் பாவகம் = போலிப் பாவனை. 'இல்பாழ்' என்பதைப் 'பாழ்இல்' என மாறுக.

> அறிய இரண்டல்லன் ஆங்(கு) அறிவு தன்னால்
> அறியப்படான் அறிவின் உள்ளான் — அறிவுக்குக்
> காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யொன்றாக்
> காட்டா(து) அறி(வு) அறிந்து கண்டு.

உரை :— உயிர் அறியும்படி அதனின் வேறாக நிற்பானல்லன். உயிரறிவுக்கு அப்பாற்பட்டு நுட்பமாய் அதன்கட் கலந்திருத்தலின், தனது அறிவின்கண்ணே உயிரால் அவன் அறியப்படான். உயிரால் பொருள்களை யறிகிற கண், சத்தாகிய உயிரினை அறியாமை போல, தனக்குப் பொருள்களை விளக்குவானாய் நின்ற முதல்வனை உயிரினறிவு கண்டறிந்து உயிர்க்குக் காட்டமாட்டாது.

குறிப்பு :— உயிர் தன்னறிவு கொண்டு முதல்வனை அறிய முடியாமை விளக்கியவாறு. ஆங்கு என்பதை 'அறிவின் உள்ளான்' என்பதன் இறுதியிலமைத்துப் பொருள் சொல்க. மெய் = சத்து, ஆன்மா. இறுதியடியில், அறிவு = உயிரறிவு. அறிந்து கண்டு, என்பதை, கண்டு அறிந்து என மாறுக.

> அதுவென்றும் ஒன்(று) அன்று அதுவன்றி வேறே
> அதுவென் றறியறிவும் உண்டே — அதுவென்(று)
> அறிய இரண்டல்லன் ஆங்க(ு)அறிவுள் நிற்றல்
> அறியும்அறி வசிவமும் ஆம்.

உரை :— சிவம் இன்னதென்றறியப்படாமையால் 'அது' வென்று சொல்லப்படும் ஒரு பொருளல்ல. அச் சிவத்தையன்றி, அதனை (வாக்கு மனாதீத மென்ற) அது என்று அறிகின்ற அறிவுப் பொருள் அதற்கு வேறேயுளது. உலகப் பொருள் போலச் சுட்டியறியும்படி வேறாக நில்லாது உயிரின் அறிவின்கண் கலந்து முதல்வன் நிற்றலின், அவனை அறிகின்ற அறிவுப்பொருளாய

உயிரும் கலப்பால், முதல்வனுைய சிவமுமாம் என்று சொல்லுமாறு உளதாம்.

குறிப்பு :—முதலடியில் முதல் 'அது'=சொல்லொ ணுதென்னும் பொருட்டு இரண்டாவது, அது= பரம் பொருள். இரண்டாமடி முதலில் 'அது'=மனம் வாக் கைக் கடந்தது. தனிச்சீரில், 'அது'=சுட்டுப் பொருள். இரண்டு=வேறு. 'அங்கு' எனபதை 'உண்டே' என்ப தோடு முடிக்க. அறியுமறிவே=அறியு முயிரே, 'சிவமும்' என்ற உம்மையால், பொருட்டன்மையால் அது சிவமாகா தென்ற குறிப்புக் காண்க. தண்ணீரிலே உப்புக்கரைந்த விடத்துத் தண்ணீரையும் உப்பென்பது காண்க.

---

## ஏழாஞ் சூத்திரம்

யாவையுஞ் சூனியம் சத்(து)எதிர் ஆகலின்,
சத்தே அறியா(து) அசத்தில(து) அறியா(து)
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா.

கருத்து :—மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை :—அசத்தாகிய உலகப் பொருளெல்லாம் சத்தாகிய சிவத்தின்முன் பாழாமாகலின், சத்து அசத்தை அறிதல் செய்யாது. அசத்தாகிய உலகம் அறிவில தாகலின் ஒன்றையும் அறியுந் தன்மையுடையதன்று. சத்தையும் அசத்தையும் அறியும் இருவகைத் தன்மை யுடையதாய்ச் சத்தேயாகவும் அசத்தேயாகவுமில்லாத சதசத்தாகி உயிர் உளது. (என அறிக.)

குறிப்பு :—சூனியம்=பாழ். இலது=அறிவிலது

கருத்து :—சத்திற்கும் அசத்திற்கும் வேறாகச் சதசத் துண்மை அறிவித்தல் கருதியது.

## முதல் அதிகரணம்

**ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என்றது.**

உரை:—இதன்கண், சுட்டாது அறியுஞ் சிவத்தின் முன் சுட்டி யறியப்படும் நிலையிலாப் பொருட்டொகுதி விளங்கித் தோன்றாது.

ஏது.—மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

உரை:—இறைவனது இயற்கை புணர்வின்முன் செயற்கைச் சுட்டுணர்வு விளங்கி நில்லாமையால்.

அன்னியமி லாமை அரற்(கு) ஒன்(று) உணர்வின்றும்
அன்னியமி லான்அசத்தைக் காண்குவனேல்—அன்னியமாக்
காணுன் அவன்முன் கதிர்முன் இருள்போல
மாணு அசத்தின்மை மற்று.

உரை:—பசுபாசங்கள் தனக்கு வேருகாது தன்னுள் அடங்கி நிற்றலையுடைய அரனுக்குச் சுட்டியறியக் கிடப்பது யாதுமில்லை. அவ்வாறு அன்னியமில்லாத முதல்வன் அசத்துப் பொருளை யறிவானுயின், தனக்கு வேருக அவற்றைச் சுட்டி யறியான். கதிரவன் முன் இருள் மடங்குதல் போல, முதல்வன் முன், அவனது வியாபக அறிவுக்கு இயையாத அசத்துலகம் விளங்கி நில்லாமை அறிக.

## இரண்டாம் அதிகரணம்

**இனி, அசத்தினுக்கு உணர்வின்று என்றது.**

உரை:—மேல், தத்துவவடிவாகிய உலகினுக்கு அறிவு இல்லை என்றவாறு.

ஏது:—அதுதான் நிருபிக்கில் இன்றகலான்.

உரை:—ஆராயுங்கால் அதன்கண் (அறிவு) இல்லையாகலான்.

குறிப்பு :—உயிரின்றித் தவழி, பொறி, கரண முதலியன அறிவுடையன போலத் தோற்றினும், உயிர் கலவாத இடத்து அவை தம்மிலே சடமாயுள்ளன வென்பார், 'நிரூபிக்கில்' என்றார்

பேய்த்தேர்நீர் என்றுவரும் பேதைக்கு மற்றணாத
பேய்த்தேர் அசத்தாம் பெற்றிமையின்—வாய்க்குதனைக்
கண்டுணர்வார் இல்வழியிற் காணும் அசத்தன்மை
கண்டுணர்வா ரில்ல(து)எனக் காண்.

உரை :—கானலைத் தண்ணீரென்றெண்ணி, அதன்பாற் செல்லும் அறிவிலானுக்கு, அவன் அதையணைந்தகாலே அக் கானல் நீரானது பொய்யாகுந் தன்மைபோல, நேர்பட்ட குருமொழியை ஆய்ந்தறிவாரில்லாதபோது, உலகப்பொருளிற் றோன்றும் நிலைத்த அறிவாந்தன்மை, ஆய்வாருள்ள போது அவர்க்கு இல்லாததாக விளங்குமென்றறிக.

குறிப்பு:—வாய்த்த =கிடைத்து இங்கே, குருமொழி யென்பது வருவிக்கப்பட்டது வாய்ந்தது என்பதற்கு, எதிர்ப்பட்டதை யென்னும் பொருள் கொள்ளலாம்

மூன்றும் அதிகரணம்

இனி, இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்றது.

உரை:—அசத்தும் சத்தும் ஒன்றை யொன்றுணரா தாகவே, இரண்டையும் அறிவதாகிய ஒன்று உண்டு. அஃது இரண்டின் தன்மையுமில்லாத உயிர் என்றது.

எது.—இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் நின்று அவ்வறிவு இரண்டன்பாலு முள்ளதாய் உள்ள அதுவே அவ்வான்மா வாம் என்றது.

உரை:—சத்தினையும் அசத்தினையும் அறியுந்தன்மைய தாய், அறிவிக்க அறிவதாய் அவ்விரண்டினும் நிலைபெற்ற அனுபவ அறிவுள்ளதாயது எதுவோ, அதுவே சதசத்தாய உயிர் என்றவாறு.

குறிப்பு:—உபதேசி = அறிவிக்க அறிவது. இரண்டன் பாலும நின்ற அறிவு உளதாய் என உரை நடை கொள்க.

அருவுருவாய் தான்அறிதல் ஆயிழையாய் ஆன்மா
அருவுருவம் அன்றாம் உண்மை—அருவுருவாய்த்
தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது
தோன்றல மலர்மணம்போல் தொக்கு.

உரை:—நுணுகிய நூலகளை ஆராய்கின்ற உயிரானது சத்தையும் அசத்தையும் தான் அறிதலால், அது (அறியப்பட்ட இரண்டினும் வேறாதலால்) அறியப்பட்ட சத்து மாகாது, அசத்துமாகாது. அதன் உண்மைத்தன்மை, சத்தோடும் அசத்தோடும் எண்ணிக்கப்பட்டதாய், மூன்றாவதொரு பொருளாய் உடனாக நிலைத்து, சூனியப் பொருளாகவும் நில்லாது, இரண்டினுஞ் சார்ந்ததன் வண்ணமாய்ப் பூவிலே வாசம் அடங்கித் தோன்றுமாறு போல, இரண்டினையும் அறியுங்கால், அவற்றின் சார்பா யறியப்படுவதா யிருத்தலாகும்.

குறிப்பு:—அரு = சத்து. உரு = அசத்து. ஆய் = நுண்ணிய, இழை நூலுக்கு ஆகுபெயர், ஆய் = ஆராய்கின்ற.

மயர்ச்சம ஆற்றும் மருட்சில் தெளிந்தும்
பெயர்த்துணர் நீ சத்தாகாய் பேசில்—அசத்தும்அலை
நீயறிந்து செய்வினைகள் நீஅறிதி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

உரை:—(அறிவைவிளக்குங் கருவி யிலவழி) அறியாமையை அடைந்தும், நோய்க்கு மருந்து போல்வதாகிய அறியாமைக்கு மாற்றாகிய விளக்குமுளவழி அறிந்தும், இங்ஙனம் மாறிமாறி உணர்ந்து வருகின்ற நீ ஒருதன்மையா யறியும் சத்தாகமாட்டாய் சொல்லப்படுகில், நீ செய்த வினைகளின் பயனை அறிந்து நீயே அனுபவிப்பதன்றி அசத்தாய பாசம் அறிந்து அனுபவியாமையால், நீ அசத்தும் அல்லாதாய். நீ இரண்டினும் வேறு.

**மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாது அசத்(து)ஆதல்**
**அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண்—மெய்ஞ்ஞானந்**
**தானே உளவன்றே தண்கடல்நீ ருப்புப்போல்**
**தானேய் உளம்உளவாய்த் தான்.**

**உரை நடை:**—அஞ்ஞானம் மெய்ஞ்ஞானந் தன்னில் அசத்து ஆதல் விளையாது. மெய்ஞ்ஞானம் தானே உள அன்றே தான் ஏய் உளம் உளவா, தான் உள்ளம் அணைதல், தண்கடல் நீருப்புப்போற்காண்.

**உரை:**—அறியாமையானது, மெய்யறிவாகிய முதல் வன்முன் (ஒளிமுன் னிருள்போல) நிலையாமையால் அவ னிடத்தே உளதாகாது. அந்த மெய்யறிவன் என்று உள்ளானே அன்றே, தான் பொருந்துதற்குரிய உயிர்கள் இருப்பனவாக, அவ்வுயிர்களை அது பற்றி நிற்றல், குளிர்ந்த கடல் உப்பானது நீரைப்பற்றி இடத்தைப் பற்றாது நிற்குந்தன்மைபோல என அறிக.

---

## எட்டாஞ் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்(டு)
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே.

**கருத்து:**—ஞானத்தினை உணரு முறைமையினை யுணர்த்திற்று.

**குறிப்பு:**—ஞானம் = பதியறிவு.

**சூத்திர உரை நடை:**—தவத்தினில் தம்முதல்குருவுமாய் ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என வுணர்த்த விட்டு அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே.

**உரை:**—உயிர்களது தவமிகுதியால், அவற்றிற்கு உள் நின்றுணர்த்திய முதல்வன் குருவடிவாய் எழுந்தருளி வந்து, நீ ஐம்பொறிகளாகிய வேடருள் அகப்பட்டு வளர்ந்து நின் பெருந்தன்மையை மறந்தாய் என்று

உண்மை யறிவிக்க அறிந்து ஐம்புல வேடரை விட்டு நீங்கி, இறைவனோடு அந்நியமாகாத தன்மையில் நிலைபெற்று அவன்றிருவடிகளை அணையும் என்றவாறு.

## முதல் அதிகரணம்

ஈண்டு, இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்றது.

உரை:—இதனுள், மேற்கூறிப் போந்த உயிர்களுக்குப் பல பிறவிகளில் இயற்றிய தவத்தின் பயனாக, இறைவன் அளிக்கும் சிவஞானம் உண்டாகும் என்றது.

ஏது.—மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறி யாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடாவாக லான்.

உரை:—முன்னேயே, சரியை, கிரியை, யோகமாகிய தவங்களைச் செய்த காலை, அவை வீட்டு நெறிக்குச் சாதன மாய சிவஞானத்தைக் கொடுத்தன்றி வீட்டினைத் தர வல்லன அல்லவாகலின்.

குறிப்பு:—தவத்தால் ஞானம் அடைந்தே வீடு கூடுதல் ஆகும். ஞானமின்றி வீடில்லை யென்றது.

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு.

உரை:—(சரியை, கிரியை, யோகம் என்னுந்) தவத்தை ஆற்றியவர்கள் ஒருதலையாகத் தவப்பயனடைதற்குரிய உயருலகினை யடைந்து (தவப்பயனை நுகர்ந்தபின்) உலகத்தி லுள்ள பற்றினைப் பிறவியெடுத்து ஒழித்தற்பொருட்டு, தவஞ்செய்தற்குரிய நல்ல இனத்திலே வந்துபிறந்து சிவ ஞானம் நண்ணுவதைக் கற்றறிந்தவர் ஆராய்ச்சி தெரிந்து கூறும்.

குறிப்பு:—என்றும் = திண்ணமாக. உலகத்திற் பிறந்து அறப்பதாகிய பற்று இல்லாத விடத்து, தவலோகம் நின்ற வாறே ஞானமடைவர் என்பது கருத்து. சாரு = இனம், பழக்க முதலியவைகளைக் குறிக்கும். சாதியென்று பொருள் கொண்டு, இழிகுலத்தார்க்கு ஞானம் இல்லை யென்பது தவறு. சூழ் = சூழ்ச்சி. கூட்டமென்றுங் கொள் ளுப. சற்றறிந்தார் கூறுவதைச் சூழ்ச்சிமேல் வைத் துரைத்தார்

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொத்தும்
இசைந்து வருவினையில் இன்பம்—இசைந்த
இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தால்
மருவுவனாம் ஞானத்தை வந்து.

உரைநடை:—இசைந்து வினையில் வரும் இன்பம், பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும். இசைந்த இரு வினை இறப்பில் தவத்தால் ஒப்பில வந்து ஞானத்தை மருவுவன்.

உரை:—பயனைக் கூறிக்கொண்டு செய்யப்படும் புண்ணி யங்களால் வரும் இன்பமானது, பசித்து உணவு உண்டு, அது அற்றவிடத்து மீட்டும் பசிப்பவனுக்கு அவ்வின்பம் எவ்வாறோ அவ்வாறாகும் பிறவியைத் தோற்றுவிப்பதில் சமமாயுள்ள நல்வினையும் தீவினையும் மிக்க தவத்தினால், ஒப்ப வெறுக்கப்படுமாயின், அத்தவ முதிர்ச்சியுடையான் ஞான குருவை நாடி வந்து சிவஞானத்தை அடைவன்.

## இரண்டாம் அதிகரணம்

இனி. இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது.

உரை:—மேல், ஞானத்தை விரும்பும் உயிர்களுக்குப் பருவம் வந்தபோது உள்நின்று உணர்த்திவந்த அவர்கள் முதல்வனே, குருவாய் வெளிப்பட்டருளி அதனை அறிவுறுக் கும் என்றவாறு.

ஏது.—அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

உரை:—அவன், தூய உயிர்களின் வேறாகாது அவர்களது அறிவைத் தமக்கு வடிவமாகக் கொண்டு நிற்பனாதலின்.

குறிப்பு:—குருவாய்வருவா னறிவின்கண் இறைவன் ஆவேசித்து நிற்குநிலை கூறப்பட்டது.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்(கு)
அஞ்ஞான அச்சகலர்க் கு) அக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்உணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு,
முன்உணர்த்துந் தான்குருவாய் முன்.

உரை:—விஞ்ஞான கலர்க்கு உண்மை யறிவு இறைவன் உள்நின் றுணர்த்தத் தானே உண்டாகும் பிரளயாகலருக்கு அவ்வாறன்றித் தனது தெய்வ வடிவையே குருவடி வாகக் கொண்டு முன்னின்று ஞானத்தை உணர்த்துவன். அறியாமையுடைய சகலர்க்கு அவர் வடிவுபோலும் வடிவுடைய குருவாகிவந்து அவ்வடிவின் பின்னாக மறைந்துநின்று உண்மையறிவை நல்குவன்.

குறிப்பு:—விஞ்ஞானகலர் - விஞ்ஞானத்தாற் கலையற்றவர். பிரளயாகலர் பிரளயத்தாற் கலையற்றவர். சகலர்-கலையோடு கூடினவர். இவர்கள், முறையே ஒருமலம் இருமலம் மும்மலமுடையவர். அன்றிப் பிர....முன் என்பதை முதலடிக்குப் பின் வைத்துப் பொருள் கொள்ளுக. தன்மை, முன்னிலை, படர்க்கை யென்ற முறையில் உபதேசம் நிகழும் என்றவாறு.

அறிவிக்க அன்றி அறியா வுளங்கள்
செறியுமாம் முன்பின் துறைகள்—நெறியிற்
துறையுடைய சொற்கோள்ளார் கோள்பவத்தின் வீடேன்
துறைவில்சகன் சூழ்கோள் பவர்க்கு.

**உரை நடை:**—நெறியில் அறிவிக்க அன்றி அறியா உளங்கள். குறைவில் சகன் சூழ்கொள்பவர்க்குக் குறைகள் முன்பின் செறியும். குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடு என்.

உரை:—உயிர்கள் தமக்கு உரிய படிமுறையில் வைத்து முதல்வன் அறிவிக்க அறியும் இயல்பினவாகலான், குறைவில்லாத உலகமுதல்வன் உபதேசமொழியை வேண்டிநின்ற பிரளயாகலர், சகலருக்குக் குறையாகப் பெறுதற்குரியனவாய இன்றியமையா உபதேசப், முன்னிலையிலும் பின்னிலையிலும் நிகழும். உபதேசமொழியை இன்றியமையாது வேண்டாத விஞ்ஞானகலர்க்கு இறைவனாற் கொள்ளப் பட்ட நிகழ்ச்சியளவிலேயே வீடுபயக்குமுணர்வு உண்டாமென்று சொல்லுக.

குறிப்பு:—குறைகள் = முற்றுப் பெறுதற்கு இன்றியமையாக் குறையாயிருந்தவைகள். பவம் = நிகழ்ச்சி. சகன் = உலகமுதல்வன். சூழ் = உபதேசம்.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல்—இல்லா
அருவாகி நின்றானை யார்அறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று.

உரை:—நல்ல மாணவனே! (ஏந்திய அணிகளையுடைய நங்கைக்குப் பிள்ளையைக் காணுமுன்) சுரக்காத முலைப்பாலும் கண்ணீரும் பிள்ளையைக் கண்டவுடனே தோன்றுகின்றன. அவ்வாறே நீரில் மறைந்த நிழல்போல உயிர்களொடு கலந்து புலப்படாது நின்ற முதல்வனை, அவன் குருவடிவமாய் உருவெடுத்துத் தோன்றுவிடின், யார்தாம் அறிதல் கூடும்.

குறிப்பு:—அருவாய் = புலப்படாது.

## மூன்றாம் அதிகரணம்

**இனி, இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா என்றது.**

உரை:—மேல், இவ்வுயிர்கள் ஐம்பொறி யறிவுகளால் திரிபுணர்ச்சியுடையனவாய்த் தம்மை அறியமாட்டா.

ஏது.—அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

உரை:—பளிங்கிற் பொருந்திய நிறங்கள் தமது இயல் பினைக் காட்டுவனவன்றிப் படிகவொளியைக் காட்டாமை போல, ஐம்பொறியறிவுகள் தமக்குப் புலனாயவிடயங் களையே உயிர்க்குக் காட்டி நிற்றலால்.

குறிப்பு:—ஒவ்வொரு பொறியும் தனக்குப் புலனாயதையே காட்டு மென்பார், 'காட்டிற்றை' என ஒருமையாற் கூறினர்.

பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டும் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.

உரை:—பளிங்கானது தன்னைச் சாரப்பட்ட பல நிறங் களையே காட்டி நிற்பதுபோல, சார்ந்த பொறிகளின் தன்மையையே தன்மாட்டுக் காட்டும் தனது பொது வியல்பை நினைந்து பல் நிறங்கள் படிகத்திற்கு வேறு என்றறியுமாறுபோல, பொதுவியல்பைக் காட்டும் பொறி களைத் தன்னின் வேறெனை அறிந்து, அப் பொதுவியல்பு நிலையாதொழியுமாறு, தனது சிறப்பியல்பை யுணர்ந்தோன் (அசத்தாகிய பொறிகளுக்கு) வேறாகிய மெய்ப்பொரு ளாகிய தெய்வத்தின் அடிமையாவன.

குறிப்பு:—பொய்=பொதுவியல்பு. மெய்=சிறப் பியல்பு. தைவம்=தேவனுடைமை. இறுதியடியில், 'வேறு' மெய்ப்பொருட்கு என்பதோடு முடிவது.

## நான்காம் அதிகரணம்

இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறவான் காணவே, தமது முதல் சீபாதத்தை அணையும் என்றது.

உரை:—மேல் கவமுற்றிய உயிரானது, தன்னை ஐம்பொறிகளுக்கு வேறாகவுணரவே, தமது தலைவனது திருவடியை அடையும்

குறிப்பு:—இந்திரியத்துக்கு வேறாகக் கேவல நிலையடையாது என்பார், 'சாணவே' என்றார்.

ஏது.—ஊசல் கயிறற்றல் தாய் தரையேயாந துணையான்.

உரை:—ஒருவன் ஏறியிருந்து ஆடுகின்ற ஊஞ்சல், அது தொங்கவிட்டுள்ள சயிறு இற்றுவிழநேரின், உற்றுழி யுதவுந் தாய்போல அதற்குத் சாரகமாக உதவுவது நிலனேயா மாதலால்.

சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலன்உணர்வில் தீர்ந்து--சிறைவிட்(டு)
அலைகடலிற் சேன்றடங்கும் ஆறுபோல் மீளா(து)
உலைவிலரன் பாதத்தை உற்று.

உரை:—அணையை உயர்த்துக்கட்டித் தடை செயதலிஞல் தேக்கிநின்ற ஆற்றுநீர்போலப் பாச ஞானங்களால் வியாபகம் தடைப்பட்டுநின்ற உயிரானது, தடைநீங்கிய காலத்தே கடலின்கட் சென்றடங்கி மீண்டு பிரிந்துவாராத ஆற்றுநீர்போல, தனக்குத் தடைசெய்கின்ற பொறியுணர்வு நீங்கியவழி, கேடில்லாத சிவபெருமானது திருவடிகளை யடைந்து அத்திருவடி நிறைவேயாய் அதன்கண் அடங்கிப் பின்பு மீளுதல் செய்யாது.

எவ்வுருவுந் தான்என்னில் எய்துவா ரில்லைதாள்
இவ்வுருவில் வேறேல் இறையல்லன்—எவ்வுருவுங்
கண்போல் அவயவங்கள் காணுஅக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்.

உரை:—ஐம்பொறியுணர்வு உள்பட எவ்வகை யுணர்வும் இறைவனே என்றால், அவனைப் போயடைய விரும்புவார் யாரும் இல்லை. உயிருணர்வோடு இறைவன், தொடர்பில்லானென்னில், அவன் முழுமுதல்வன் ஆகான். கண்போலப் பிறபொறிகள் புலன்களைச் சென்று பற்றுவனவல்ல. அதுபோலப் பொறியுணர்வும் உயிருணர்வும் ஒரு தன்மையனவல்ல. கண்ணில்லாதவர் கண்பெற்றவிடத்தே, அவர்கள் அநுபவத்தால் அத்தன்மைத்தாய வெற்றியை அறிக.

குறிப்பு:—கழல்=வெற்றி. பிற பொறிகளினு மிகுதியாயுள்ள வியாபகச்சிறப்பு. புலன் உணர்வு பற்றியதை யறியும். உயிருணர்வு, வியாபித்தறியும். பிற அவயவங்கள் பொறியுணர்வுக்கும், கண், உயிருணர்வுக்கும் உவமையாயின.

ஐம்பொறியின் அல்லையெனும் அந்த ரசிவனை
ஐம்பொறியை விட்டங்(கு) அணைசகலன்—ஐம்பொறியின்
நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்
நீங்கானை நீங்க நினைந்து.

உரை:—ஐம்பொறிகள்போல, அளவுபட்ட விளக்கம் உடையவனுகாய் என்று அறிவுறுக்கப்பட்ட முடிந்த உபதேச முடையவனே! ஐம்பொறிகளை விட்டுச் சிவனை அடைகின்ற சகலனுகிய ஆன்மா, ஐம்பொறிகளோடு இருத்தல் பற்றிச் சிவனைவிட்டு நீங்கமாட்டான். நீர்மேலே பரந்த பாசியைப்போல, நீங்கக்கூடிய ஆணவமலம், வினை முதலியன வாசனை வயமாக வந்து கூடுமாயின், தன்னை நீங்காத முதல்வனை நினைந்து அவற்றைவிட்டு விலகுவன்.

குறிப்பு:—அந்தரர=முடிவான சொல்லுடையவனே. இறுதியில், 'நினைந்து நீங்கும்' என மாறுக.

---

## ஒன்பதாஞ் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே.

கருத்து :—ஆன்மசுத்தி பண்ணுமாறுணர்த்துதல் நுதலிற்று.

உரை :—குறைவான அறிவாகிய பாசஞானத்தா லறியப்படாத முதல்வனை அவனது திருவடி ஞானமாகிய கண்ணினால், அறிவின்கண்ணே ஆய்ந்தறிக. ஒருவரும் ஏறிச்செலுத்தாத விரைவுடைய பேய்த்தேராகிய கானல் போலப் பாசக்கூட்டம் நீங்கி யொழிய இறை ஞானமானது பிறவித்துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அக்காட்சி சலியாமைப் பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவைந்தெழுத்தை விதிப்படி தியானிக்க.

குறிப்பு :—கண் = அறிவு, சிந்தை = உயிரறிவு. நாடி = நாடுக. உரா = ஊராத. துனை = வேகம். ஒருவ = நீங்க. பதி = இறைஞானம். எண்ணு = நினை.

கருத்துப் பொருள் :—வாசனா மலம் தாக்காது உயிரினைப் புனிதமாக்குவதை உணர்த்துதல் கருதியது.

### முதல் அதிகரணம்

கண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றது.

உரை :—வெளிப்படை.

ஏது.—அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

உரை :—பாச பசுஞானங்களுக்கு அப்பாற்பட்டுப் பதியறிவாலே அறியத்தக்கவனா யிருத்தலால்.

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் தேர்ந்தவகை—நாடியான்
தன்னாலே தன்னையுங் கண்டு தனைக்காணார்
என்னும் எனவறிவார் இன்று.

உரை:—(இடை, பிங்கலை முதலிய) நாடிகளோ, எலும்போ, நரம்போ, தண்ணீர் கோழை முதலியவற்றுள் யான் யார் என்று தேடியும் என்னை அறிகின்றிலேன் என்று தேர்ந்தறியும் அறிவின்கண்ணே ஆய்ங்கால், விளங்கித் தோன்றுவதாய அரனது பேரறிவாலே அரனை யறிந்து அவனுளடங்கி நின்றறியும் பொருளாய தம்மை யறிய மாட்டாதார் முத்திக்காலமாகிய இப்போது தம்மை எவ்வியல்பினரென அறிவார்.

குறிப்பு:—பாசங்களுள் ஒன்றல்லன் ஆன்மா வென்பதறிந்து, இறையறிவு பெற்ற காலத்தே அவன் வியாபகத்திலடங்கிய ஆன்மாவை இறையறிவாற் காணப்பெறுதல் கூடும். அவ்வாறன்றி வேறு எவ்வாறு உயிரை அறிதல் கூடும் என்றவாறு. 'இன்று என் என அறிவாராம்' என இறுதியடிக்கு உரைநடை கொள்க.

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா—காட்டிய
உள்ளந் தனைக்காணா துள்ளத்தின் கண்ணாய
கள்வன்றன் உள்ளத்திற் காண்.

உரை:—உயிரால் ஒன்றைக் காட்டப்பட்டு காண்கின்ற கண்ணானது தன்னை யறியமாட்டாது. தனக்குப் பொருள்களைக் காட்டுவதாய உயிரையும் அறியமாட்டாது. அதுபோல முதல்வன் காட்ட ஒன்றைக் காண்பதாய உயிர் தன்னையுமறியாது தலைவனையுமறியாது. உயிரின் தேர்ச்சி அறிவின்கண் உடனாய் நிற்கும் மறைபொருளாகிய முதல்வனை அவ்வறிவிலே நாடித் தெளிவாயாக.

குறிப்பு:—காட்டிய = காட்டப்பெற்ற, உள்ளம் = உயிர். மூன்றாம் அடியில், கண் = அறிவு.

## இரண்டாமதிகரணம்

இனி, அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்து என்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென் றுணரற்பாற்று.

ஏது:—வேற்றியலாகிய வன்ன பேதங்களை வேற்றியல் பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது, படிக சொரூபமாந் துணையான்.

உரை:—படிகத்தின்பாலுள்ள நிறவேற்றுமைகளை படிகத்தின் குணமல்லவென்று கழித்தவிடத்து, எஞ்சி நிற்பது படிக வியல்பாகுமாதல்போல, நிலையானபொருளை அறியும் ஞானத்தை மறைத்துநிற்கும் அசத்துப் பொருள்களினுணர்வை நிலையிலாதனவென ஆசிரிய மொழியில் உறைத்து நின்றுகண்டு கழித்தவிடத்தே, தோன்றி விளங்குவது சிவஞானத்தின் வடிவமென் றறியற் பாலது.

> நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
> தற்பரமாய் நின்ற தனிமுதல்வன்—அற்புதம்போல்
> ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ
> வானோ முதல்களையின் வந்து.

உரை நடை:—நாலாமடியை மூன்றாம் அடிக்குமுன் கொள்க.

உரை:—குண ரூபமாக அறியப்படும் அசத்தமாயா காரியங்களையும், மலகன்மகாரிய வடிவாயறியப்படும் கலப்புப் பிரபஞ்சத்தையும், நிலையில்லாத இன்பவடிவாய் விளங்குஞ் சுத்தப் பிரபஞ்சத்தையுங் கடந்தவனாய், உயிரினுணர்வுக்கு மேற்பட்டவனாய் நின்ற சிவஞானத்தாலன்றிப் பிறவற்றாலறியப்படாத முதல்வன், ஆகாய முதலிய வற்றை அசத்தென நீக்கியவிடத்து, இன்னதென்றறிய

வாராத சூனியப் பொருள்போலத்தோன்றி, உயிரின் அகண்ட அறிவின்கண் நீங்காது நிலைபெறும் பேரறிவாய்த் தோன்றுவான்.

குறிப்பு:—குணதத்துவ மூலமாகிய பிரகிருதியைக் கடந்தவன் என்பார் 'நிர்க்குணன்' என்றும், ஆணவம், வினை முதலியவற்றின் சார்புடைய அசுத்தமாயையைக் கடந்தவன் என்பார் 'நின்மலன்' என்றும், சுத்த தத்துவங் களையுங் கடந்தவனென்பார் 'நித்தியானந்தன்' என்றும், உயிராகிய தனக்குப் பரமானவர் என்பார் 'தற்பரம்' என்றும், சிவஞானத்தாலேயே அறியப்படுதலின் 'தனி' யென்றும் உரைத்தார். அற்புதம் = சூனியம். ஆறு = நீங்கா. 'வானே' என்பதில் ஏகாரம் அசை. முதல் = முதலிய வற்றை.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்றாச்
சட்ட இனியுளது சத்தேகாண் — சுட்டி
உணர்ந்தநீ சத்தல்லை உண்மையைத் தைவரப்
புணர்ந்ததனும் போய்விட்டுப் போம்.

உரை:—சுட்டியறியப்படும் பொருளை அசத்தென்று சுட்டியறிந்து கழிக்கவே, முடிவாய்ச் செப்பமாயுள்ளது சத்தாகிய சிவமே யென்றறிக. சுட்டுப் பொருளோடு சார்ந்தறிந்து வந்த நீ, அதனின் வேறான சத்தாக மாட்டாய். நீ சத்துப்பொருளுக்கு அடிமையாய் அதனைச் சேர்ந்தால் சுட்டுணர்வு உன்னை விட்டொழியும்.

குறிப்பு:—சத்துப் பொருள் அசத்தின் வேறென்று மேற் காட்டினமையால், அசத்தினொடு சார்ந்து சுட்டுணர் வுடைய நீ சத்தாகமாட்டாய் என்றவாறு. சட்ட = செப்ப மாக. இனி = முடிவில் தைவரம் = அடிமை. உண்மையை = உண்மைக்கு, சத்துப் பொருட்கு. பொய் = சுட்டுணர்ச்சி.

**கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை யான்மாவில் ஆய்ந்துணரப்—பண்டணைந்த
ஊனத்தைத் தான்விடுமா(று) உத்தமனின் ஒண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றன்.**

உரை:—சுட்டறிவாற் கண்ட பொருள் ஒவ்வொன்றையும் இது சத்தன்று இது சத்தன்று எனக் கழித்து உயிரறிவின்கண்ணே சுட்டுணர்வில்லாது நின்ற தேவனை ஆராய்ந்து அத்துவிதமாய் அவனைப் பாவித்துணர்ந்தால், அப்பாவனையில் விளங்கித்தோன்று முதல்வனால், சுட்டுணர்வு ஒழியுமுறை, கருட தியானத்தால் விடம் நீங்குவதுபோலாகுமென்க.

குறிப்பு:—அண்டன் = தேவன், கடவுள். உணர = அத்துவித பாவனையால் உணர. சானம் = தியானம். ஊனம் = சுட்டுணர்வு.

## மூன்றும் அதிகரணம்

இனி, இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது.

உரை:—பதியை ஞானக்கண்ணால் நாடிய பின்னர் அவ்விடத்து முத்தி பஞ்சாக்கரமாய பிரணவத்தை அதன் பொருள் அறிவின் விளங்கும்படி அறிவிலே கணிக்க என்றவாறு.

ஏது.—இவ் வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும், அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல, நோக்கிற்றை நோக்கி நிற்றதாகலின், அதனை நீக்குதற்கு எனக்கொள்க.

உரை:—வேப்பங் கனியைத் தின்று சுவைகண்ட புழு, கரும்பைத் தின்றபோதும், பழக்கத்தினாலே முன் தின்ற வேம்பை நோக்கி நிற்குமாறுபோல, பக்குவமடைந்த ஆன்மாக்களுக்குச் சிவஞானம் விளங்கிய காலையும், வாசனை

வயத்தால் பண்டைச் சிற்றுணர்வை நோக்கி நிற்கு மாதலின், அவ்வாசனையை நீக்குவதற்கு என்க.

அஞ்செழுத்தால் உள்ளம் அரன்உடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித்(து) இதயத்தில்—அஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்ஓமங் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனும் சேடனும் அங்கு.

உரை:—உயிர் சிவனுக்கு உடைமைப்பொருளாதலை ஐந்தெழுத்து ஓது முறையினால் அறிந்து இதயத்திலே அஞ்செழுத்தினாலமைந்த முதல்வன் திருமேனியில் (கொல்லாமை, பொறியடக்கம், பொறுமை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு) என்னும் எண்மலர் தூவி வழிபட்டு அஞ்செழுத்தினால், குண்டலிக்தானமாகிய உந்தியிலே ஞான அனலை யெழுப்பி, அதன்கண் ஓமஞ்செய்து, புருவநடுவில் (அஞ்செழுத்தில் சிகர யகர வகரங்கள் நிற்குமுறையை) நினைப்பின், இறைவன் விளங்கித் தோன்றுவன். உயிரும் அவனுக்கு அடிமையாய் விளங்குவன்.

குறிப்பு:—கோதண்டம் = இமை, அஃதாவது புருவ நடு. சானிக்கில் = தியானிக்கில்.

இந்துவிற் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணும்—உந்தவே
காட்டாக்கிற் றோன்றக் கனல்சேர் இரும்பென்ன
ஆள்தானும் ஆம் ஏ(து) அஞ்செழுத்து.

உரை:—சாதாரணமாய்க் காணப்படாத இராகு கேதுக் களைக் கிரகண காலத்தில், சந்திரனிலும் சூரியனிலுங் கண்டாற்போல, உள்ளத்தின்கண் அஞ்செழுத்து முறையில் வைத்துச் சிந்தித்தால், கடைந்தகாலை பிறகிற்றோன்றும் நெருப்புபோல, சிவன்தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கிநிற்பன். அப்பொழுது உயிர்தானும் நெருப்பைச்

சேர்ந்த இரும்புபோலப் பெருமானுக்கு அடிமையாகும். ஆதலால் திருவஞ்செழுத்தை விதிப்படி எண்ணுக.

குறிப்பு:—கேது கூர்மமே விளங்கக் கிடந்தது இந் துவையும் பானுவையுங் கூறினமையால். உந்தவே= கடையவே. காட்டாக்கி= காட்டத்தின் அக்கினி.

மண்முதல் நாள(ம்) மலர்வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும்—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்.

உரைநடை:—நண்ணில், மண்முதல், நாளம், மலர், வித்தை, கலாரூபம், ஈசர், சதாசிவமும் கலையுருவாம். சத்திநாதம் அதன் கண்ணும். அச்சிவன்தாள், அதில் நிலையாம் நேர்.

உரை:—தியானிக்குமிடத்து, மண் முதல் பிரகிருதி வரையுள்ள தத்துவங்கள் உந்தியில் நின்று மேலெழுந்த தண்டு. வித்தியாதத்துவமேழும் சுத்த வித்தையும் எட்டி தழ்த் தாமரைப்பூ. அதன் கேசரங்கள் அவற்றிற்கு மேலா கக் கருதப்பட்ட ஈசுர தத்துவமும் சதாசிவ தத்துவமும். சத்திதத்துவம், தாமரைப் பொகுட்டு. சிவதத்துவம், அப் பொகுட்டிலுள்ள வித்துவடிவமாம். அம் முப்பத்தாறு தத்துவங்களாலாகிய இருக்கையிலே, அச்சிவனது சத்தி நிலைபெறும். அதனை அறிந்து வணங்குக.

குறிப்பு:—கேசரம்= தாது. பொகுட்டு= கொட்டை. கலை, அறுபத்து நான்காதலின், கேசரம் அறுபத்து நான்கிற்குவமையாம. கலை யுருவு= கலைக்குள் உருவு, பொகுட்டு. சக்திக்கு மேல் சிவமென்பது குறிப்பா லுணர்க.

---

## பத்தாஞ் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

இ - ள் :—பாச க்ஷயம் பண்ணுமாறுணர்த்துதல் நுதலிற்று.

உரை :—உயிர்கள் கட்டுற்ற காலத்திலே, இறைவன் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்து நின்ற அம்முறையே, உயிர் முதல்வனோடு ஒற்றித்து நின்று தானென வேறு காணப்படுமாறில்லாமல், இறைவன் கட்டளையில் வழுவாது நிற்கவே, ஆணவமலம், மாயை என்பவற்றோடு, கொடிய வினையும் இல்லையாய் ஒழியும்.

கருத்து :—(முற்றிலும்) பாசநீக்கம் பண்ணும் வகை யுணர்த்துவதைக் கருதியது. இச் சூத்திரம் திருவருட் பேற்றினை யுணர்த்துவது.

### முதல் அதிகரணம்

ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்க என்றது.

உரை :—சூத்திரப் பொழிப்பால் விளங்கும்.

ஏது.—அவ்வாறு நிற்கவே யான் எனது என்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையும் ஆகலான்.

உரை :—அங்ஙனம் ஒற்றுமைப்பட்டு நிற்றலால், யானும் எனதும், எனப் பகுத்துணருந் திரிபுணர்ச்சிக்குக் காரணமாய் மலம் நீங்கி அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறும் ஆதலின்.

நான்அவன்என் றெண்ணினர்க்கு நாடும்உளம் உண்டாதல்
தான்எனஒன் றின்றியே தான்அதுவாய்—நானெனவோன்(று)
இல்லென்று தானே யெனும்அவரைத் தன்னடிவைத்(து)
இல்லென்று தானும் இறை.

உரை :—யானென்றும் அவனென்றும் பகுத்துணர் வார்க்கு நானே என்பார்க்குப் போல, உயிருணர்வு முனைத்துத் தோன்றுமாதலின், தான் என்று ஒரு முதல் காணப் படுமாறின்றித் தான் இறை யுணர்வு மயமாய், நான் என்பதொன்றில்லை, எல்லாம் இறைவனே யென்று தெளிவடைவாரை இறைவன் தனது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்குமாறு வைத்து அவர்களுக்குத் தானே முழுவதுமாய் விளங்குவன்.

குறிப்பு :—எண்ணினர்க்கும், என்றமையால், நானே என நிற்பார்க்கும் என்பது வருவிக்கப்பட்டது. உளம்= உயிருணர்வு. அது=பரம்பொருள். இறுதியடியில் இல் லென்று= அடங்கி நிற்ப, 'இறைதானும்' என மாறுக.

## இரண்டாம் அதிகரணம்

இனி, இறைபணி வழுவாது நிற்க என்றது.

உரை :—இறைவன் அருட் கட்டளையின்கண், தவறாது சலிப்பின்றி நிலை பெறுக என்றவாறு.

ஏது :—அவன்அருளால் அல்லது ஒன்றையுஞ் செய்யான், ஆகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான்.

உரை :—அவன் அருள்வழிநின்றே செய்வனவெல் லாம் உயிர் செய்யுமாறால், திரிபுணர்ச்சிக்குக் காரணமாகிய மாயாகாரியங்களும் வினையும் ஏகனாகி நிற்பதற்குத் தடையாய் வந்து தாக்கமாட்டாவாதலின்.

குறிப்பு :—அஞ்ஞானமும் கன்மமும், என விரிக்க. ஏகனாகி 'நிற்பதால்,' ஆணவ மலமும, பணியின் வழுவாது நிற்பதால், மாயை கன்மங்களும் தாக்கா என்றனர்.

நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாமல்ல நாமும் அரன்உடைமை—யாமென்னில்
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்(கு) இல்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

உரை :—இந்திரியங்களாகிய பொறிகள் மாயாகாரிய மாவனே யன்றி, யாம் அல்ல. அவை முதல்வனால் தொழிற் படுவனவன்றி, நமது வசமாயுள்ளன அல்ல. அவை தொழிற்படுதற்கு வாயிலாகிய விடயங்களும் மாயா காரியமாவனவன்றி நாமல்ல. அவ்விடயங்கள் செயற் படுதலும் முதல்வனலன்றி நம் வசமாக அன்று. அவை போல நாமும் சிவனது உடைமைப்பொருளே. நாம் அறி வதும் செய்வதும் இறைவன் அருள் விளக்கத்தினலேயாம் என்று உணர்ந்தால், இவ்வடிமைத் திறமுடையார் எவ் வுடம்பில் நின்று எவ்வினைகளைச் செய்தாலும் வினையா லாகிய பந்தம் இல்லை. பிராரத்த வினையும், இறைவன் திரு முன் உடல் நியதியாகக் கழியும். (எதிர் வினையாகிய ஆகாமியத்திற்கு வித்தாகமாட்டாது).

குறிப்பு :—நம் வழியின் = நமது வசத்தில். வழிநாம் அல்ல = வாயில் நாம் அல்ல. வாயிலென்றது விடயங்களை. 'நம் வழியினல்ல' என்பது, இந்திரியத்திற்கும் 'வழி' என்பதற்கும் நடுநிலையாக நின்றமையின், இருபாலுங் கொள்ளப்பட்டது. பணியார் = பணியுடையார், அடிமைத் திறமுடையார். முற்செய்வினை = பிராரத்தம். தருவான் = ஊட்டுவிக்கு முதல்வன். முன் = சந்நிதி.

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்ஆதல்
சார்ந்தாரைக் காத்தும் சலம்இலனய்ச்—சார்ந்தடியார்
தாந்தானய்ச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.

உரை :—அடைக்கல மெனச் சார்ந்தவரை அவர்க்கு வரும் இடர்களை நீக்கிக் காத்தல் தலைமைக் குணமுடை

யவர் கடன் ஆதலால், முதல்வன் தன்னை யடைந்தவர்களைச் சிறப்பாகப் பாதுகாப்பானாகியும், அதுபற்றி ஒருபாற் சார்வு இல்லாதானாய், தன்னைச் சார்ந்து தன் அடித் தொழில் செய்வாரைத் தன்போல, வரும்வினைத் தொடர் பிலராக்கி, பிறர்க்கு அவரவர் வினையினை விளைத்தலால், நுணுகி வந்து பொருந்தும் பிராரத்தவினை, ஆகாமியஞ் சாராமை போலவே உயிர்ச்சார்பின்றி ஒழியும்.

குறிப்பு:—சலம்=பட்சபாதம். தங்கள் வினை = தத்தம் ஆகாமிய வினை. ஆய்ந்து = நுணுகி. ஆர் = பொருந்து. முற் செய்வினை = பிராரத்தம்.

> இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
> முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
> மாயையுடன் நில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
> ஆயஅத னால்உணரும் அச்சு.

உரை:—பெருங்காயம் வைத்த பாத்திரத்தின் காய வாசனை மெலிதாய்த் தோன்றுதல்போல, சிவஞானியிடம், வாசனையால், தன்னுணர்வு தோன்றிப் பிராரத்தமும் அதற்கு வாயிலாகிய மாயாகாரியங்களும் வந்து மூளுமானாலும், (பிறர்க்கு) அப்பிராரத்தத்தோடு கூடி வருவதாய) ஆகாமியம் தனக்கு வாயிலாகிய மாயா காரியங்களோடு கெட்டொழியும். (மேற் பிறவிக்கு வித்தாகாது). ஞானியாய அவன் சிவமாய சத்தேயாய் நிற்றலால், (தன்னைப் பிறழவிடாத) அச்சாகிய சத்தையே அறிந்து நிற்பவன்.

குறிப்பு:—முன்செய்வினை = பிராரத்தம். பின் செய்வினை = ஆகாமியம். மாயையுடன் நில்லாது = மாயை யுடனாய் ஒழியும்: எடுத்த உடம்போடு நீங்கும். மெய்ப் பொருள் = சத்து. அச்சு = வார்ப்பு: பதிந்தபடியே இருப்பது. அடையாளம், உயிரெனவுங் கொள்ளுப. உயிர்க் குயிராகிய கடவுளை அச்சென்றார்.

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும்—எண்ணி
அரனடி ஓர்பவர் ஐம்புலனிற் சென்றும்
அவர்திறன் நீங்கார் அதற்கு.

உரை:—மிகுந்த தீயினால் வேவாத அனற்கட்டுடைய நல்ல மந்திர வலியுடையோரைப்போலவும், செவ்வை யாகச் செலுத்துதல் அறிந்து குதிரைமேலேறி அதன் வேகத்தாற் கீழே விழாது அதனைச் செலுத்துவோர் போலவும், ஐம்புலனில் அகப்படாமைக்குரிய சூழ்ச்சி அறிந்து முதல்வன் திருவடியை உணரவல்லார், பிராரத்தத் தால், ஐவகைவிடயங்களிற் சென்றாலும், தமது அருள் திறமையின் நீங்கிக் (கட்டுப்படமாட்டார்).

குறிப்பு:—தவர் = மந்திரவலியுடையர். பாகர் = செலுத்துவோர். அமர = பொருந்த. மா = குதிரை.

சதசத்தாம் மெய்கண்டான் சத்தருளிற் காணின்
இதமித்தல் பாசத்தில் இன்றிக்—கதமிக்(கு)
எரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்
அருகணையார் சத்தணைவார் ஆங்கு.

உரை:—தான் சதசத்தென உண்மை யுணர்ந்தவன் சத்தாகிய முதல்வனது அருள்வழியே நின்று எவற்றையும் பார்ப்பின், பாசமாகிய அசத்து அவனுக்கு இன்பஞ் செய்யாமையால், மிக்கமிகுந்து எரிகின்ற தீமுன் இருள் போல சத்தாகிய திருவருள்முன், அசத்து தனது வலி மடங்கிவிடு மாதலின், சத்தை அணைந்தவர் அவ்விடத்தே அசத்தைச் சாரமாட்டார்.

குறிப்பு:—கதம் = விரைவு; வேகம் என்றலு முண்டு.

---

## பதினோராஞ் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

கருத்து:—பரமேசுரனது ஸ்ரீபாதங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—காட்டக் காணும் இயல்புடைய கண்ணுக்கு உருவத்தைக் காட்டித் தானும் காண்கின்ற உயிர்போல, உயிர் பொருள்களை அறியும்படி முதல்வன் அதனோடு இயைந்துநின்று அறிவித்து அறிந்து வருதலால், அவ் உபகாரத்தை மறவாது சடைப்பிடித்துச் செய்யும் அன்பாலே, முதல்வன் திருவடியாகிய சிவானந்த அனுபவத்தை எய்தும்.

குறிப்பு:—கண்டு காட்டலின் என்பதைக் காட்டிக் காணலின் எனக்கொள்க. அயரா = மறவாத. உள்ளத்தை = உள்ளத்துக்கு, உயிர்க்கு.

கருத்து:—பரமசிவனால் விளையுஞ் சிவானந்தானுபவங் குறித்தல் கருதியது.

### முதல் அதிகரணம்

ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை யுணரும் என்றது.

உரை:—முதல்வனும்; உயிர்களால் உணரப்படும் பொருள்களை உடன்நின்று அறிவன்.

எது.—இவ்வான்மாக்கள் அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடயியா வாகலான்.

உரை:—(விளக்கொளி கண்ணொளியொடு கலந்து கண்ணொளியொடு உருவத்தினுங் கலந்தாலன்றிக் கண் உருவத்தைக் காணாமைபோல) முதல்வன் அறிவு உயிரொடு

விரவிநின்று உயிரறிவொடுகூடச் சென்று பொருளினுங் கலந்தாலன்றி ஒன்றையும் உயிர் அறியாதாகலான்.

ஐந்தையும் ஒக்க உணரா(து) அவற்றுணர்வ(து)
ஐந்தும்போல் நின்றுணரும் ஆகலான்—ஐந்திணையும்
ஒன்றொன்றப் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகும்
ஒன்றொன்றப் பார்க்கும் உணர்ந்து.

உரை நடை:—உள்ளம் அவற்றுள் ஐந்தும்போல் நின்றுணரும் ஆகலான், ஐந்தையும் ஒக்க உணராது; ஐந்தினையும் ஒவ்வொன்றாய்ப் பார்த்துணர்வது. ஒன்று எவ்வுலகும் ஒன்றா உணர்ந்து பார்க்கும்.

உரை:—ஆன்மாவானது பொருள்களை அறியுங்கால் ஐம்பொறிபோல அதுவதுவாய்ச் செறிந்து அறியுந் தன்மைத்தாதலான், ஐம்புலன்களையும் ஒருங்கே உணரமாட்டாது. அவ்வைந்தினையும் ஒவ்வொன்றாக அறிந்தனுபவிக்கும். ஆனால், என்றும் ஒரு பெற்றித்தாய சிவம், எல்லா உயிர்களுடைய எல்லாப் பொருள்களையும் பொதுவகையான் ஒருங்கே உணர்ந்து அவ்வுயிர்களுடன் நின்று சிறப்புவகையாக அறியும்.

ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணராப்
போகமாய்த் தானவிளைந்த போற்றினான்—ஏகமாய்
உள்ளத்தின் கண்ஆனான் உள்தவார் உள்கிற்றை
உள்ளத்தால் காணுமோ உற்று.

உரை:—(உயிரானது) ஒன்றாகிய முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவன் இரண்டு திருவடிகளையும் அறியவே அம்முதல்வன் பரபோகமாய் விளைகின்ற பொலிவுடையனாதலாலும் உயிரறிவின்கண்ணே ஒற்றுமைப் பட்டுப் பொருந்தினவனாதலாலும் கருதுவார் கருதுகின்ற தன்னை அவரறிவோடு கூடிநின்று அறியமாட்டானோ? (அறிவான்).

குறிப்பு:—உள்கிற்றை = கருதிய முதல்வனை. உள்ளத்தால் = உயிரறிவோடுநின்று. உற்று = பொருந்தி

## இரண்டாம் அதிகரணம்

இனிப் பக்தியினுன் மறவாதேத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது.

உரை:—வெளிப்படை.

ஏது.—அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.

உரை:—அவன் வேறுநில்லாது செய்வோர் செய்வனவற்றை அறிந்து செய்திக்குத்தக்க பயனைப் பெறுவித்தலால்.

அருக்கன்நேர் நிற்பினும் அல்இருளே காணார்க்(கு)
இருட்கண்ணே பாசத்தார்க்(கு) ஈசன்—அருட்கண்ணால்
பாசத்தை நீக்கும் பகல்அலர்த்துந் தாமரைபோல்
நேசத்தில் தன்உணர்ந்தார் நேர்.

உரை:—கதிரவன் எல்லார்க்கும் ஒப்ப விளங்கினாலும், காட்சியில்லார்க்கு இரவிலுள்ள இருட்டுப்போல்வதாம். அதுபோல, பாசமுடையவர்களுக்கு இறைவன் இருளிடத்தனுவான். (மலரும் பருவத்துத்) தாமரையைக் கதிரவன் அலர்த்துவதுபோல, பேரன்பால் தன்னை உணர்வார்க்கு நேரான தனது திருவருட்பார்வையால இறைவன் பாசத்தை நீக்குவன். ஆதலால், சீவன்முத்தரும் பிறரும் ஒருதன்மையரல்லர்.

குறிப்பு:—அல் = இரவு. காணார்க்கு அல்லிருள் என மாறுக. இருட்கண் = இருளிடம் பகல் = கதிரவன். நேர் என்பதை 'அருட்கண்ணால்' என்பதனோடு முடிக்க.

மன்னும் இருளை மதிதுரந்தவா(று) அன்பின்
மன்னும் அரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான்.

உரை:— (இரவில்) நிலைபெறும் இருளைப் பிறையானது நாள்தோறும் சிறிது சிறிதாக ஓட்டுகிறதுபோல, உயிர்கள்பாற் பேரன்புடைய முதல்வன், உயிர்களின் பாசத்தைச் சிறிது சிறிதாக நீக்கிக் காந்தம் இரும்பைத் தன்பால் வலிந்து இழுத்துத் தன் வசமாக்கிக்கொள்ளுதல் போல, உயிரின் மலம் நீங்க நீங்கத் தனது அருட்சத்தியைப் பதிவித்து உயிரைத் தன்கண் வலித்துக் கொண்டு தன்வசமாக்கிவருஞ் செய்கையில் முதல்வன் சலிப்பில்லாதவன். (தன் சந்நிதிமாத்திரையிற் செய்தலின்), விகாரப்படுவானல்லன்.

குறிப்பு:—அன்பின் மன்னும் = விருப்பத்தில் நிலைபெறும்.

நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா
நசித்திலதேல் ஒன்றாவ தில்லை—நசிந்துமலம்
அப்பணைந்த உப்பின் உளம்அணைந்து சேடமாம்
கப்பின்றும் ஈசன் கழல்.

உரை:—உயிர்கள் ஒரு பொருளாகிய இறைவனிற் கலக்குங்காலை, கெட்டொழியுமாயின், அவை இறைவனை ஒன்றமாட்டா. கெடுதலில்லாதிருப்பின், உயிரும் இறைவனும் இருவேறு பொருளாய் நிற்றலாமேயன்றி ஒன்றாவதில்லை. மலம் கெடப்பெற்று, நீரிற்கரைந்த உப்புப்போல உயிர் இறைவனிற் கலந்து அவனுக்கு அடிமையாம். பின் கவர்ச்சியாகிய மீளுதல் இல்லை.

குறிப்பு:—கப்பு = கவர்ச்சி, பிரிவு. சேடம் = சிறப்பு வகையால் அடிமையாதல்.

பொன்வாள்முன் கோண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே எங்குமாந் தன்மைபோல்—முன்வாள்
மலத்தின் மறைந்(து) உள்ள(ம்) மற்றுலகை உண்ணும்
மலத்(து) இரித்துச் செல்லும் வரத்து.

**உரை:**—கதிரவனொளி, தன் முன்னுள்ள மேக படலத்துட் புகுந்து மறைந்து, அம்மேக படலஞ் சிறிது நீங்கியவழி ஒரு புடையாய்த் தோன்றி நிலவிப் பின் மேக படலம் முழுவதும் நீங்கியபோது, எங்கும் அவ்வொளி பரவிய தன்மைபோல, உயிரும், தனது அறிவு மலத்திலே மறையப்பெற்றுக் கேவல நிலையிற் கிடந்து, பின் கருவிக ளோடு கூடியகாலை ஒருபுடை அறிவு விளங்கப்பெற்று உலகப் பொருள்களை நுகர்ந்து, பின் முதல்வனருளால் மலத்தைப்பற்றறக் களைந்து வியாபக அறிவுடன் அவனது திருவடியை அணையும்.

**குறிப்பு:**—கொண்மூ = மேகம். ஒடுங்கி = ஒருபுடை விளங்கி. வாள் = ஒளி; அறிவு. வாரத்து = வரமாகிய திரு வடிக்கு.

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மால்அற நேய(ம்) மலிந்தவர் வேடமு(ம்)
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே.

**உரை:**—அசிந்திதனைப் நின்ற பதியைச் சிந்திதனைக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று. அசிந்திதன் = சிந்தைக் கெட்டாதவன். சிந்திதன் = சிந்தைக் கெட்டுபவன்.

**உரை:**—சீவன்முத்தன் (உடம்பில் வீடெய்தியவன்) செந்தாமரை மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது வலிய திருவடிகளை அணையவொட்டாது (மறத்தலைச் செய் விக்கும்) மும்மல அழுக்கை ஞானநீரால் கழுவி, மறவா அன்பு செய்யும் அறிஞரோடு கலந்து மலமயக்கம் நீங்க, அன்புமிக்க அவரது திருவேடத்தையும் சிவன்கோயிலையும் முதல்வனெனவே கண்டு வழிபடுவன்.

**கருத்து:**—சீவன்முத்தர் உலகநிலை கூறியது.

## முதல் அதிகரணம்

**ஈண்டு ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைக என்றது.**

*உரை:—மெய்யுணர்ச்சிக்குத் தடையாக வரும் மூம் மலங்களை நீக்குக என்றவாறு.*

*ஏது.*—**அவைதாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்தும் ஆகலான்.**

*உரை:—அவை மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்தி, மாயா வுணர்வை மேற்படுத்தும் ஆதலால்*

*குறிப்பு:—அஞ்ஞானம் = நிலையாதனவற்றையறியுந் திரிபுணர்ச்சி உணர்தல் = உணர்விற்கேதுவாதல்.*

புண்ணிய பாவம் பொருநதும்இச் கான்மியமும்
மண்முதல் மாயைகான் மாயையும்—கண்ணிய
அஞ்ஞானங் காட்டும்இவ் ஆணவமும் இம்மூன்று(ம்)
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

*உரை:—நல்வினை தீவினைகளுக்குப் பயனையும் காரண மாயும் பொருந்துகின்ற கன்மமலமும், நிலமுதல் அசுத்த மாயை முடிவாகத் தோன்றுகின்ற மாயாமலமும், தற் போதத்திற் கேதுவாய் நிற்கும் ஆணவமும் ஆகிய இம்மூன்று மலங்களும் மெய்யுணர்வுடைய உனக்குத் தடையாமாகலின், அவைகளைக் களைக.*

*குறிப்பு:—விடுவென்றது, சிவானுபவ நிலையில் உறைத்துநிற்பதால், விடுக என்றவாறு.*

## இரண்டாம் அதிகரணம்

**இனிச் சிவபத்தரோடிணங்குக என்றது.**

*உரை:—சிவபத்தர் = அணைந்தோராகிய சீவன்முத்தர்.*

*ஏது.*—**அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான்.**

*உரை:—ஏனையோர் உலகப் பொருளுணர்ச்சியாய திரிபுணர்ச்சிக்குக் காரணராவாராகலின்.*

குறிப்பு:—திருவாசகப் போற்றித் திருவகவலுள் அதனைக் காண்க.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தம்திறத்துச் சேர்வை—அறப்பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரன்உணர்வி னால்உணரும்
மெய்த்தவரை மேவா வினை.

உரை:—சமது மெய்யியல்பை மறக்கச் செய்து, மலங்களாலாய பிறவியில் வீழ்த்தும் அன்பிலாரொடு பழகிய பழக்கம் அறுமாறு, அன்பர் கூட்டத்திற் பெருவிருப்புடையராய், அதன் சார்பாக விளங்குஞ் சிவஞானத்தால் முதல்வனை உணரும் மெய்த் தவத்தினரைப் பிராரத்த வினைகள் பொருந்தமாட்டா.

குறிப்பு:—மலம்=மலத்தானாய பிறவி. சிறப்பு= அன்பு. 'அறப்பித்துப் பத்தர் இனத்தாய்' அற பத்தர் இனத்துப் பித்தாய் எனக் கொள்க.

## மூன்றும் அதிகரணம்

இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக என்றது.

உரை:—வெளிப்படை.

ஏது.—அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய்நின்றே, அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

உரை:—முதல்வன், இவ்விரண்டிடங்களின் மாத்திரமே (தயிரின் நெய்போல) விளங்கி நின்று, ஏனைய இடங்களிற் பாலில் நெய்போல வெளிப்படாது நிற்றலால்.

தன்உணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்உணரத் தன்னுள் இருத்தலால்—தன்னுணரு(ம்)
நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல்
பாசத்தார்க் கின்றும் பதி.

உரை:—பரம்பொருள் தன்னை உலகினர் அறிதற் பொருட்டுத் தனது திருவேடத்தை அடியார்களுக்குக் கொடுத்து, அவர்கள் தன்னைச் சிவோகம்பாவனையால் உணரவே, தன் வியாபகத்துள் அவர்களை இருத்தி வைப்பதால், தன்னை அகண்டமாக உணரும் பேரன்பரிடத்தே தயிரில் நெய்போல விளங்குவான், பாசமுடையாரிடத்தே முதல்வன் விளங்காது நிற்பன்.

குறிப்பு:—இருத்தல் = இருத்துதல். இன்றும் = விளங்கான்.

கண்டதொரு மந்திரத்தால் காட்டத்தில் அங்கிவே(று)
உண்டல்போல் நின்றங்கு உளதாமால்—கண்டஉருத்
தான்அதுவாய் அன்றாகும் தானதுவாய்த் தோன்றதே
தான்அதுவாய்க் காணுந் தவர்க்கு

உரை நடை:—காட்டத்தில் அங்கி வேறுண்டல்போல், கண்ட உருத் தான் அதுவாய் அன்று ஆகும். கண்டது ஒரு மந்திரத்தால் நின்று அங்கு உளது ஆம் அது தான் ஆய்க்காணும் தவர்க்கு அது தானாய்த் தோன்றதே?

உரை:—விறகினிடத்தே கடைந்தகாலைத் தோன்றியும் அல்லாக்கால் தோன்றாதும் விறகிற்கு வேறாயுள்ள அக்கினிபோல, காணப்பட்ட திருவடிவத்தின்கட் கலந்து அதுவாகியும் அதுவல்லாமல் வேறாயும் நிற்கும் முதல்வன், அறியப்பட்டதொரு மந்திர உறைப்பால் விளங்கித் தோன்றுவன். (அஃதில்வழி விளங்கான்) அவ்வடிவையே அவனாகக் காணும் மெய்த்தவமுடையார்க்கு (மந்திர முதலியவற்றின் உதவியில்லாமலே) அவ்வண்ணமே அவன் விளங்கித் தோன்றுவானல்லனோ.?

## நான்காம் அதிகரணம்

இனி, இவ்விடங்களின் வழிபடுக என்றது.

உரை:—மேற்கூறிய இடங்களில் இறைவனை வணங்குக என்றவாறு.

**எது.—நரம்பு நாடி முதலானவற்றைத் தான்அதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனும் ஆகலான்.**

உரை.—உடம்புள் நரம்பு, நாடி முதலிய கருவிகளில் அது அதுவாய் நிற்கும் உயிர் அவையாகாமல், தன்னின் வேறாய் நிற்றல்போல முதல்வனும் கலப்பால் எப்பொருளு மாகியும் பொருளுண்மையால், அவை அல்லனாகியும் நிற்றலால்.

குறிப்பு:—பொருள்களின் வடிவாய்க் காணுமிடத்து அவன் அவையாகியும், பொருள்களில் வேறாய்க் காணு மிடத்து இவ்விடங்களின் வேறாகியும் முதல்வன் விளங்குதலின், இருவகை வழிபாடுங் குறித்தவாறாயிற்று.

**அதுஇது என்ற(து) அதுஅல்லான் கண்டார்க்(கு)**
**அதுஇது என்றதையும் அல்லான்—போதுவதனில்**
**அத்துவிதம் ஆதல் அகண்டமுந் தைவமே**
**அத்துவிதி அன்பில் தொழு.**

உரை நடை:—கண்டார்க்கு, என்பதை முதலிற் கொள்க.

உரை:—முதல்வன் நிற்குநிலை யறியப்பெற்றவர்கட்கு அது இது என்ற வேறுபாட்டு நிலையும், அதுஎன்ற வேறு பாடில்லா நிலையும், அதுவாகிய இது என்ற குணகுணி நிலையும் உடையன் அல்லாமல், அறிவொளிபோல் அம் மூன்றற்கும் பொதுவாய் அத்துவிதநிலையில் நிற்றலால், எல்லாப் பொருளும் அவன் வடிவமேயாயினும், அவற் றுள்ளும் அன்பு மிகுதியாய் விளையுமிடத்தே, அத்துவித முணர்ந்தோய், நீ வழிபடுக என்றவாறு.

குறிப்பு:—தைவம்=தேவனது உடைமை. இங்கே வடிவு குறித்து நின்றது. இதனுள் சிவலிங்க வணக்கங் கூறப்பட்டதென்ப.

**வினையால் அசத்து விளைதலான் ஞானம்**
**வினைதீரின் அன்றி விளையா—வினைதீர**
**ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்**
**ஆனத்தால் அன்பில் தொழு.**

உரை:—பிராரத்தவினை தாக்குமளவும், நிலையிலாப் பொருளுணர்ச்சி உளதாமாதலால், பிராரத்த வாசனை நீங்கினல் அன்றி மெய்யுணர்வு மேற்படாது. அவ்வாசனை கழிதற்பொருட்டு மெய்யுணர்வுடையாரை நாடி வழி படவே, மெய்யுணர்வு மேம்படும். ஆகையால், அவரை அன்பால் வழிபடுக என்றவாறு.

குறிப்பு:—விளையா = விளையாது. ஞானம் = ஞான முடையோர். ஆனதால் - ஆனத்தால் என விரிந்தது. இதனுள் அடியார் வணக்கங் கூறப்பட்டதென்ப.

தன்னை அறிவித்துத் தான்தானச் செய்தானைப்
பின்னை மறந்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

உரை:—தன்னுண்மையை அறியமாட்டாது குருடாயக்கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அதனைத் தெரிவித்து, அவ்வுயிரைத் தான் ஆகும் வண்ணஞ் செய்தருளியவனை அவ்வுபகாரத்தின் பின்னர் மறத்தல் (பரிகாரமில்லாத) குற்றமாவதோடு, முதல்வன் அப்படி உயிரைத் தானகவே செய்தாலும், முதல்வனுதவியை இன்றியமையாத அடிமையாகிய உயிர் அவனுக்கு எக்காலத்தும் அடிமையே யாதலால், அப்பெரியோனை வழிபடுதலே உயிர்க்கு வலிமையளிப்பதாகும்.

குறிப்பு:—மானே = மகானே. பெரியோனே = பெரியோனையே - இரண்டாம்வேற்றுமைத் தொகை. இதனுட் குருவணக்கம் கூறப்பட்டதென்பர்.

சிவமென்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவம்இன்றாம் கண்வா சகத்திற்—சிவம் உண்டாம்
ஒன்றும் இரண்டும் மலத்தார்க்(கு) இங்(கு) ஒண்தருவால்
இன்(று) இந்நூல் மும்மை மலர்க்கு.

**உரை:**—சீவன் என்ற இயல்பு நீங்கிச் சிவம் என்றோதப் படுஞ் சித்தாந்தத்தை யுடையவனே! ஒரு மலம் இரு மலம் உடையார்க்கு, முறையே அறிவின்கண் நின்று நேரே திருவருட் பார்வையால் நோக்குவதாலும், நேரே தேவவடிவோடு வந்து பார்த்தலாலும் சொல்லுதலாலும், பிறவிக் கேதுவாய பசுத்துவம் நீங்கும்; சிவத்துவம் உண்டாம். மூன்று மலமுடையார்க்கு இவ்வுலகில் அனுபவமுடைய தேசிகரால், அவை நிகழும். இந்நூல் மும்மலமுடைய சகலர்க்கே பக்குவமுறும் இக்காலத்து உரியதாகும்.

**குறிப்பு:**—அந்தநர = மேலான முடியுடையவனே. பவம் = பிறவி. இங்கே, பிறவிக்கேதுவாய பாசம். சிவம் = சிவத்துவம். இன்று = பக்குவகாலத்து. ஒண் = அனுபவமுடைய.

---

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோதச் சூர்ணிக்கொத்து

---

முதற்சூத்திரத்தில்-சகம் பிறப்புஇருப்பு இறப்பாகிய முத்தொழிலை
யுடையது. (க)
அது அரனாலே யுடையது. (உ)
மற்றிருவரும் முத்தொழிற்படுவார்கள். (ங)

உ - ல் அரன் உயிர்களி லிரண்டற நிற்பன். (க)
உயிர்களுக்குக் கன்ம பலனை அரனே கொடுப்பன். (உ)
உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும். (ங)
அரன் சருவ வியாபகன். (ச)

ங - ல் இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே
அறி உயிருண்டு. (க)
எனதுடலென்ற பொருட் பிறிதின்கிழமையாகச்
சொல்லுகையினாலே உடற்கு வேறாயுயிருண்டு. (உ)
ஐந்தையு மொருவனே யறிதலி னெவ்வொன்றை
மாத்திர மறிகின்ற ஐந்திற்கும் வேறாயுயிருண்டு. (ங)
கனவுடலைவிட்டு நனவுடலிலே வருகையினாலே
கனவுடலுக்கு வேறாயுயிருண்டு. (ச)
நித்திரையிலும் பிராணவாயுத் தொழிற் பண்ண
வுஞ் சரீரத்திற்குப் புசிப்புந் தொழிலுமில்லாத
படியினாலே பிராண வாயுவுக்கு வேறாயுயிருண்டு. (ரு)
மறந்து மறந்து நினைக்கின்றபடியினாலே மறவாம
லிருக்கிறவனுக்கு வேறாயுயிருண்டு. (சா)
எல்லாத் தத்துவங்களுக்கும் வெவ்வேறு பெய
ரிருக்கிறபடியினாலே அந்தத் தத்துவங்களுக்கு
வேறாயுயிருண்டு. (எ)

ச - ல் அந்தக்கரணங்களுக்கு உயிர் உள்கூடினலன்றித் தொழிலில்லாத படியினலே அந்தக்கரணங் களுக்கு வேறு யுயிருண்டு. (க)
மலமறைப்பா லுயிர்க்கு அறிவில்லை. (உ)
உயிர் மூன்றவத்தைப்படும். (ங)

ரு - ல் உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும். (க)
அரனலே வுயிர்களெல்லா மறியும். (உ)

சு - ல் உயிரறிவினலே யறியப்பட்டவெல்லாம் அழியும். (க)
அப்பிரமேயமாக அறியப்பட்டவனே யரன். (உ)

எ - ல் அரன் பாசத்தை யனுபவியான். (க)
பாசம் அரனை யனுபவியாது. (உ)
உயிர் அவ்விரண்டினையும் அனுபவிக்கும். (ங)

அ - ல் உயிர்க்கு நல்லறிவு தவத்தினலே வரும். (க)
உயிர்க்குச் சற்குருவாய் வருவதுஅரனே. (உ)
உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினலே தன்னையும் அறியமாட்டாது. (ங)
உயிர் பஞ்சேந்திரியங்களிற் பற்றற்ருல் தன்னையும் அறியும். (ச)

கூ - ல் உயிர் அரன்ஞானத்தினலேயே அரனைக் காணும். (க)
உயிர் பாசத்திலே பற்றற்ருல்அரன் வெளிப்படுவன்.(உ)
பஞ்சாட்சர செபம் பண்ணினல் வாதனமலம்போம்.(ங)

க0 - ல் அரனுடன் ஒன்ருகி நில். (க)
உன்தொழிலெல்லாம் அரன்பணியென்றேகொள். (உ)

கக - ல் ஞானிக்கு வருகின்ற விடயங்களை அரனே யனு பவிப்பன். (க)
அரனைமறவாமல் அன்பிருந்தால் அவ் அரனிடத் திலே ஐக்கமாய்ப் போவன். (உ)

கஉ - ல் மும்மலங்களையுங் களைக. (க)
சிவஞானிகளுடனே கூடுக. (உ)
சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவ னென்றே தேறி வழிபடுக. (ங)
வழிபடாமையை யொழிக. (ச)

[இது திருவெண்ணெய் நல்லூர் பொல்லாப்பிள்ளையார் அருளிச் செய்ததாக ஆன்ருேர் வழக்கில் கூறப்படுகிறது.]

சிவமயம்

## சிவஞானபோதத்தைப்பற்றிப் பிற்காலத்தவரால் செய்யப்பட்ட

# செய்யுள்கள்

---

### நூற் சிறப்பு

வேதம் பசுஅதன்பால் மெய்ஆ கமம்நால்வர்
ஓதுந் தமிழ்அதனின் உள்ளூறுநெய்—போதமிகும்
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

### நூற் கருத்து

முதற்பதி அரனே ஐந்து முன்னைத்து விதமி ரண்டே
இதற்பினே யனுமா னத்தால் எண்ணிலா வுயிர்கள் மூன்றே
அதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே ஐந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்தல் எட்டே
சிறப்புடை உபாயந் தம்மால் தெளிவித்தல் உயிரை ஒன்பான்
அறுத்திடல் மலஙகள் பத்தே அழுந்தலே சிவத்தில் ஒன்றே
திறப்பணி கொளல் இரண்டே சிவஞான போதஞ் சித்தி.

### பதினான்கு சாத்திரம்

உந்தி களிறு உயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தஅருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் முற்று.

### சிறப்புப் பாயிரம்

மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படாஅ னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளில் கண்டுகண் ணிருள்தீர்த்து

அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவர்அடி புனைந்த தலைமை யோனே.

## மெய்கண்டதேவர் துதி

சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்கு
அறிவுநூல்களின் முடிபெலாம் அகப்படுத்து அவற்றின்
நெறியெலாம் விளக்கிய சிவஞான போதத்தைக்
குறிசெய்தீந் தமிழால்உரை குரவனைப் பணிவாம்.

மூன்று மலங்கெடுத்து மூலமாம் அப்பொருளுந்
தோன்ற அருளுந்தன் தொண்டர்க்கிங் —கான்றமைந்தோர்
கைகண்ட தன்றே கடன்ஞாலத் தெப்பொருட்கும்
மெய்கண்ட தேவன்விரைத் தாள்.

## நூன்மரபு

எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழ இயல்பாய்
நந்தி உரைத்தருளும் ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.

# பாட்டு முதற்குறிப்பகராதி